# உங்கள் விலையுயர்ந்த செல்வங்களின் பாதுகாப்பு இப்போது மிகச் சுலபம்

விலையுயர்ந்த அணிகலன்களையும் நகைகளையும் முக்கியமான தஸ்தாவேஜுகளையும் உங்கள் வீட்டிலே வைத்துக்கொள்வதென்றால் அவை இடையூறுகளுக்கு உள்ளாகலாம். களவு, தீ போன்ற பல்வேறு விபத்துக்களுக்கு உள்ளாக்கி உங்கள் செல்வங்களை வீணே இழந்துவிடும் ஆபத்துக்கு இடங்கொடுப்பானேன்? ஸ்டேட் பாங்கின் உள்ளூர்த் தலைமை

அலுவலகங்களும், கிளை அலுவலகங்களும் உங்கள் சொத்துக்களுக்குப் பத்திரமான பாதுகாப்புக்கான வசதிகளை மிதமான செலவில் செய்து கொடுக்கின்றன.

உள்ளூர்த் தலைமை அலுவலகங்களிலும் மற்றும் பற்பல முக்கிய கிளைகளிலும், பல்வேறு அளவுகளில், பந்தோபஸ்தான பீரோக்களை வாடகைக்குப் பெறும் வசதிகளும் உள்ளன.

ஸ்டேட் பாங்கில் உங்கள் மதிப்புமிக்க செல்வங்களை ஒப்படைப்பதன் மூலம், நீங்கள் அவற்றின் பாதுகாப்புப் பற்றிய கவலையே இல்லாமலிருக்கலாம்.

மேற்கொண்டு தேவைப்படும் விவரங்களுக்கு அண்மையிலுள்ள கிளை அலுவலக ஏஜென்டை அணுகுங்கள்.



## ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா

பாரதத்தின் தலைசிறந்த பாங்க்

SISTA'S-SB-65

**உங்கள் சட்டைகளுக்கு டினோபால் பளபளப்பு அளியுங்கள்**



அவைகளைக் கண்கூசும் மினுமினுப்புள்ள

**வெண்மை**யாக்குங்கள்!

டினோபால் பளபளப்பு

உங்கள் ஆடைகளுக்கு டினோபால் பளபளப்பை—ஒளிவீசும் அதிகப்படியான வெண்மையின் பளபளப்பைக் கொடுங்கள். டினோபால் மட்டுமே உங்கள் வெள்ளை ஆடைகளை கண்கூசும் வெண்மையடையச் செய்யும்!

மேலும்,

டினோபால் மிகச் சிக்கனமானது!

டினோபால் பளபளப்பை அடைய நேரமோ பணமோ வீணாவதில்லை. ஒரு கால் தேக்கரண்டி டினோபால் ஒரு வாளி நிறைந்த ஆடைகளை வெண்மையாக்கப் போதுமானது!

ஞாபகமிருக்கட்டும்—




டினோபால் என்ற வார்த்தை ஜே. ஆர். கெய்கி, எஸ். ஏ. பால், ஸ்விட்ஸர்லாந்து என்பவர்களுடைய ரெஜிஸ்டர்டு ட்ரேட் மார்க்காகும்.

தயாரிப்பாளர்கள் :
சுஹ்ரித் கெய்கீ லிமிடெட், வடிவாடி, பரோடா



சோல் டிஸ்ட்ரிப்யூட்டர்ஸ்:
சுஹ்ரித் கெய்கீ ட்ரேடிங் லிமிடெட், த. பெ. 965, பம்பாய்-1. பி. ஆர்.

TAM

SISTA'S-GG.175A

# கல்கி


## பொருளடக்கம்


சுபகிருது, மாசி 19உ. ★ மார்ச், 3உ. 1963



| | | | |
|---|---|---|---|
| தலைகீழ்ப் பாடம்! | (தலையங்கம்) | ... | 5 |
| எச்சரிக்கை தேவை | ... | ... | 6 |
| ஊர் வம்பு | (கார்ட்டூன்) | ... | 7 |
| என்ன சேதி? | ... | ... | 8 |
| கலைமகளுக்கு ஒரு கோயில் | ... | ... | 9 |
| போகிற போக்கில்... | சிட்டுக்குருவி | ... | 11 |
| அறிவுக்கனலே, அருட்புனலே! | ரா. கணபதி | ... | 15 |
| நீலச் சீசா | காளத்திநாதன் | ... | 22 |
| தென்மதுரைத் தெய்வத் திருப்பணி | நா. பா. | ... | 27 |
| நளினம் நிறைந்த நடனம் | எம். எஸ். சிவஸ்வாமி | ... | 31 |
| சந்திரனே சாட்சி | கௌசிகன்—விநு | ... | 34 |
| பொன் விலங்கு | மணிவண்ணன் | ... | 39 |
| சிறுவர் விருந்து | வாண்டுமாமா | ... | 50 |
| பத்தினிக்கோட்டம் | ஜெகசிற்பியன் | ... | 53 |
| கொடுத்து வைத்தவன் (வெள்ளித்திரை) | காந்தன் | ... | 61 |
| எலிபெண்டா மகேசமூர்த்தி | பாஸ்கரத் தொண்டைமான் | ... | 62 |
| இதய அமுதம் | பீதாம்பர் பட்டேல் | ... | 67 |
| கவிஞர் கமலநாதன் | பீஷ்மன் | ... | 75 |
| கனவுகள் இணைகின்றன. | ஸ்ரீவேணுகோபாலன் | ... | 80 |


''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 22 | தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 31

# தலைகீழ்ப் பாடம்!

காங்கிரஸ் மகாசபையின் ஆசிர்வாதத்தினால் தீர்க்காயுள் பெற்றுள்ள 'நெருக்கடி' காலத்தில் பல விநோதமான உத்தரவுகள் பிறப்பிக்கப்படுகின்றன. இந்த உத்தரவுகளில் ஒன்று நீண்ட நாட்களாக நாகரிக உலகில் நிலவி வரும் நீதி முறையைத் தலைகீழாக்கி யிருக்கிறது.

ஒருவர் குற்றம் செய்தார் என்பதை, அவ்வாறு குற்றம் சாட்டும் தரப்பினர் நிரூபணம் செய்தாலொழிய அவரைக் குற்றவாளியாகக் கருதவோ தண்டிக்கவோ கூடாது என்பதே பண்பட்ட உலகின் நீதிமுறை. இதை அடியோடு மாற்றியிருக்கிறது இன்றைய இந்திய அரசாங்கம். குற்றம் சாட்டப்பட்டவர் அந்தக் குற்றத்தைத் தாம் செய்யவில்லை என்று நிரூபித்தாலொழிய அவரைக் குற்றவாளியாகவே கருதித் தண்டிக்க இடமளிக்கும் ஒரு அநீதியான உத்தரவைப் பிறப்பித்திருக்கிறது சர்க்கார்.

தங்கம், வைரம் இவற்றாலான பொருட்களையும், கடிகாரங்களையும் வைத்திருக்கும் ஒருவர் அவற்றைக் கள்ளக் கடத்தல் மூலமாகப் பெற்றிருக்கிறார் என்று அதிகாரிகள் எண்ணினால் அவற்றைப் பறிமுதல் செய்யலாமாம்; இப்பொருட்கள் கள்ளத்தனமாகக் கடத்தப்பட்டவை என்று அதிகாரிகள் நிரூபிப்பதற்குப் பதிலாக அவற்றை வைத்திருப்பவர்கள், அவை கள்ளக்கடத்தல் பொருட்கள் அல்ல என்று நிரூபிக்க வேண்டுமாம்.

பொருட்களை ஜப்தி செய்யும் அதிகாரிகளுக்கு ஜப்தி செய்வதற்குக் காரணம் நிரூபிக்க வேண்டிய பொறுப்பு இல்லை; ஆனால் அதிகாரிகள் ஜப்தி செய்து விட்டவுடனே தாங்கள் குற்றம் செய்யவில்லை என்று நிரூபிக்கும் கடினமான பொறுப்பு மக்கள் மீது விழுகிறது. ஏழாண்டு சிறைவாசமும், அபராதமும் பெறும் துர்ப்பாக்கிய நிலையை அடைகிறார்கள். இது அநியாயமாகும்.

யாரார் சோதனை செய்யப்படுவர் என்பது தடுப்புப் போலீஸின் இச்சையைப் பொறுத்தது. அதிகாரி எந்தப் பொருளையேனும் கள்ளக் கடத்தல் என்று சந்தேகித்தால் போதும்; அந்தச் சந்தேகம் உடனே உண்மையாகிவிடும். மக்களுடைய மானமும், சுதந்திரமும் அதிகாரிகளின் தயவில் பிழைக்க வேண்டியதாகும்.

நிர்வாகத்துறையும் நீதித்துறையும் குழப்பமடையாமல் வெவ்வேறாகப் பிரிந்து நிற்க வேண்டும் என்பது முறை. அதிகாரிகள் எப்போதுமே நேர்மையாகவும், நீதியாகவும் நடப்பார்கள் என்று நீதிமன்றத்தில் கட்டாயமாக ஒப்புக்கொள்ள வேண்டும் என்கிற அடிப்படையின்மீது ஒரு சட்டம் பிறப்பிக்கப்பட்டால் அன்றே நிர்வாகத்துறை நீதித்துறை இவற்றிடையே உள்ள வரையறைகள் அழிந்து விடுகின்றன. குற்றவாளியல்ல என்று நிரூபணமானாலொழிய மக்கள் குற்றவாளிகளே என்பதாக மக்களை நடத்தும் இந்தச் சட்டம், அதிகாரிகளின் நேர்மையில் மட்டும் அதீதமான நம்பிக்கை காட்டுகிறது. இது பகுத்தறிவு, நீதித் தத்துவம் இரண்டுக்குமே விரோதமாகும். இதை எடுத்துக் காட்டித்தான் நாற்பதாண்டுகளுக்கு முன் காந்தி மகானின் தலைமையில் ரௌலத் சட்டத்தை எதிர்த்துக் காங்கிரஸ் ஆக்ரோசமாகக் கிளர்ச்சி செய்தது. இன்று சக்கரம் ஒரு சுற்றுச் சுற்றி, அதே தேசபிதாவின் புத்திரர்கள் எனப் பாத்தியதை கொண்டாடுவோரின் ஆட்சியில் மக்கள் அந்தப் பழைய தொல்லைகளையே மீண்டும் அநுபவித்து வருகிறார்கள்.

இன்றைக்குத் தங்கத்துக்கும், வைரத்துக்கும், கடிகாரத்துக்கும் வந்துள்ள உத்தரவு நாளைக்கே இன்னும் எந்தெந்தச் சொத்துக்களுக்கெல்லாம் பரவுமோ, சொல்ல முடியாது. அதற்கு இப்போதே சட்டம் செய்து கொண்டிருக்கிறார்கள்.

ஒரு துறையினருக்கு அநீதி செய்யப்பட்டாலும் மற்ற யாவரும் அவர்களுக்காகப் போராடினால்தான் இந்தப் போக்கு நிற்கும். தங்கத் தொழிலாளர் கிளர்ச்சியில் மற்றக் கடைக்காரர்கள் உதாசினமாக இருப்பதைப் பார்க்கும்போது இந்த உண்மையை வலியுறுத்த வேண்டி யிருக்கிறது.

# எச்சரிக்கை தேவை

யார்யாருடன் நட்புகொள்ளவேண்டும் என 'ஆய்ந்து ஆய்ந்து கேண்மை கொள்வது' ராஜநீதியில் மிகவும் முக்கியமாகும். இந்த சாஸ்திரத்தின் அரிச்சுவடியைக் கூடப் படிக்காதவர்களாக இருக்கிறார்கள் நம் ஆட்சியாளர்கள். சுயநல நோக்கங்களோடு கம்யூனிஸ்டு 'தோழர்'கள் பிரதமரைப் பேட்டி கண்டபோது பிரதமர் அமெரிக்க — ஆங்கிலேய வானப் பாதுகாப்புத் திட்டம் பற்றி மிகவும் அநுசிதமாகப் பேசி விட்டார். 'இந்தியாவில் தங்களுடைய ராணுவ தளங்களை அமைக்கும் . துர்நோக்கம் அந்த நாடுகளுக்குச் சிறிதும் கிடையாது; திடீரெனச் சீன ஆகாயப் படை மூலம் தாக்குதல் நிகழ்ந்தினால் நமக்குக் காப்பளிக்கவே அந்நாடுகள் முன்வந்துள்ளன. நாம் கேட்டுக் கொண்டதன் மீதே அவை சகாயமளிக்கின்றன' என்று பிரதமர் ஐயம் திரிபறக் கூறியிருக்க வேண்டும். ஆனால் அவர் அப்படிச் செய்ய வில்லை. நாம் இந்தப் பாதுகாப்பு உதவியைப் பெறுவதில் எச்சரிக்கையாக இருப்போம் என்று கூறி, உதவ வந்தவர்களின் மனத்தில் ''நமக்கேன் இந்த அபவாதம்? எக்கேடாகப் போனாலும் போகட்டும்'' என்கிற உதாசீனம் உண்டாக வழி வகுத்து விட்டார். மேல் நாட்டு உதவி நமக்குக் கிடைக்காமல் செய்ய வேண்டும் என்ற கம்யூனிஸ்ட்களின் நோக்கம் ஓர் அளவுக்கேனும் வெற்றி கண்டது.

அமெரிக்க ஸ்தானீகர் கால்பிரெய்த் அவர்களின் பேச்சைப் படித்தால் இவ்விஷயம் நன்கு புரியும். 'இந்தியா கோரியதால்தான் வானப் பாதுகாப்பு உதவி அளிக்க முன்வந்தோம். ராணுவ தளங்களை விற்பனை செய்யும் ஆர்வத்தில் அமெரிக்கா இல்லை' என்று சற்றுக் காரமாகவே கூறியிருக்கிறார்.

வலு வாய்ந்த எதிரியை முன்னிட்டு நிற்கும் போது, நமக்கு உதவி அளிப்பவர்கள் இப்படிப் பேச இடமளிக்கலாமா? 'இறுதியில் ஒரு உதவியும் செய்யாமலிருக்கப் போகிறவர்களின் உபதேசம் நன்மை தராது' என்ற உண்மையை அமெரிக்க ஸ்தானீகர் நமக்குச் சொல்லுமளவுக்கு நம் விவேகம் குன்றிப் போக விடலாமா? மேல் நாட்டு மக்களின் ஆதரவும், பாராளுமன்றங்களின் அநுமதியும் இருந்தால்தான் அந்த நாட்டு அரசாங்கங்கள் நமக்கு உதவும். இந்த ஆதரவைச் சிதைப்பதில் முனைந்துள்ள கம்யூனிஸ்ட்களிடம் நம் அரசாங்கம் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். உதவி செய்பவர்களைப் பற்றிச் சந்தேகப் படுவதைவிடத் 'தோழர்'களிடம் எச்சரிக்கையாக இருப்பதே முக்கியம்.









பூட்டோ சீனாவுக்கு விஜயம் செய்யலாம்.




# திட்ட மந்திரி புரிந்து கொள்வாரா?

'முதல் இரண்டு திட்டங்களும் கணிசமான பொருளாதார முன்னேற்றத்தை உண்டாக்கவில்லை' என்ற மகத்தான உண்மையைத் திட்ட மந்திரி ஸ்ரீ நந்தா அவர்கள் கண்டு பிடித்திருக்கிறார். 'என்ன ஆச்சரியம், பதவியிலுள்ளபோதே ஓர் உண்மையைத் தெரிந்து கொண்டு விட்டாரே' என்று நாம் அடைந்த வியப்பு, அவர் அடுத்துக் கூறிய வாக்கியங்களிலேயே பறந்து விட்டது. நாட்டின் பொருளாதாரநோயைப் புரிந்துகொண்ட மந்திரி அதற்கான மருந்தைப் புரிந்துகொள்ளவில்லை. 'ஆனபடியால் திட்டங்களை இன்னும் துடிப்போடு இயக்க வேண்டும்' என்கிறார் ஸ்ரீ நந்தா. திட்டங்கள் இருந்தும் முன்னேற்றமில்லையே என்று அவர் வருத்தப்படுகிறார். இந்தத் திட்டங்கள் இருப்பதால்தான் முன்னேற்றம் இல்லை என்பதை அவர் புரிந்து கொள்வாரா?

'அரசாங்க நிறுவனங்கள் நாட்டின் பொருளாதாரத்தில் பெரும் பங்கு கொள்ளும் வரை ஊழலும் விரயமும் இருக்கத்தான் செய்யும். அரசாங்கத் தொழில் நிறுவனங்கள் தங்கள் தவறைத் திருத்திக் கொள்ளாது; ஒத்துக் கொள்ளவும் செய்யாது; அதே தவறுகளை நீடித்துச் செய்யும். அரசாங்கம் திட்டமிடும்போது மக்களின் தேவைகள் கவனிக்கப்படுவதில்லை. தனியார் துறை சுதந்திரம் பெற்றிருக்கும்போதுதான் போட்டா போட்டி இருக்கிறது; எனவே அப்போது முதலாளிகளின் ஏகபோக்கியம் குறைகிறது. சர்க்காரானது தொழிலை மேல் பார்த்து நடத்தும்போதுதான் சிலருக்கு மட்டும் சலுகை காட்டுவதால் முதலாளித்துவ ஏகபோக்கியம் ஊட்டம் பெறுகிறது' என்றெல்லாம் உலகப் புகழ் பெற்ற சிகாகோ பேராசிரியர் ஃரீட்மன் அவர்கள் சமீபத்தில் பம்பாயில் கூறினார். இதைவிட அதிகமாக நாம் திட்ட மந்திரிக்கு எதுவும் கூறத் தேவையில்லை.

# என்ன சேதி?

## மந்திரியின் பாத யாத்திரை

மத்திய சர்க்கார் மந்திரி ஸ்ரீ லால் பகதூர் மக்களின் குறைகளைக் கண்டறிய அலகாபாதில் அவருடைய தொகுதியில் பாத யாத்திரையை மேற்கொண்டாராம். சில கிராம மக்கள் தங்கள் குறைகளைக் குறித்த மகஜர்களை மந்திரியிடம் கொடுத்த மாத்திரத்தில் தங்கள் குறைகளெல்லாம் தீர்ந்து விடும் இனி என்று மனத் திருப்தி யடைந்தார்கள் என்று செய்திகள் கூறுகின்றன. அந்த மக்களின் கனவு ஆண்டவன் அருளால் நனவாகட்டும்.

ஆனால் மக்களின் குறைகளைக் கண்டறிய மந்திரி பாத யாத்திரை மேற்கொள்ள வேண்டுமா என்ன? பொற்கொல்லர்களைப் பற்றி வரும் செய்திகளையும், விலைவாசி ஏற்றம் பற்றி புள்ளி விவரங்களையும், இவைபற்றி எதிர்க்கட்சியாளர்களின் உரைகளையும் பத்திரிகைகளையும் பார்த்தாலே நாட்டு நிலவரம் நன்ருகத் தெரியுமே. இவ்வளவு சிரமம் கூட வேண்டியதில்லை. அவர் மனச்சாட்சியே நாட்டு நிலவரத்தைக் கூறுமே!

பின், பாத யாத்திரை என்னும் பிரசார தந்திரம் எதற்கு? அடுத்து வரும் தேர்தலை உத்தேசித்துத்தானே?

## விநோதச் செயலின் விபரீத விளைவு

அரசாங்கத்தின் தங்கக் கட்டுப்பாட்டுச் சட்டத்தால் அவதியுறும் பொற்கொல்லர்களைக் குறித்து அநுதாபம் எழுகிறது; அதே சமயத்தில் அரசாங்கம் இப்பிரச்னைக்குத் தீர்வு காண்பதாக எண்ணிக் கொண்டு எடுக்கப் போகும் நடவடிக்கைகளை எண்ணிச் சிரிப்பும் வருகிறது. வீட்டுக்குத் தீ வைத்து விட்டுப் பிறகு அதனை அணைக்கக் கிணறு வெட்டுவது போல லட்சோப லட்சம் பொற்கொல்லர்களை வேலை இழக்கச் செய்து விட்டு இப்போது அவர்களுக்கு மாற்று வேலைகள் தேடிக்கொண்டிருக்கிறது சர்க்கார். நம்முடைய அரசினர் நகைக்கடை வைக்கப் போகிருர்களாம்!

பெர்மிட் — லைசென்ஸ் – கண்ட்ரோல் ஆட்சிப்படி தன் அதிகாரங்களைப் புகுத்த இன்னொரு துறையும் அரசாங்கத்துக்குக் கிடைத்து விட்டது! 'அரசாங்கத்தின் லைசென்ஸ் பெற்ற தயாரிப்பாளர்கள் ரிஸர்வ் பாங்கிலிருந்து மட்டரகப் பொன் வாங்க, அதனை லைசென்ஸ் பெற்ற பொற்கொல்லர்கள் அரசாங்கத்தின் தங்க உத்தியோகஸ்தர்கள் அநுமதித்த மோஸ்தர்களில் நகையாகச் செய்ய, லைசென்ஸ் பெற்ற சில்லறை வியாபாரிகள் விற்பனை செய்ய, இந்தப் பித்தளைத் தங்க ஆபரணங்களை வாங்க மாமியார்களும், மாற்றுப் பெண்களும் லைசென்சுடன் 'கியூ' வரிசையில் நிற்கப் போகும் எதிர்காலத்தைக் கற்பனை செய்து பார்க்கிறேன்' என்று ராஜாஜி எழுதி யிருக்கிருர். 'இடுக்கண் வருங்கால் நகுக' என்ற பொய்யாமொழிப்படி நாமும்தான் இதையெல்லாம் எண்ணிச் சிரித்து வைப்போமே!



## சுப்பராய அய்யர் மறைவு

தனவானுகவும், குணவானுகவும் விளங்கிய மயிலை வழக்கறிஞர் ஸ்ரீ எம். சுப்பராய அய்யரின் மறைவு கல்வித் துறையின் மகத்தான நஷ்டமாகும். வருமான வரிச் சட்டத்தில் நிபுணராக விளங்கிய அய்யரவர்கள் தமது வருமானத்தைக் கணக்குப் பாராமல் பல நல்ல காரியங்களுக்கு வழங்கியவர். மயிலையிலுள்ள விவேகாநந்தா கல்லூரியைத் தோற்றுவித்தவர்களுள் முக்கியமானவர் ஸ்ரீ சுப்பராய அய்யர். மாணவர்களிடையே கல்வி அறிவையும் ஒழுக்கத்தையும் ஒருங்கே வளர்த்து அக் கல்லூரி சிறப்பெய்தியதைக் கண்ட பின் மயிலையில் வித்யா மந்திர் பள்ளியையும் ஸ்தாபித்தார். குரோம்பேட்டை தொழில் நுணுக்க நிலையத்தின் காரியதரிசியாகவும் விளங்கினுர். இவை அனைத்தும் அவரது ஈகைக் குணத்தைப் புலப்படுத்தும் சின்னங்களாக விளங்கிவரும். அவர் நினைவுக்கு நம் அஞ்சலிகளை அளிக்கிறோம்.

# கலைமகளுக்கு ஒரு கோயில்

இரண்டாயிரத்து ஐந்நூறு அரிய நூல்கள் அடங்கிய ஆயிரத்து இருநூறு பனை ஓலைக் கையெழுத்துப் பிரதிகளைத் தமது வாழ்நாள் முழுவதும் மிகுந்த பாடுபட்டுத் தேடித் தொகுத்து வைத்தார் ஓர் ஒப்புயர்வற்ற தமிழ்ப் பேரறிஞர். அவர்தான் தமிழ்த் தாத்தா - சாமிநாதய்யர்.

தமிழ் மக்களுக்கு மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் அவர்கள் விட்டுப் போன இணையற்ற அந்தக் கலைச் செல்வத்தை அவரது குமாரர் ஸ்ரீ கல்யாண சுந்தரையர் ஸ்ரீமதி ருக்மிணி தேவியிடம் தந்ததுடன், தம் தந்தையார் மேற்கொண்ட இந்த நற்பணி தொடர்ந்து நடைபெற வேண்டுமென்று கேட்டுக் கொண்டார். ஸ்ரீ சாமிநாதய்யர் அவர்களின் நினைவாக ஓர் ஆராய்ச்சி நிலையமும் நூலகமும் 1943ம் வருஷம் ஜூலை மாதம் ஐந்தாம் தேதியன்று நிறுவப்பட்டது.

கடந்த இருபது வருஷங்களாக டாக்டர் சாமிநாதய்யர் நூல் நிலையம் மிகவும் விரிவடைந்திருப்பதோடு தமிழ் ஆராய்ச்சியில் அளப்பரிய சேவை புரிந்து வந்திருக்கிறது. ஸ்ரீ ஐயர் அவர்களுடைய தமிழ்ப் பணியைத் தொடர்ந்து நடத்தி, இன்று வரை பன்னிரண்டாயிரம் பொன்னேடுகளை விட மதிப்பு மிக்கதெனக் கருதப்படத் தக்க பன்னிரண்டாயிரம் பக்கங்களைக் கொண்ட இருபத்தெட்டு நூல் தொகுதிகளைத் திறம் படைத்த பேரறிஞர்களின் உதவியுடன் இந்நிலையம் வெளியிட்டுள்ளதென்பதே இந்நிலையத்தின் சிறப்பான பணிக்குச் சான்று பகரும்.



டாக்டர் உ. வே. சாமிநாதய்யர்

இந்த நூலகத்துக்கென்று தனி முதல் இல்லை. சந்தா செலுத்தும் உறுப்பினர்களும் இல்லை. மாகாண, மத்திய அரசியலார் அவ்வப்பொழுது அளிக்கும் உதவித் தொகைகளாலும், நண்பர்களின் நன்கொடைகளாலும், வெளியிடப்பெறும் நூல்களின் விற்பனைத் தொகைகளைக் கொண்டும் இந்நிலையம் இப்பொழுது நடைபெற்று வருகிறது.

சின்னஞ்சிறு ஆலயமானாலும் அதில் குடியிருக்கும் தெய்வத்தின் சக்தி காரணமாக அது பிரசித்தி பெறுவது போல் இந்நூலகமும் புகழ் பெற்றிருக்கிறது. இத்தகையதொரு கலைக் கோயில் இன்று இரண்டே அறைகள் கொண்டதாக, நானூற்று ஒன்பது சதுர அடி பரப்பளவினதாக இருக்கிறதென்று அறிந்தால் தமிழன்பர்கள் மிகவும் வருத்தப்படவே செய்வார்கள். கவின் மிகு மாளிகையில் இடம் பெற வேண்டிய அரிய பொக்கிஷங்களாயிற்றே அந்நூல்கள் என்று நைந்து உருகுவார்கள்.

சமய வரலாறுகளைத் தன்னகம் கொண்ட பாடல் பெற்ற ஸ்தலமாகிய திருவான்மியூரில் கலாக்ஷேத்ரா, பெஸண்டு உயர்நிலைப் பள்ளி, முதலியவற்றுக்கான கட்டடங்கள் நிறுவப்பட்டு வருகின்றன. அங்கே சாமிநாதஅய்யர் நூல் நிலையத்துக்கும் ஒரு கட்டடம் ஒன்றரை லட்சம் ரூபாயில் நிறுவத் திட்டம் வகுக்கப்பட்டுள்ளது. இதில் பாதித் தொகையை நிர்வாகக் குழுவினர் வசூல் செய்யக் கூடுமானால் மீதமுள்ளதை மத்திய அரசாங்கம் தந்துதவ முன் வந்துள்ளது. தமிழ் மொழியிலும் இலக்கியத்திலும் ஆர்வம் கொண்ட அனைவரும் இந்நூலகக் கட்டடத்துக்குத் தாராளமாக நன்கொடை தந்துமகாமகோபாத்யாய டாக்டர் ஐயர் அவர்களின் நினைவு என்றென்றும் தமிழகத்தில் நின்று நிலவுவதற்குத் துணை புரிய வேண்டுகிறோம். இதுவரை இறையுணர்ச்சி ஊட்டி வந்த திருவான்மியூர் இனிக் கலை உணர்ச்சி வளர்க்கும் திவ்ய க்ஷேத்திரமாகவும் சாமிநாதய்யர் நூல் நிலையத்தின் மூலம் தமிழ் வளர்ச்சிக்கான தலமாகவும் திகழப் போகிறது என்பது திண்ணம்.

நன்கொடைகள் அனுப்ப வேண்டிய விலாசம்: கௌரவ அமைச்சர், டாக்டர் சாமிநாதய்யர் நூலகம், அடையாறு. சென்னை-20

# உங்கள் கூந்தலின் உண்மை அழகை வெளிப்படுத்த

# கால்கேட்

## பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில் உபயோகியுங்கள்



உங்களுக்குப் பிடித்தமான கூந்தல் அலங்கரிப்பு எதுவாயினும், கால்கேட் காஸ்டர் ஹேர் ஆயிலைத் தவறாமல் தேய்த்து வருவது கூந்தல் அடர்த்தியாக அழகுடன் வளர்வதற்கு இன்றியமையாதது!

தினந்தோறும் கால்கேட் காஸ்டர் ஹேர் ஆயிலை மயிர்க்காலிலும், கேசத்திலும் தேய்த்துக் கொள்வது லக்ஷக்கணக்கான குடும்பங்களில் இப்பொழுது குளிக்குமுன் செய்யும் அவசியமான பழக்கமாகிவிட்டது. இவ் வெளிய பழக்கத்தினால் உங்கள் கூந்தல் அடர்த்தியாக நீண்டு பளபளப்புடன் வளருவதுடன், இளமைத் துடிப்பின் காந்தியோடும் அற்புத ஜ்வலிப்போடும் விளங்குவதைக்கண்டு நீங்கள் பரவசமடைவீர்கள்.

எல்லோரும் அதிசயிக்கும் வண்ணம் உங்கள் கூந்தலின் உண்மையழகை வெளிப்படுத்த கால்கேட் உதவுகிறது.






மகிழ்ச்சிதரும் நறுமணம்
உங்கள் குடும்பம் முழுவதும் அதை விரும்பும்!

# கால்கேட்

## பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில்

CMO-C-4.TAM.



# போகிற போக்கில்

## சிட்டுக்குருவி

அரிசி, கோதுமை இவை நீங்கலாக மற்ற உணவுப் பொருள்களுக்கு விலை நிர்ணயம் செய்ய வேண்டுமென விவசாய மந்திரி திரு எஸ். கே. பாட்டீல் பாராளு மன்றத்தில் பேசியிருக்கிறார். விவசாயப் பொருள்களின் விலை ஏறி வருவதைத் தடுக்க வேண்டும் என்பதுதான் அரசாங்கத்தின் நோக்கமாகும். இந்த நோக்கத்தின் அடிப்படையில்தான் இந்த உத்தரவு வரப்போகிறது. நிர்ணயம் செய்வது என்பது கண்ட்ரோல்தான் என்பதை விளக்க அவசியமில்லை. கண்ட்ரோல் வந்தால் லஞ்சமும் ஊழலும் உடன் வரும் என்பதை 1939லிருந்து 52வரை இதனை அநுபவித்த மக்கள் நன்கு அறிவார்கள். விளைவு ஒரு பக்கம் இருக்கட்டும். காரணத்தைக் கொஞ்சம் பார்ப்போம்.

விலை ஏறுகிறது என்று காரணம் காட்டி அதற்காகவே திரு பாட்டீல் எதிர் நடவடிக்கை எடுக்கிறார். இதே நேரத்தில் இவரது மந்திரி சபையைச் சேர்ந்த இன்னொரு சக மந்திரி என்ன காரியம் செய்கிறார்?

ரயில்வே மந்திரி திரு சுவர்ண் சிங் பார்சல், சரக்குக் கட்டணங்களை ஏற்றியிருக்கிறார். இதனால் உணவுப் பண்டங்கள் எல்லாம் விலை ஏறுமென்று வியாபார சமூகமே அலறுகிறது. திரு சிங் இந்த அலறலுக்கெல்லாம் பின் வாங்கி விடுவாரா என்ன? எனவே, விலை ஏறப் போகிறது என்பது உறுதியாகிறது.

அப்படியானால் திரு பாட்டீல் நோக்கத்தை திரு சுவர்ண் சிங் முறியடிக்கிறாரே என்று கேட்கலாம். ஏட்டிக்குப் போட்டியாக ஒரே கட்சியில் ஒரே மந்திரி சபையிலுள்ளவர்கள் நடக்கலாமா என்று வினவலாம். கேள்விகளெல்லாம் சரி. ஆனால் நடப்பது சோஷலிஸ கலி காலம். எனவே தாறுமாறாக நடப்பதுதான் முறை! இப்படிச் செய்யலாமா என்று கேட்கக் கூடாது. கேட்டால் 'பத்தாம் பசலி' என்பார்கள். கபர்தார்!

ஃ ஃ ஃ

14 காரட் தங்கத்தில் ரூ. 900க்குள் ஒரு கல்யாண 'செட்'டே தயாரித்து விடலாமென்று ஒரு நகைக் கடைக்காரர் கூறி, நகை தயாரித்துத் தொழில் மந்திரியிடம் கொடுத்து அந்த மந்திரியும் மகிழ்ச்சிப் பரவசப்பட்டார் என்று ஒரு செய்தி கூறுகிறது.

இதைப் பார்த்த ஒரு இரும்பு வியாபாரி, "900 ரூபாய் என்ன? 90 ரூபாயிலேயே இந்த மாதிரி செட் நான் தருகிறேன்" என்று கூறுகிறார். எப்படித் தருவீர்கள் என்று கேட்டால், கீழ் வரும் லிஸ்ட் தருகிறார் அவர்.

ரூர்கேலா இரும்பு: இரட்டைச் சர சங்கிலி. ஆறு பிடி.

பிலாய் இரும்பு: கழுத்தோடு ஒட்டிய நெக்லஸ். கண்ணாடி முத்துக்களைக் கம்பியில் கோத்த பதக்கம்.

ஜாம்ஷெட்பூர் இரும்பு: காதுகளுக்கு ஜிமிக்கி — தட்டை மூக்குத்திகள். வேலைப்பாடுடன் கூடிய திருகு பில்லை. 'சுத்தமான' திருமாங்கல்யம்.




'இந்த அளவுக்கு இரும்பு சப்ளை செய்ய முடியுமா? நாளொரு கோளாறும் பொழுதொரு சிக்கலுமாக அல்லவா பொதுத்துறையின் அற்புதத் தொழில் நிறுவனங்கள் செயல்படுகின்றன?' என்று கவலைப்படுகிறீர்களா? உங்கள் கவலையைப் போக்குகிறார், மலேயாவிலிருந்து சுத்த தகரம் இறக்குமதி செய்து விற்கும் ஒரு வியாபாரி. இவர் இரும்பு வியாபாரி கூறுகிற ரூ. 90 அதிகமென்றும், வெறும் 9 ரூபாய்க்கே இது மாதிரியான செட்டைத் தாம் செட்டாகத் தயாரித்து பிளாஸ்டிக் பெட்டியில் போட்டுத் தர முடியும் என்றும் கூறுகிறார்.

ஃ ஃ ஃ

நாலு பேரிடம் ஒரு காரியத்தைக் கேட்டுச் செய்வது நல்லதுதான். ஆனால் அந்த நாலு பேரிடம் உண்மையாகவே அவர்களின் கருத்தைக் கேட்கிறோமா, அல்லது நம்முடைய கருத்துக்கே அவர்களை ஆமாம் பூசாரி போடச் செய்து வெளி உலகத்தை ஏய்க்கிறோமா என்பதை மனச்சாட்சிக்கு விட வேண்டும்.

அவசர காலம் அவசியமா என்று டில்லி அமைச்சர்களுக்கு ஒரு சந்தேகம் தோன்றியது. உடனே நாலு பேரிடம் கேட்பதென முடிவு செய்தார்கள். அந்த நாலு பேர் நாட்டில் உள்ள பல கட்சிகளைச் சேர்ந்தவர்களோ, எந்தக் கட்சியி

னும் சேராத அறிஞர்களோ, ராணுவ தளபதிகளோ, தளவாட நிபுணர்களோ யுத்த அநுபவம் பெற்றவர்களோ அல்ல.



ஆட்சியாளர்கள் எந்தக் கட்சியைச் சேர்ந்தவர்களோ அக்கட்சியின் பாராளுமன்ற அங்கத்தினர்களைத்தான் தில்லிக்கு அழைத்து யோசனை கேட்டார்கள். இவர்கள் என்ன சொல்வார்கள்? கட்சி பலத்தைப் பெருக்கிக் கொள்ளவும் எதிர்க் கட்சிகளை ஒடுக்கவும் நல்ல வாய்ப்புள்ள இந்த அவசரகால சட்டத்தை வேண்டாம் என்பார்களா, என்ன?

'பூம் — பூம்' என்று மேளதாளத்தோடு வரும் கோயில் காளைகளைப் பார்த்திருக்கலாம். 'ஐயா, துணி கொடுப்பாரா?' என்று கேட்பான் மாட்டுக்காரன். மாடு 'ஆமாம்' என்று மேலும் கீழுமாகத் தலையாட்டும்.

''ஐயா, இல்லேன்னு சொல்ல மாட்டாரே?'' என்று அடுத்த கேள்வி கேட்பான் அவன்.

மாடு 'இல்லே' என்று கிழக்கும் மேற்குமாகத் தலையை ஆட்டும்.

ஆமாம் சொல்ல வேண்டிய இடத்தில் ஆமாம் போடவும், இல்லே சொல்ல வேண்டிய இடத்தில் இல்லே போடவும் மாடுகள் மட்டும்தானா இங்கிதம் அறிந்திருக்கும்? இதோ நம் அரசாங்கம் இந்த மாதிரி 'பதில்கள்' பெற, நிறைய ஆட்களை அற்புதமாகத் தயாரித்து வைத்திருக்கிறதே!

அவர்கள் ''இந்த அவசர காலம் நீடிக்கவே வேண்டும்'' என்று கூறி விட்டார்கள்!

ஃ ஃ ஃ

நஞ்சை, புஞ்சை நிலங்களுக்கு வரியையும் தண்ணீர்த் தீர்வையையும் இரட்டிப்பாக்க வெகு காலமாக வேலைகள் நடக்கின்றன. இந்த வேலைகளுக்கு மத்தியில் மத்திய திட்ட மந்திரி திரு குல்ஜாரிலால் நந்தா என்ன, மாநில மாமந்திரி திரு பக்தவத்சலம் என்ன, எல்லோருமாக ''உணவு உற்பத்தியைப் பெருக்குங்கள், பெருக்குங்கள், பெருக்கியே தீருங்கள்'' என்று தீவிரமாகப் பிரசாரம் செய்து வருகிறார்கள்.

பழைய வரிகள் இருந்தபோதே 'உழுதவன் கணக்குப் பார்த்தால் உழக்கும் மிஞ்சாது' என்றிருந்தது நிலைமை. இப்போது புது வரிகள் வந்ததன் பிறகு ''கணக்குப் பார்த்தால் காணி நிலமும் மிஞ்சாது'' என்று ஏற்படப் போகிறது. அதாவது உழுது விதைக்கிறவர்கள் வரிகள் கட்டச் சிறுகச் சிறுக நிலங்களை விற்றுத்தான் வரவேண்டும்.

இந்த நிலையில் உற்பத்தி எப்படிப் பெருகும் என்று ஊரே கேட்கிறது. ஒருவேளை தரிசு நிலங்களில் கோரைப் புல் பெருகுவதைக் கூறுகிறார்களோ என்னவோ? வேண்டுமானால் இந்தப் புல்லைக் கொண்டுபோய்ப் பின்னி, அமெரிக்காவிலிருந்தும், வெளி நாடுகளிலிருந்தும் வருகிறவர்களுக்கு விற்கலாம். அல்லது சர்க்கார் கலைப் பொருள் விற்பனை ஸ்தாபனங்களில் அதை வைத்து அழகு படுத்தலாம். ''பயிறு அழிப்போம் — பாய்கள் பின்னுவோம்'' என்று புதிய பாடல்களும் பாடலாம். கனவு கண்ட சுய தேவைப் பூர்த்தி பாய் விஷயத்திலாவது நிறைவேறும்! தத்தம் தொழிலை இழந்து பைத்தியம் பிடித்தவர்கள் பிராண்டுவதற்குப் பாய்களைச் சப்ளை செய்யலாம்!



ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்
ஸுந்தர காண்டம்










Glucovita
GLUCOSE-D






# அறிவுக் கனலே, அருட் புனலே!

எல்லோரையும் அடக்கியாண்டான் நரேன். இந்த நரேனை அடங்கி நடக்கும்படி செய்யத் தந்தை விசுவநாத தத்தர் மிகவும் நயமானதோர் உபாயத்தைக் கையாண்டார்.

ஒரு நாள் நரேன் புவனேசுவரியிடம் தாறுமாறாகப் பேசி விட்டான். அதற்காக விசுவநாத தத்தர் அவனை அடித்துப் புடைக்கவில்லை. நரேன் தன் நண்பர்களை வரவேற்கும் அறையின் கதவில் அமைதியாக எழுதினார்:

"நரேன் பாபு இன்று தன் அம்மாவிடம் இப்படியெல்லாம் பேசினார்: ......"

நரேன் புவனேசுவரியிடம் எந்த அசட்டு வார்த்தைகளைக் கூறினானோ, அவற்றையே எழுதிவிட்டிருந்தார் விசுவநாத தத்தர். அப்புறம் நரேன் அம்மாவிடம் ஒருபோதாவது அப்படிப் பேசியிருக்க வேண்டுமே!

விசுவநாத தத்தரின் உயரிய இயல்பு—நயத்தினால் ஜயம் காணும் இயல்பு—இன்னொரு சம்பவத்திலும் வெளியாகிறது.

"எனக்காக நீங்கள் என்ன அப்பா செய்திருக்கிறீர்கள்?" என்று ஒரு நாள் அவரைக் கேட்டு விட்டான் நரேன்.

சற்றும் பதற்றமடையவில்லை தத்தர். "கண்ணாடி எதிரில் போய் நின்று பார்த்துக் கொள்ளேன், தெரியும்" என்றார் சாவதானமாக.

ஒரு நாள் நரேனுக்கும் அவனுடைய நண்பர்களுக்கு மிடையே ஏதோ தகராறு உண்டாயிற்று. அடி, குத்து என்று அது முற்றி விட்டது. சண்டையிட்டபடியே சிறிது சிறிதாக நகர்ந்துகொண்டிருந்த நரேன் பூஜை மன்றத்தின் வராந்தாவிலிருந்து கீழே விழுந்து கல்லில் தலையை முட்டிக் கொண்டு விட்டான். செழிப்பாக வளர்ந்த செல்லக் குழந்தையின் தலையிலிருந்து 'குபு குபு' என்று குருதி பெருக்கெடுத்தது. இறுதி வரையில் இந்தக் காயத்தின் தழும்பு விவேகானந்தரின் வலது கண்ணுக்கு மேலே நெற்றியில் காணப்பட்டது.

குழந்தைப் பிராயத்தில் நரேனின் ரத்தம் அவ்வளவுக்கு வெளிப்பட்டதே நல்லதற்குத்தானாம்! "இந்த விபத்தால் நரேனின் சக்திகள் கட்டுப்படுத்தப் பெறாதிருந்தால் அவன் இந்த உலகத்தையே தகர்த்து நொறுக்கி யிருப்பான்" என்று தட்சிணேசுவரத்துத் தபஸ்வி பிற்காலத்தில் கூறினார். ஆன்மீகத்தில் தளர்ந்த உலகை நெருக்கி உருவாக்குமாறு நரேந்திரனை ஞானத் தீயில் உருவாக்கியவரும் அவரேதான்.

எட்டாவது வயதில் பண்டித ஈசுவர சந்திர வித்யாஸாகரரின் கல்வி நிலையத்தில் சேர்ந்தான் நரேன். அவனது நுண்ணறிவு அதி விரைவிலேயே பிரகாசிக்கத் தொடங்கியது. அதைவிட அதிகமாக, அவனது இயல்பான துடிப்பும் வெளிப்படலாயிற்று.

நரேனின் துறுதுறுப்பைச் சொல்லி முடியாது. ஒரு நாளுக்கு ஓர் ஆடை என்ற ரீதியில் துணிமணிகளைக்



கிழித்துக் கொண்டு விடுவான். அவனால் வகுப்பறையில் பொருந்தி உட்கார்ந்திருக்க முடியாது. மாறி மாறி அமர்வதும் எழுந்து நிற்பதுமாக இருப்பான். படிப்பைவிட வெளி விவகாரங்களில்தான் அவன் கவனம் அதிகமாகச் சென்றது. விளையாட்டு என்றால் அதிலும் அவனுடைய முரட்டுத்தனமே பிரதிபலித்தது. முரட்டுத்தனம் என்பதைவிடச் செயல் துடிப்பு என்றே அதனைக் குறிப்பிடலாம். உறங்கிக் கிடந்த நாட்டைத் தட்டி எழுப்பி உத்வேகம் அளிக்கப் போகிறவன் அல்லவா? அந்த வேகம்தான் பாலப் பருவத்திலிருந்தே இனம் தெரியாத பல விதங்களில் வெளியாகி வந்தது போலும்!

கோலிக் குண்டு, குதித்தோடுதல், குஸ்திச் சண்டை இவை சிறுவன் நரேனுக்கு மிகவும் பிரியமான விளையாட்டுக்கள். இடைவேளையில் வகுப்பு கலைந்ததோ இல்லையோ உணவை அள்ளிப் போட்டுக் கொண்டு விளையாட விரைவான் நரேந்திரன். பழைய விளையாட்டுக்களோடு தானாகவே பல புதுப் புது விளையாட்டுக்களையும் அவன் கண்டுபிடித்திருந்தான். கல்கத்தாவில் புதிதாக எரிவாயு (காஸ்) உற்பத்தியும், சோடா முதலிய பானங்களும் வந்திருந்த சமயம் அது. நரேனும் ஒரு விளையாட்டு காஸ் தொழிற்சாலையும், சோடாக் கம்பெனியும் வைத்து விட்டான். குட்டி குட்டி ரயில்களும், இயந்திரங்களும் செய்து அவற்றை இயக்கி மகிழ்ந்தான்.

நரேனின் முரட்டுத்தனத்தால் அவனைச் சக மாணவர்கள் 'குட்டிப் பிசாசு' என்று மறைமுகமாகப் பெயரிட்டு அழைத்தார்கள். 'சிவபெருமானின் பூதகணத்தில் ஒன்று' என்று புவனேசுவரி சூட்டிய பெயரே இப்படிப் பள்ளிப் பருவத்தில் பரிணமித்தது. 'குட்டிப் பிசாசு' என்று சொன்னாலும் அவன் ஒரு நல்ல 'பிசாசு' என்று உணர்ந்திருந்தனர் அந்த மாணவர்கள்.

எனவேதான், தங்களுக்குள் ஏதேனும் சண்டை சச்சரவு மூளும்போது இரண்டு கட்சி மாணவர்களும் நரேனிடம் மத்தியஸ்தத்துக்கு வருவார்கள். அவன் தீர்ப்பில் அவர்களுக்கு அவ்வளவு நம்பிக்கை. சில சமயம் நரேனுக்குக் குறும்புப் புத்தி வந்து விடும். சமரஸம் செய்து வைப்பதற்குப் பதிலாக அவனே சண்டையை இன்னும் கொஞ்சம் கிண்டிக் கிளறி விட்டு வேடிக்கை பார்ப்பான். எனினும் தகராறு வலுத்து அடி உதையில் இறங்கி விட்டால் சும்மா இருக்கமாட்டான். சண்டையை விலக்கி விட்டுத்தான் மறு காரியம் பார்ப்பான். இப்படி இரு சண்டை கோஷ்டிகளுக்கிடையே புகும் போது, தானே பலத்த அடிகளையும் வாங்கிக் கொள்வான். எனினும் சிறு வயசிலேயே குஸ்தி செய்யும் முறைகளை அறிந்திருந்தபடியால் தன்னை நன்கு காத்துக் கொள்ளவும் அவன் அறிந்திருந்தான்.

சண்டை சச்சரவுகளுடனும், விளையாட்டு விநோதங்களுடனும் மட்டும் நரேந்திரனின் பள்ளி வாழ்க்கை முடிந்து விடவில்லை. அன்னையின் மடியில் தான் கற்ற அமுதக் கதைகளாகிய ராமாயண மகாபாரதங்களைச் சக மாணவர்களுக்கு அழகுறக் கூறியும் ஆனந்தமூட்டுவான் நரேன். இதனால் வகுப்பறையையே நரேனுடைய விளையாட்டிடமாக்கி அவனுடன் மற்ற மாணவர்கள் கொட்டமடிப்பார்கள்.

ஒரு நாள் பாடம் நடக்கும் போது நரேனும் நண்பர்களும் தம் பாட்டில் கதை பேசிக் கொண்டிருப்பதை ஆசிரியர் கவனித்து விட்டார். பாடத்தை நிறுத்தி விட்டுப் பையன்களைக் கேள்வி கேட்கத் தொடங்கினார். அவர்கள் விடை கூற முடியாமல் விழித்தனர். நரேனின் முறையும் வந்தது. என்ன ஆச்சரியம்! அந்த வம்பர் தலைவன் ஆசிரியர் கேள்விகளுக்கெல்லாம் 'டக்' 'டக்' கென்று மறுமொழி கூறி விட்டான். ஒரே சமயத்தில் பல விஷயங்களைக் கிரகித்துக் கொள்ளும் அற்புதமான அவதான சக்திதான் அவனிடம் இருந்ததே!

நரேந்திரன் பாடத்தின் போது பேசியிருக்க முடியாது என்றே தீர்மானித்து விட்டார் ஆசிரியர். விடை கூறாத மற்றவர்களை மட்டுமே வகுப்பு முடியுமட்டும் நிற்குமாறு கூறினார். நரேனும் எழுந்திருந்து நின்றான். ''நீ நிற்க வேண்டாம், நரேன்!'' என்றார் ஆசிரியர். ''இல்லை, நான்தான் அதிகமாகப் பேசியது'' என்று கூறி அவனே பிடிவாதமாகத் தண்டனையை ஏற்றுக் கொண்டான்.

ஆங்கில போதனை ஆரம்பமாயிற்று: நரேனுக்கு முதலில் அந்த மொழி பிடிக்கவேயில்லை. 'அந்நியர்கள் பாஷை அல்லவா அது?' என்றான். நாடு முழுவதும் ஆங்கிலேய மோகம் பிடித்துத் திரிந்த அந்த நாளில் சிறுவன் நரேன் இவ்வாறு கேட்டது அதிசயத்திலும் அதிசயமாகும்.

ஆங்கிலம் கற்குமாறு ஆசிரியர்கள் வற்புறுத்தவே, நரேந்திரன் அழுது கொண்டே வீட்டுக்கு வந்து விட்டான். அவனுடைய பெற்றோர்களும் ஆசிரியர் கூறியதையேதான் சொன்னார்கள். ஒருவாறாக நிர்ப்பந்தத்தின் மீது ஆங்கிலம்

படிக்க ஆரம்பித்தான் நரேன். விரைவிலேயே அம்மொழியில் நல்ல தேர்ச்சியும் பெற்றான்.

அவன் மட்டும் ஆங்கிலம் பயின்றிராவிடில் வேதாந்தச் செல்வத்தை மேல்நாடுகளில் யார் பரப்பியிருக்க முடியும்? வேதாந்தம் செல்வம்தான். எனினும் செல்வமும் ஒவ்வொரு தேசத்தில் ஒவ்வொரு நாணயமாக இருக்கிறதேயன்றி, ஒரு நாட்டு நாணயம் இன்னொரு நாட்டில் செல்லுபடியாவதில்லையல்லவா? வேதாந்தச் சிந்தனைச் செல்வங்களை, மேல்நாட்டில் செல்லுபடியாகும் ஆங்கிலச் சொல் நாணயங்களிலேயே வழங்கப் பிறந்தவர் அன்றோ விவேகாநந்தர்? அதோடு ஸ்வாமிகள் காலத்திலேயே இந்தியாவின் நாலு பகுதிகளிலும் உள்ள அறிவாளிகளை இணைத்த பொதுமொழிப் பாலமாக ஆங்கிலம்தான் இருந்தது. ஆங்கிலேய மோகம் மிகுந்த இவர்களுக்குப் பாரதத்தின் தனித்தன்மையை எடுத்துக் கூறவும் ஆங்கில மொழியேதான் அவசியமாக இருந்தது. அன்பு மொழியை அறிந்து, தமக்கு எதுவுமே அந்நியம் கிடையாது என்ற உயர் நிலையைப் பிற்காலத்தில் எய்த விவேகாநந்தர் எத்தனையோ பல ஆங்கிலேயர்களையும், அமெரிக்கர்களையும் தமது அந்தியந்த சிஷ்யர்களாகப் பெற்றார்.



நரேனுக்கு அவனுடைய தந்தையிடமிருந்தும், தாயிடமிருந்தும் இரண்டு அருட் பிரசாதங்கள் கிடைத்தன.

"நான் எப்படியப்பா நடந்து கொள்ள வேண்டும்?" என்று விசுவநாத தத்தரை வினவினான் அருமைக் குமரன்.

"எதைக் கண்டுமே ஆச்சரியம் காட்டாதே!" என்று உத்தரம் பகர்ந்தார் தத்தர். அதை ஒரு மந்திரமாக ஏற்றான் குழந்தை.

ஆச்சரியத்தை வெளிக் காட்டாமல் இருக்க வேண்டுமெனில் அதற்கு முதற்படியாக ஒருவன் எதிலும் தானே ஆச்சரியம் கொள்ளாமல் இருக்க வேண்டும். விவேகாநந்தர் மட்டும் தம் வாழ்க்கையில் ஆச்சரியம் கொள்ளத் தொடங்கியிருந்தால் அப்புறம் வேறெதற்குமே அவருக்குப் பொழுது இருந்திராது. ஆச்சரியம் கொள்ளாமலிருப்பதென்பது மனசை அசையா நிலையில் வைப்பதேயாகும். கண்ணன் கூறிய 'ஸ்தித ப்ரக்ஞ'யைத்தான் வேறு வார்த்தைகளில் மகனுக்குக் கூறிவிட்டார் விசுவநாத தத்தர்.

ஒரு நாள் பள்ளியில் யாரோ செய்த தவற்றுக்காக நரேனுக்குத் தண்டனை கிடைத்தது. இது குறித்து அவன் அன்னையிடம் முறையிட்ட போது, அவன் வாழ்வு முழுவதற்கும் வழி காட்டும் மற்றொரு அருட் பிரசாதம் கிடைத்தது.

"என் கண்மணி, நீ தப்புச் செய்யவில்லை என்னும்போது வேறெதனையோ எண்ணி ஏன் வருந்துகிறாய்? நாம் சரியாக நடந்து விட்டால் பிறகு எது எப்படிப் போனால் என்ன? யாரோ பார்த்துப் பாராட்ட வேண்டும் என்பதற்காக மட்டும் உண்மையைப் பின்பற்றாதே கண்ணே! உண்மையாக இருக்கவேண்டும் என்பதொன்றுக்காகவே உண்மையைப் பின்பற்று! நரேந்திரா, நீ சத்தியத்தைக் கடைப்பிடிப்பதால் பல முறை அநீதிக்கும், இடர் மலிந்த விளைவுகளுக்கும் ஆளாக நேரிடலாம். அவற்றில் ஒன்றுதான் நீ இப்போது கண்டது. அதற்காக சத்தியத்தை விட்டுவிடாதே! பயனை நினைக்காமல் சத்தியத்தைப் பின்பற்று" என்றாள் மாது சிரோமணி புவனேசுவரி.

இந்த நிகழ்ச்சியை எண்ணும் போது, மகனைப் போருக்கு வீரத் திலகமிட்டனுப்புவது போல் இன்னல் சூழ்ந்த சத்தியப் பாதையில் நரேந்திரனைப் புவனேசுவரி தேவி ஊக்கி அனுப்பிவைப்பது போலத் தோன்றவில்லை?

"எனக்கு என்ன ஞானம் இருக்குமாயினும் அதற்காக நான் என் அன்னைக்கு நன்றிக் கடன் பட்டிருக்கிறேன்" என்று விவேகாநந்தர் பூரிப்புடன் கூறியதுண்டு.

ஈசுவர சந்திர வித்யாஸாகரர் கல்வி நிலையத்தைச் சேர்ந்த ஓர் ஆசிரியர் மிகவும் கோபிஷ்டர். எடுத்ததற்கெல்லாம் 'பூசை' கொடுப்பார் அவர். ஒரு நாள் ஏதோ தவறு செய்துவிட்ட ஒரு பைய

னைக் 'கண்மண் தெரியாமல்' அவர் பிய்த்து வாங்கி விட்டார். அந்தக் கொடுமையைக் காணவே நரேந்திரனுக்குச் சகிக்கவில்லை. அவனுடைய நரம்புகளெல்லாம் துடித்தன. அந்த நரம்புத் தளர்ச்சி தாளாமலே அவன் கண்களில் நீர் பொங்க, ''அஹஹ....'' என்று உரக்கச் சிரித்து விட்டான். உடனே ஆசிரியரின் திருஷ்டி நரேன் மீது விழுந்தது. இனிமேல் அவ்வாறு சிரிப்பதில்லை என்று அவன் மன்னிப்புக் கோர வேண்டும் என்றார் அவர். அவன் மறுத்து விட்டான். உடனே ஆசிரியரின் ஆத்திரம் அவ்வளவும் நரேன் மீது திரும்பிவிட்டது. தயா தாட்சண்யமின்றி அவன் காதைப் பிடித்துத் திருகலானார் அவர். நோன்பு நோற்றுப் பெற்ற அந்த அருமைப் பிள்ளையின் காதிலிருந்து ரத்தம் அரும்பலாயிற்று. அப்படியும் அவன் மன்னிப்புக் கேட்க மறுத்து விட்டான். இளம் குரல் ஆத்திரத்திலும் அழுகையிலும் உடைந்து தொனிக்க, ''என் காதை இன்னமும் திருகினீர்களோ, தெரியுமா சேதி? என்னை வதைக்க நீங்கள் யார்? ஜாக்ரதை, இனிமேல் என்கிட்டே வரக்கூடாது!'' என்று சத்தமிட்டான்.

அந்தச் சமயம் பார்த்து ஈசுவர சந்திர வித்யாஸாகரர் அறைக்குள் வந்தார். விம்மலுக்கும் விசும்பலுக்குமிடையே நடந்தது அவ்வளவையும் அவரிடம் திக்கித் திணறிக் கூறினான் நரேன். பிறகு தன் புத்தகங்களையெல்லாம் திரட்டி எடுத்துக் கொண்டான். ''நான் போகிறேன். இனிமேல் இங்கே வரவேமாட்டேன்'' என்று சொல்லிக் கொண்டு கிளம்பி விட்டான் அந்த மானஸ்தன்!

அன்பு நிறைந்த இதயத்தினராகிய வித்யாஸாகரர் குழந்தையைத் 'தாஜா' செய்து தம் அறைக்கு இட்டுச் சென்றார். அவனுக்கு நிறைய ஆறுதல்கள் சொல்லி வகுப்புக்குச் செல்ல வைத்தார்.

நரேனின் துணிவு காரணமாக அந்தப் பள்ளியின் ஒழுங்குக் கட்டுப்பாட்டு முறைகள் பரிசீலனை செய்யப்பட்டன. இது போன்ற அநாகரிக சம்பவம் இனி



நிகழக் கூடாது என்று தலைவர் உத்தரவிட்டார்.

இந்தச் சம்பவத்தைப் புவனேசுவரிதேவி அவ்வளவு எளிதாக மன்னித்து விடத் தயாராக இல்லை. 'தான் வீரேசுவரனுக்காக நோன்பிருந்து பெற்ற பிள்ளையின் காதையா இப்படி இழைப்பது?'

அந்தப் பாழாய்ப் போன பள்ளிக்குப் போகவே வேண்டாமென்று மகனிடம் கூறி விட்டாள் அவள். ஆனால் அவனோ ஏதும் நடக்காதது போல் மறு நாளே வழக்கம் போலப் பள்ளிக்குப் புறப்பட்டுவிட்டான்.

நரேந்திரநாதனின் காதுப் புண் நீண்ட நாட்களுக்கு ஆறவில்லை.

நரேந்திரனுடைய நண்பன் ஒருவன் வீட்டில் மலர் மரமொன்று உண்டு. அம்மரத்தின் மீதேறி மலர் கொய்வது நரேந்திரனது வழக்கம். மலருக்காக மட்டும் அவன் மரம் ஏறுவதில்லை. காலை மடித்துத் தொங்கவிட்டுத் தலைகீழாக ஒரு கிளையிலிருந்து இன்னொன்றுக்குத் தாவுவது அவனுக்கு மிகவும் பிடித்தமான விளையாட்டாகும். அங்கிருந்து குட்டிக்கரணம் போட்டபடியே நிலத்தில் குதிப்பான். நரேந்திரனுடன் நண்பர்களும் சேர்ந்து கொண்டு அமர்க்களப்படுத்துவார்கள்.

பாதி பார்வை போன அந்த வீட்டுப் பாட்டனாரால் இந்த 'ரோதனை'யைப் பொறுக்கவே முடியவில்லை. அந்த மரத்தில் பிரம்ம ராட்சதம் ஒன்று வசிப்பதாகவும், அது மரத்தின் மீதேறுவோரின் கழுத்தை நெரித்துக் கொன்று விடும் என்றும் அவர் பயமுறுத்திப் பார்த்தார். அவருடைய பயமுறுத்தலை மிகவும் பவ்யமாகக் கேட்டுக் கொண்டிருந்தான் நரேன். வீட்டுக்குள் சென்றுவிட்டார் கிழவனார். அவ்வளவுதான்! மீண்டும் மரத்தின் மீதேறத் தொடங்கி விட்டான் நரேன். அவனுடைய நண்பர்கள் தடுத்துப் பார்த்தனர். அவன் செவி சாய்க்கவில்லை. ''மடக் கழுதைகளடா நீங்கள்! மரத்தில் பிரம்ம ராட்சதம் இருக்கிறதென்றால் இவ்வளவு நாட்கள் அது என்ன பண்ணிற்றாம்? தாத்தா கதைப்படி என் கழுத்தை எத்தனையோ முறை அது நெரித்துப் போட்டிருக்க வேண்டுமே!'' என்றான் அந்த அஞ்சா நெஞ்சன். இந்தப் பாட்டனாரின் பேரன் தான் பிற்காலத்தில் ஸ்வாமி விரஜானந்தரானது.



'உண்மை எதுவெனத் தானே அநுபவபூர்வமாக நிர்ணயித்துக் கொள்ள வேண்டும். மூட நம்பிக்கைக்கு இடம் தரலாகாது' என்பது ஸ்வாமி விவேகாநந்தரின் அபிப்பிராயம்.

புதிது புதிதாக ஏதேனும் ஒரு துறையில் ஈடுபாடு கொள்வான் சிறுவன் நரேந்திரன். நாடகத்தில் அவனது உள்ளம் செல்லலாயிற்று. பல பையன்களைச் சேர்த்துக் கொண்டு வீட்டின் பூஜை மன்றத்தில் மேடையெல்லாம் அமர்க்களமாகப் போட்டு விட்டான். ஒரு சில நாடகங்களும்கூட அரங்கேற்றி விட்டான். வீடே 'அமெச்சூர் நாடகக் குழு'வாகி விட்டது. நரேனின் உறவினர்

ஒருவருக்கு இந்த ஆர்ப்பாட்டம் பொறுக்கவில்லை. அந்தப் புண்ணிய புருஷர் மேடையைத் தகர்த்து நரேனின் நாடகங்களுக்கு மங்களம் பாடி வைத்தார்.

இதனால் நரேன் சோர்ந்து போய்விடவில்லை. அவனுடைய ஊக்கமும் ஆக்கத் திறமும் தேகப் பயிற்சித் துறையில் திரும்பின. தன் வீட்டு முன்றிலிலேயே தேகப்பயிற்சி சாலை ஒன்றைத் தொடங்கி விட்டான். அவனுடைய தேகப் பயிற்சி சாலை அமோகமாக நடைபெற்றது —உறவினர் குழந்தை யொன்று கையை முறித்துக் கொள்ளும் வரையில். முன்பு நாடக மேடையை உடைத்தெறிந்த மகானுபாவர் தேகப் பயிற்சி சாலைக் கருவிகளையும் உடைத்தெறிந்து அதற்கு ஸமாப்தி செய்து வைத்தார்.



நரேந்திர நாதன் நவகோபால் மித்ரா என்பவரின் வியாயமண்டலத்தில் சேர்ந்தான். சிலம்பம், கம்பாட்டம், நீச்சல், மல் யுத்தம், படகு செலுத்துதல் முதலிய பல கலைகளையும் கற்றான். ஒரு முறை விளையாட்டுப் போட்டியில் முதல் பரிசைத் தட்டிக் கொண்டான். உடலைத் திண்மையாக வைத்துக் கொள்ளுவது உள்ளத் திண்மைக்கும் அவசியமாகும் என்பது விவேகானந்தரின் கருத்து. சிந்தனையை மழுங்கச் செய்யுமளவுக்கு உடல் பலவீனம் அடைந்த நிலையில் பகவத் கீதை படிப்பதை விடக் கால்பந்தாட்டமே ஒருவனைப் பரலோகத்துக்கருகே இட்டுச் செல்லும் என்று ஒரு சமயம் அவர் மொழிந்தார்.

இந்த விளையாட்டுக்களில் சளைத்த பொழுதில் படங்களை மாய விளக்கு (magic lantern) எனப்படும் லென்ஸ் ஒளி உதவி மூலம் திரையில் போட்டுக் காட்டிக் களிப்பான் நரேன்.

சிறுவன் நரேந்திரனுக்குச் சமைக்கக் கற்றுக்கொள்ள வேண்டும் என்றோர் ஆசை யெழுந்தது. சிநேகிதர்களையெல்லாம் பணமாகவும், தானியங்கள், காய்கறிகளாகவும் உதவச் செய்து செலவில் பெரும் பகுதியைத் தானே ஏற்று உணவு வகைகள் தயாரித்தான் நரேந்திர நாதன். அவன் தலைமையாளாக இருக்க மற்றவர்கள் உதவியாளராகப் பணி புரிந்து உணவு தயாரிப்பார்கள்; பின்னர் எல்லோரும் உண்டு மகிழுவர். நரேந்திரன் வெகு ருசியாகத்தான் சமைப்பான். எனினும் மிளகை அதிகமாகப் போட்டு காரத்தைத் தூக்கலாக்கிவிடுவான்.

'இந்தியாவுக்கு இப்போது சாத்வீகத்தைவிட ராஜஸம்தான் அதிகத் தேவை' என்று பறை யறைந்தவர் ஸ்வாமிஜி. காரமான உணவு ராஜஸமானது என்பது கீதை வாக்கு.

எல்லோருக்கும் பிரியனாகத் தீராத விளையாட்டுப் பிள்ளையாக வளர்ந்து வந்தான் நரேந்திரன். ஏழை — பணக்காரர், உயர் குலத்தவர் — இழி குலத்தவர், பெரியவர் — சிறியவர், ஆண் — பெண் என்ற எந்த வித்தியாசமுமின்றி எல்லார் மனைகளிலும் புகுந்து அவர்களின் மனங்களிலும் புகுந்தான் நரேன். அவனொத்த வயதினர் யாருக்கேனும் ஏதேனும் துயரம் நேர்ந்தால் ஆறுதல் அளிப்பதில் முன் நிற்பான். சிடு மூஞ்சிக் கிழங்களைக்கூட அவன் சிரிக்க வைத்த சம்பவங்கள் பல. பெண்டுகளுக்கு அந்த வாண்டு மீது ஒரே உயிர். 'அத்தை' என்றும், 'அக்கா' என்றும் அவரவர்கள் பிராயத்தைப் பார்த்துப் பக்குவமாக உறவு முறை கொண்டாடுவதில் அதி கெட்டிக்காரன் நரேந்திரன். தங்கள் வயசு என்ன என்பது பற்றிப் பெண்களுக்குத்தான் தனி அபிப்பிராயம் உண்டே! அதை யெல்லாம் அறிந்திருந்தான் கள்ளன்.

**ஆட்டங்கள் காட்டியும் பாட்டுக்கள் பாடியும்**
**ஆறுதல் செய்திடுவான்;**
**.....அன்பர் கூட்டத்திலே யிந்தக்**
**கண்ணனைப்போல் அன்பு**
**கொண்டவர் வேறுளரோ?**
**அம்மைக்கு நல்லவன், கண்டீர்! - மூளி**
**அத்தைக்கு நல்லவன், தந்தைக்கும்அஃதே**

என்றெல்லாம் கோபாலனைப் பற்றிப் பாரதியார் பாடியிருப்பது நரேந்திரனின் பாலப் பருவத்தை எண்ணும்போது நினைவில் வருகிறது. கிருஷ்ணனை நினைவூட்டும் இந்த நரேனை அர்ஜுனனாக்குவதற்காக இன்னொரு கிருஷ்ணர் காத்திருந்தார். அவர்தான் ராம கிருஷ்ணர். அர்ஜுனனை முன் வைத்து உபதேசம் செய்த கண்ணனைப் போல் நரேந்திரனை முன் வைத்துத் தம் அநுபூதியை மக்கட் குலத்துக்கு வழங்கவே அவர் காத்திருந்தார். (தொடரும்)


வனப்பூட்டும்,
மேனிக்கு
மென்மை தரும்,
சுகந்தம் வற்றாது
எழிலூட்டி
இன்பம் தரும்
"கோகுல்"
ஸாண்டால்
டாய்லெட் பவுடர்
GOKUL
SANTOL
TOILET POWDER
GOKUL
SANDAL
TOILET POWDER

# நீலச்சீசா

காளத்திநாதன்



அந்த மின்சாரக் கம்பத்தின் அருகில் வந்ததும் பையனின் கால்கள் தாமாக நின்று விட்டன. தலையில் சுமந்து வந்த மூட்டையைச் சர்வ ஜாக்கிரதையாகக் கீழே இறக்கிவிட்டுக் குதிகாலில் உட்கார்ந்தான்.

எதிரே கம்பீரமான கட்டிடத்துக்குள் மருந்து நெடியில் மூழ்கிக் கொண்டிருந்த தர்ம ஆஸ்பத்திரியைப் பார்த்துப் பையன் ஒரு கும்பிடு போட்டான். தனக்கும் தன் எஜமானனுக்கும் அதுதான் படியளக்கிறது என்பதை அவன் நன்றாக உணர்ந்திருந்தான். அதனால் அவன் அந்த ஆஸ்பத்திரியைக் கடவுளாக நினைத்தான்.

இளஞ்சூரியன் 'கபகப'வென்று வளர்ந்து கொண்டிருந்தான். அவன் கண்டுவிட்ட சுறுசுறுப்பில் ஜனங்கள் விறுவிறுப்பாக இயங்கிக் கொண்டிருந்தார்கள்.

பையன் மூட்டைக்குள் கையை விட்டு ஒவ்வொரு புட்டியாகக் கீழே எடுத்து வைத்தான். பத்து விநாடிகளில் அத்தனை புட்டிகளையும் அழகாக அடுக்கி விட்டான். சாக்கை உதறி நாலாக மடித்துக் கீழே போட்டு அதன் மீது ஜம்மென்று உட்கார்ந்து கொண்டான்.

பையனின் முகத்தில் ஒரு கம்பீரம் வந்து விட்டது. இனி அவன் இந்தப் பக்கத்தில் வரும் ஒவ்வொருவரையும் நிமிர்ந்து பார்த்துக் கொண்டிருப்பான். நோய் அழுத்தும் பாரத்துடன் வருகிறவர்கள் அவனை அணுகிப் புட்டிகளை விலைக்குக் கேட்பார்கள். அவன் என்ன விலையைச் சொன்னாலும் அவர்கள் குறைத்துக் கேட்டுக் கெஞ்சிக் கூத்தாடுவார்கள்.

பாவம், எல்லாரும் ஏழை ஜனங்கள். கால் நடையாக வருகிறவர்கள். ஆனால் இதற்காகப் பையன் ஒன்றும் இளகிவிடமாட்டான். ''விலை புட்டியிலே எழுதி ஒட்டியிருக்கிறது பார்! எல்லாம் கறார் ரேட். இஷ்டம் இருந்தால் வாங்கு. இல்லாவிட்டால் இடத்தைக் காலி பண்ணு. உன்னால் வியாபாரம் கெடுது'' என்று நிர்த்தாட்சண்யமாகப் பேசுவான்.. கருணை என்பதே அவனிடம் கிடையாது. அவன் யாருடைய தயவையாவது எதிர்பார்த்தால்தானே!

ஆயிற்று.... அவன் எஜமானன் வரும் நேரம். அவன் சரியாகக் காலை எட்டு மணிக்கு வருவான். பையன் எப்படிக் கடை பரப்பியிருக்கிறான் என்று நோட்டம் விட்டபடி, வாய்க்கு வந்த வசை மொழிகளை உதிர்த்துவிட்டுப் போவான். பையன் புட்டிகளை விற்ற பணத்தைக் கொடுத்துச் சரியாகக் கணக்கு ஒப்புவிக்க வேண்டும். எஜமானன் திருப்தியடைந்ததும் பையன் மிச்சமுள்ள புட்டிகளை மூட்டை கட்டி அவனுடைய வீட்டில் கொண்டு போய்ச் சேர்ப்பான். இதற்குள் எட்டு ஒன்பது மணியாகிவிடும்.

அப்பொழுதுதான் எஜமானனுக்கு ஒரு வழியாகக் கொஞ்சம் இரக்கம் சுரக்கும். மிகவும் பெரிய மனசு பண்ணி ஒரு நாலணாக் காசைத் தூக்கிப் பையனின் கையில் போடுவான். பையன் பாடு குஷிதான்.

அந்த நேரத்தில் எந்த ஓட்டலில் இட்டிலி சூடாகக் கிடைக்கும் என்று அவனுக்குத் தெரியும். ராம பவனுக்குள் நுழைந்து நாலு இட்டிலிகளுக்கு 'ஆர்டர்' கொடுத்துவிட்டுச் சாம்பாரிலும் சட்டினியிலும் மிதப்பான்!

வெய்யில் சுள்ளென்று பையனின் பரட்டைத்தலையில் உறைத்தது. சொறிந்துவிட்டுக் கொண்டான். அடி வயிறு சமுத்திரம்போல் இரைந்தது. அதைச் சொறிந்து அடக்கிவிட முடியுமா என்ன? பையன் பல்லைக் கடித்தபடியே பசியைப் பொறுத்துக் கொண்டான்.

ஏழை ஜனங்கள் மந்தை மந்தையாகத் தர்ம ஆஸ்பத்திரிக்கு வந்து கொண்டிருந்தனர். வறுமை அவர்களைப் பிய்த்துத் தின்றது போதாது என்று, அவர்களது அழுக்கேறிய ஆடைகளையும் ஒரு கை பார்த்திருந்தது.

எலும்பும் தோலுமாக இருந்த அவர்களைப் பார்க்கப் பையனுக்குச் சகிக்க வில்லை. எத்தனை விகாரமாக இருக்கிறார்கள்? இவர்களோடுதான் வியாபாரத்தை நடத்த வேண்டும் என்று விதி அவன் தலையில் கட்டியிருந்தது.

பையன் முகத்தைச் சுளித்துக் கொண்டான். அவனுக்கு மட்டும் ஆண்டவன் அதிகாரத்தைக் கொடுத்திருந்தால், அவன் ஆளுக்கொரு புட்டியை எடுத்துக் கொடுத்திருப்பான். இப்பொழுது அது முடியாது. விலையில் ஒரு நயா பைசாவைக் குறைக்கக்கூட அவனுக்கு அதிகாரம் கிடையாது. ஆகையினால் விடாப்பிடியாக இருந்தான்; முரட்டுத்தனமாக நடந்து கொண்டான்.



பையனுக்கு இப்பொழுது தலைவலி ஆரம்பமாகிவிட்டது. 'விண் விண்' என்று இரண்டாகப் பிளந்து விடுவது போல் தலை தெறித்தது. அவனால் தாங்க முடியவில்லை. 'அம்மம்மா....' என்று முனகினான். தலைவலிக்குக் காரணம் நேற்று முழுதும் பச்சைத் தண்ணீரைத் தவிர வேறு எதுவும் அருந்தாததுதான். 'ராமபவன்' நாலு இட்டிலிக்குக்கூட வழியில்லாமல் போய்விட்டது. இந்த ஏழை ஜனங்களுக்காக அவன் இவ்வளவு பச்சாத்தாபம் கொண்டு உருகுகிறானே, இவர்களுக்குக் கொஞ்சமாவது அவன் மீது கருணை இருக்கிறதா?

இவன் ஏமாந்த சோணகிரியென்று நேற்று எவனோ ஒரு செல்லாத கால் ரூபாயைத் தலையில் கட்டிவிட்டுப் போய்விட்டான். பையனின் எஜமானன் அந்த அளவுக்குப் பைத்தியக்காரன் இல்லை. கணக்கு ஒப்புவிக்கும் பொழுது கண்டுபிடித்து விட்டான்.

''ஐயோ! இது செல்லாத காசா? யாரோ துணிஞ்சு ஏமாத்தி யிருக்காங்க...'' என்று பையன் துடித்தான்.

''ஏமாத்திட்டாங்களா? அந்த அளவுக்கு நீ தூங்கிக்கினு வியாபாரம் பண்றியா? உனக்கு எப்படிப் புத்தி புகட்டறதுன்னு எனக்குத் தெரியும். உனக்கு இன்றைக்குக் கூலி இந்தச் செல்லாத கால் ரூபாய்தான்!'' என்று எஜமானன் கர்ஜித்தான்.

பையன் கதறி அழுது விட்டான். ''எஜமான்! இந்தத் தடவை மட்டும் மன்னிச்சிடுங்க. என் வயித்திலே மண்ணைப் போட்டுடாதீங்க...'' என்று கதறினான்.

ஆனால் எஜமானன் கிஞ்சித்தும் இரக்கம் காட்டவில்லை.

பையன் அந்தச் செல்லாத நாலணாக் காசோடு வெளியே வந்தான். 'ராம பவன்' கல்லாவில் உட்கார்ந்திருக்கும் முதலாளியும் அவனைப் போல் ஓர் இளிச்சவாயர்தான். அவரிடம் இந்த நாலணாவைக் கொடுத்து ஏமாற்றுவது சுலபம். அப்படிச் செய்ய மட்டும் பையனுக்கு மனசே வரவில்லை. குழம்பிக் குழம்பித் தள்ளாடி நடந்தான். பிறகு திடீரென்று ஒரு முடிவுக்கு வந்தவனைப் போல் குப்பைத் தொட்டியை நோக்கி அந்தக் கால் ரூபாயை விட்டெறிந்தான்.

''அப்பப்பா.... உயிர் போகுதே! நாக்கு ஒலர்ந்து தீயுதே!''

பையன் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான். பக்கத்தில் ஒரு குடுகுடு கிழவி முடங்கிக் கிடந்தாள். அவள்தான் முனகி யிருக்க வேண்டும். அவளுக்கு உடம்புக்கு என்னமோ? பாவம், அவனைப் போல் அவளும் ஓர் அநாதையாகத்தான் இருக்க வேண்டும். இல்லாவிட்டால் அப்படித் தெருவோரத்தில் யாரும் கவனிக்காமல் ஏன் கிடக்கப் போகிறாள்?

தலைவலி வேகமாக முற்றி விட்டது. பையனால் தாளவே முடியவில்லை. துடிதுடித்தான். இரண்டு கைகளாலும் தலையை அமுக்கி விட்டுக் கொண்டான். இது ஒன்றும் சாதாரணமாகப் போகிற வியாதி இல்லை. இங்கிலீஷ் டாக்டரின் மருந்துத் தண்ணீர் பட்டால்தான் போகும்.

மருந்து வாங்கப் புட்டிக்கு எங்கே போவது? பையனின் பார்வையில் அந்த நீலச் சீசா தெருடியது. ஒரு கணம் மெய் சிலிர்த்துப் போய் விட்டான்.

பையனுக்கு ஓர் அபார யோசனை தோன்றியது. எப்படியும் புட்டியை எடுத்துக்கொள்வது; அதற்கு ஒரு கதை கட்டி விடுவது என்று தீர்மானித்தான். 'எஜமானன் எமகாதகப் பேர்வழிதான். நம்பவே மாட்டான். ஏதோ புண்ணியம் இருந்தால் பிழைத்துப்போவோம். இல்லாவிட்டால் வருவதை அனுபவித்துக் கொள்வோம்' என்று பையன் துணிந்தே விட்டான்.

நீலச் சீசாவை எடுத்து இடுப்பில் இடுக்கிக் கொண்டு அதன் மேல் சொக்காயை இழுத்து விட்டுக் கொண்டான். வயிற்றை உற்றுப் பார்த்தான். அவ்வளவு சீக்கிரத்தில் கண்டு பிடித்துவிட முடியாது என்பதில் ஒரு திருப்தி.

சுற்று முற்றும் நிதானமாகப் பார்த்துக் கொண்டே பக்கத்துக் குப்பைத் தொட்டியைப் பையன் பரபரவென்று கிளறினான். நீலக் கண்ணாடிச் சில்லுகள் சிலவற்றைப் பொறுக்கிக் கொண்டு வந்தான். அவற்றைப் புட்டிகளுக்கு அருகில் போட்டு விட்டுப் பெருமூச்சு விட்டான்.

'காரியம் முக்கால்வாசி முடிந்து விட்டது. எப்படியோ தவறி அந்த நீலச் சீசா உடைந்து விட்டது என்று சாதிக்க வேண்டியது. எஜமான் நம்பினாலும் சரி, நம்பாவிட்டாலும் சரி. வருவதை அனுபவித்தே தீருவது....' பையனுக்குப் பாதித் தலைவலி கரைந்து விட்டதுபோல் ஓர் உணர்ச்சி.

''கெக்கெக்கே...'' என்ற கிழட்டுச் சிரிப்பொலி பையனின் கழுத்தைத் திருகித் திருப்பியது.

அப்படிச் சிரித்தவள் அந்த நோய்க்காரக் கிழவிதான். இப்பொழுது எப்படியோ மெல்ல எழுந்து உட்கார்ந்து விட்டிருந்தாள். ''புட்டி திருடறியா? உன் எஜமான் வரட்டும். முதுகுத் தோலை உறிக்கச் சொல்றேன்...''

இந்தப் படுபாவிக் கிழவி இவ்வளவு நேரம் பையன் செய்ததையெல்லாம் பார்த்துக் கொண்டுதான் இருந்தாளா? அவனுக்கு உதறல் எடுத்தது. ''ஏய், நோய் பிடிச்ச கெழவி! வீணா மல்லுக்கு வராதே. நான் பொல்லாதவனாக இருப்பேன். உன் வேலையைப் பார்த்துப் போ!'' என்று உறுமினான்.

கிழவி அவனை ரோஷத்துடன் முறைத்துப் பார்த்தாள். ''நீ நேத்து முளைச்ச பையன். உன் அதட்டலுக்கு இந்த அம்மாக் கண்ணு அசந்துவிட மாட்டாள். ஒழிஞ்சி போகுது. அந்தச் சீசாவை எங்கிட்டே கொடுத்திடு. நான் உன் எஜமான்கிட்டே சொல்ல மாட்டேன். நீ இதைத் திருடி வித்துத் தின்னத் தானே போறே? என் ஒடம்பைப் பாரு. நெருப்பாக் கொதிக்குது. மருந்துத் தண்ணி வாங்கிக் குடிக்கணும். என்னாலே காசு போட்டுப் புட்டி வாங்க முடியாது. நோய் போயிட்டதும் உனக்கே புட்டியை நான் திருப்பிக் கொடுத்திடறேன்.....''

கிழவியின் கண்ணீர் பையனின் மனசைக் கரைத்தது என்னவோ உண்மை. ஆனால் அவன் தலைவலிக்கு முன் அது எடுபடவில்லை. ''அம்மா!'' என்று பையன் அலறினான்.

''இதோ, பாரு கெழவி! சும்மா சும்மா நம்பகிட்டே வம்புக்கு வராதே. என் தலைவலி எனக்குத் தெரியும்!''

''அப்படின்னா, இந்தப் புட்டியை எனக்கு நீ கொடுக்க மாட்டியா?''

''மாட்டேன்! மாட்டேன்!''

கிழவியின் கண்கள் ஆத்திரத்தில் ஜொலித்தன. ''பாவிப் பயலே! மாட்டியா? இரு சொல்றேன். அதோ பாரு. உன் எஜமானன் வர்றான். மரியாதையா அந்தப் புட்டியை எங்கிட்டே கொடுத்திடு. இல்லாட்டி அவன்கிட்டே உண்மையைச் சொல்லிடுவேன்!''

நடுநடுங்கிப் போனான் பையன். திரும்பிப் பார்த்தான். எஜமானன் வேகமாக வந்து கொண்டிருந்தான். பையனின் உடம்பு வெட

வெடித்தது. பிறகு ஒரு வெறி அவனை ஆட்டி வைத்தது.

பக்கத்தில் கிடந்த ஒரு பெரிய கருங்கல்லை எடுத்து, ''ஜாக்கிரதை! ஏதாவது உளறுவியோ, இதை உன் தலையில் போட்டு விடுவேன்....'' என்று ஓங்கினான்.

குடல் வெளியே வந்து விட்டதைப் போல் கிழவி கதிகலங்கிப் போனாள். ''கொல்லுவியாடா பொறம்போக்கே?'' என்று கதறிக் கொண்டு கீழே சாய்ந்தாள்.

பையன் கல்லைத் தொலைவில் எறிந்துவிட்டுச் சுதாரித்துக் கொண்டான். சுறுசுறுப்புடன் எஜமானனை வரவேற்றான்.

''என்னடா திருட்டு முழி முழிச்சபடி தூங்கி விழறே?'' என்று தடபுடலாகக் கேட்டுக் கொண்டே வந்தான் எஜமானன். பையன் பேந்தப் பேந்த விழித்தான்.

நீலக் கண்ணாடிச் சில்லுகள் எஜமானனின் கண்களில் பட்டன. ''ஏன்டா, புட்டியை உடைச்சிட்டியா?'' என்று இரைந்தான்.

பையன் பேயறைந்தது மாதிரி நின்று கொண்டிருந்தான். ''சரி சரி, இன்னிக்கு ராத்திரியும் பட்டினி கிடக்கணும்னு உன் தலையிலே எழுதியிருந்தா அதுக்கு நான் என்ன செய்ய முடியும்?'' என்று அலுத்துக் கொண்டே சென்று விட்டான் எஜமானன்.

பையன் கண்களைத் துடைத்துக் கொண்டு உட்கார்ந்தான். எதிர்ப் பக்கத்தில் கிட்டான் போய்க் கொண்டிருப்பதைக் கண்டதும் அவனைக் கை தட்டிக் கூப்பிட்டான்.

கிட்டானும் இவனைப் போல் ஓர் அநாதைச் சிறுவன்தான். ஆனால் சோற்றுக்குத் தாளம் போடுகிறவன் இல்லை. அவன் சினிமாக் கொட்டகைகளில் முன்னதாக டிக்கெட்டை 'ரிஸர்வ்' செய்து விட்டு, பிந்தி வருகிறவர்களிடம் அதிக விலைக்கு விற்பான். அவனுடைய வியாபாரம் பையனுக்குப் பிடித்திருந்தது. ஆசையை வேறு கிளறி விட்டிருந்தது. ஆனால் அந்த வியாபாரத்துக்கு முதல் வேண்டும். பையனால் எந்தக் காலத்துக்கு அந்த முதலைச் சேர்க்க முடியுமோ?

''என்னடா?'' என்று கிட்டான் அருகில் வந்தான்.

''கொஞ்சம் கடையைப் பார்த்துக்கிறியா? நான் ஆஸ்பத்திரி உள்ளே போயி மருந்து வாங்கிக்கினு வந்துடறேன். தலைவலிடா.''

பையன் ஆஸ்பத்திரிக்குள் பறந்து சென்றான். 'க்யூ'வில் நின்று டாக்டரை அணுகுவதற்குள் அவனுக்குக் கால்கள் கடுத்தன.

டாக்டர் பையனைச் சோதித்துப் பார்த்தார். ''மாத்திரை எழுதித் தருகிறேன். சாப்பாட்டுக்குப் பிறகு மூன்று வேளை சாப்பிடு. தலைவலி பறந்து விடும்!''

''நான் புட்டிகூடக் கொண்டு வந்திருக்கேன், மருந்து வாங்கிப் போக!'' என்றான்.

டாக்டருக்குச் சிரிப்பு வந்தது. ''மருந்து அவசியமில்லை. மாத்திரையே போதும்!''

''மருந்து இல்லையா?'' — பையன் தன்னையறியாமல் வீறிட்டான்.

மாத்திரையை வாங்கிக் கொண்டதும் பையன் வேகமாக வெளியே வந்தான். 'ஐயோ பாவம்! நமக்கு மருந்து தருவார்கள் என்று கிழவிக்குப் புட்டியைக் கொடுக்காமல் அவள் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொண்டோமே? அவளுக்கு உடனே மருந்து தேவை. புட்டியை அவளுக்கே அவளுக்கென்று கொடுத்து விடுவோம்' என்று தீர்மானித்துக் கொண்டான்.

ஓட்டமாக ஓடி வந்து, ''பாட்டி! பாட்டி! இந்தா புட்டி!'' என்று கத்தினான்.

பாட்டி விசுக்கென்று எழுந்து கொள்ளவில்லை; புரண்டும் கொடுக்கவில்லை.

பையன் கிட்டானைப் பார்த்தான். கிட்டான் பதறி வந்து கிழவியைத் தொட்டுப் பார்த்தான். ''கிழவி செத்துப் பூட்டாடா. உடம்பு சில்லிட்டுப் போச்சுடா.''

ஆயிரம் கட்டடங்கள் அக்கு அக்காக இடிந்து பையனின் தலையில் விழுந்தன..... ''பாட்டி! உன்னை நான் சாகடிக்கல்லே. சும்மா பயமுறுத்தினேன். அவ்வளவுதான். விதிதான் உன்னைக் கொண்டு போயிடுச்சு. நான் இல்லே, பாட்டி! நான் இல்லே!'' என்று அந்த நீலச் சீசாவைத் தன் மொட்டைத் தலையில் ஓங்கி ஓங்கி அடித்துக் கொண்டான்.

நீலச் சீசா உடைந்து, பச்சை ரத்தத்தோடு சில்லுகள் கீழே சிதறுவதைக் கண்ட கிட்டான், பையனைத் தடுக்கக் கூடத் தோன்றாமல் திகைத்துப் போய் நின்றான்.


*The following particulars regarding the ownership of the 'KALKI', the Tamil weekly newspaper, are published, as called for by Rule 8 of the Registration of Newspapers (Central) Rules, 1956.*

FORM IV

1. *Place of Publication:* Madras
2. *Periodicity of its Publication:* Weekly
3. *Name of Printer & Publisher:* R. Ananthanarayanan

   *Nationality:* Indian

   *Address:* 20, Dr. Guruswami Mudaliar Road, Kilpauk, Madras-10
4. *Name of Editor:* T. Sadasivam

   *Nationality:* Indian

   *Address:* 20, Dr. Guruswami Mudaliar Road, Kilpauk, Madras-10
5. *Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one per cent of the total capital:*

   Sri T. Sadasivam, 20, Dr. Guruswami Mudaliar Road, Madras-10. Srimathi M. S. Subbulakshmi, 20, Dr. Guruswami Mudaliar Road, Madras-10. Sri R. Ananthanarayanan, 20, Dr. Guruswami Mudaliar Road, Madras-10. Sri K. Rajendran, 1, Fifth St., New Colony, Lake Area, Madras-34. Sri M. P. Kalyanasundaram, 3, Water Works Colony, Kilpauk, Madras-10. Sri V. Vaidyanathan, 3, Varadarajalu Naidu Road, Egmore, Madras-8. Sri K. R. Athmanathan, 20, Dr. Guruswami Mudaliar Road, Kilpauk, Madras-10.

1-3-63 *R. Ananthanarayanan*
*Publisher*



சாரம் கட்டி வேலை நடக்கிற கோபுரம் - பொற்றாமரைக் குளத்திலிருந்து தெரியும் தோற்றம்.

# தென் மதுரைத் தெய்வத் திருப்பணி

இருப்பணி உண்டியலில் அன்பர்கள் காணிக்கை செலுத்தும் காட்சி



ஆச்சரியப்படத்தக்க காரியங்களை ஆச்சரியப்படத் தக்கவர்களே செய்ய முடியும் என்பார்கள். ஒவ்வொரு நாளும் காலை பொழுது புலர்ந்ததிலிருந்து பொழுது சாயும் வரை கறை வேலை செய்யும் ஸ்தபதிகள் மட்டும் நாற்றிருபது பேர், சித்திர வேலை செய்யும் சைத்திரிகர்களோ எழுபது பேர், இவர்களுக்கு உதவி செய்ய நூற்றுக்கணக்கான உதவியாட்கள் — கோபுரத்துக்குச் சாரம் கட்டுவதற்கு மட்டும் சுமார் இருபத்தையாயிரம் சவுக்கு மரங்கள் — என்று இப்படிப் பெரிய அளவில் ஒரு மாபெரும் கோவில் திருப்பணி வேலை தமிழ் நாட்டில் இப்போது நடைபெற்றுக்கொண்டிருக்கிறது என்று சொன்னால், ஏதோ இராஜ இராஜ சோழன் காலத்துக் கோவிற் பணியைப் பற்றிக் கேள்விப்படுவது போல் உங்களுக்கு ஒரு பிரமிப்பு வருகிறதா இல்லையா? உண்மையில் இந்தத் திருப்பணி அப்படி ஒரு பிரமிப்பை உங்களுக்கு ஏற்படுத்த வில்லையானால்தான் ஆச்சரியப்பட வேண்டும். சிற்ப வேலைக்கு ஏராளமான ஸ்தபதிகள், ஏராளமான சைத்ரிகர்கள், பணியாட்கள் எல்லாரும் ஒன்று சேர்ந்து உழைக்கிற இந்த மாபெரும் திருப்பணி நடைபெறுகிற கோயிலும் பெரியது. நடக்கத் துணையாயிருக்கிற பக்த கோடிகளும் பெருந்தன்மையாளர்கள், நடக்கிற ஊரும் பெரியது.

மதுரை மீனாட்சி சுந்தரர் திருக் கோவில் பல வகையாலும் பெருமை பெற்றதென்பது இனி இந்தப் பிரம்மாண்டமான திருப்பணி முயற்சிகளாலும் நிரூபணமாகிறது. மதுரை மீனாட்சி சுந்தரர் திருக் கோயில் கோபுரங்களையும் சுற்று மதில்களையும் புதுமைப் பொலிவுற அமைப்பதற்கான இந்தத் திட்டம் 27—5—60 அன்று அற நிலையப் பாதுகாப்புத் துறை அமைச்சர் உயர்திரு பக்தவத்சலம் அவர்களால் முறைப்படி தொடங்கி வைக்கப்பெற்றுக் கடந்த இரண்டாண்டுகளாக நிகழ்ந்து கொண்டிருக்கின்றது. இரண்டாண்டுக் காலமாக அமைதியாகவும் அடக்கமாகவும் ஆக்க வேலைக்குரிய ஒழுங்குடனும் இந்தத் திருப்பணி படிப்படியாக வளர்ந்து கொண்டிருக்கிறது. மதுரை நகரத்தின் இதயம் போல் நடு மையமாக அமைந்திருக்கும் இந்தப் பெரிய கோயிலின் திருப்பணிக்கு இருபது இலட்சம் ரூபாய்க்கு மேல் செலவிட வேண்டியிருக்கும் என்று திருப்பணிக் குழுவினர் தீர்மானம் செய்தனர். பன்னிரண்டு கோபுரங்களையும் இரண்டு விமானங்களையும் செப்பனிட வேண்டும். அவற்றில் ஐந்து கோபுரங்கள் மதுரைக்கு வெளியே பல மைல் தொலைவுக்கு அப்பாலிருந்து பார்த்தாலும் தெரியக் கூடிய அளவுக்குப் பெரியவை. பன்னிரண்டு கோபுரங்களைத் தவிர நுணுக்கமான வேலைப்பாடு செய்ய வேண்டிய இரண்டு விமானங்களும் இதில் அடங்கியுள்ளன. சந்நிதிச் சுற்றுக்களில் உள்ள திருவிளையாடற் கதையைச் சித்திரிக்கும் கதைச் சிற்பங்களும், சித்திரங்களும் பிறவும் செப்பனிடப்பெற இருக்கின்றன. பொற்றாமரைக் குளம், அதனைச் சுற்றியுள்ள பகுதிகள், திருமதில்கள், எழு கடல் ஆகிய வற்றைத் திருத்தி யமைக்கும் எண்ணமும் திருப்பணிக் குழுவினருக்கு இருக்கிறது. திருப்



**சந்நிதி பிராகாரத்தில் திருவிளையாடற் காட்சிகளின் கதை வண்ணப் பூச்சு வேலை நடக்கிறது.**

பணியின் துணைக் காரியங்களாக மதுரை மீனாட்சி கோவில் நிர்வாகத்தைச் சேர்ந்த திருப்பரங்குன்றம் ஆலயத்தின் பிரதான கோபுரம், திருவாப்புடையார், பழைய சொக்கநாதர் கோவில்களின் பகுதிகள் ஆகியவற்றையும் செப்பனிட விருக்கிறார்கள். ஆகவே இந்த மிகப் பெரிய திருப்பணி மதுரை மீனாட்சி சுந்தரர் திருக் கோயில் ஒன்றை மட்டும் சார்ந்து நிற்காமல் அழகிய மதுரையின் அருள் கொழிக்கும் ஆலயங்கள் பலவற்றையும் இடங்கள் சிலவற்றையும் புதுமைப் பொலிவுற அமைக்கப் போகிறது என்பதை அறிந்து பெருமைப்படுகிறோம்! மனமாரப் போற்றி மகிழ்கிறோம்.

**கோவிலைக் காப்பவரான துவாரபாலகரைக் கலைஞர்கள் ஈனைய உலகுக்குக் காத்துத்தருகிற பணி நடக்கிறது.**



ஈடு இணையற்ற இந்தப் பெருமையை அடையும்போது நமக்கு ஒரு சந்தேகமும் ஏற்படுவ தியல்பு. இப்படி யெல்லாம் பெரிய காரியங்களை இழுத்துப் போட்டுக் கொண்டு முன் நின்று செயல்படுகிற தீரர் யார் என்பதுதான் அந்தச் சந்தேகம். சில ஆண்டுகளுக்கு முன் தமிழ் நாட்டின் தேசியத் திருவிழாவைப் போல் மதுரைத் தமிழ்ச் சங்கப் பொன் விழாவை நடத்தி இப்போது அந்தச் சங்கத்தில் ஒரு தனித் தமிழ்க் கல்லூரியும் நடைபெறச் செய்திருக்கிற தீரர் யாரோ அவர்தாம் இந்த அருட்பெரும் பணிக்கும் தலைவராயிருக்கிறார். மதுரையின் பெயரைச்சொன்னால் தமிழவேள் பி. டி. இராஜன் அவர்கள் பெயரும் சேர்ந்தே நினைவு வருவது இயற்கை. பிறர் முன்னின்று செயல்படத் தயங்கும் பெரிய காரியங்களாகத் தேர்ந்தெடுத்துச் செயலாற்றும் பண்பு உயர் திரு இராஜன் அவர்களுக்கு உண்டு. நகரத்தின் இடையே இன்னொரு பெரிய அருள் நகரத்தைப் போலவே பெரிதா யிருக்கும் மீனாட்சிசுந்தரர் கோவிலை அழகு கொழிக்கும் திருப்பணியால் புதுக்கி அமைப்பது எவ்வளவு பெரிய காரியம் என்றெண்ணும் போது அப்படி எண்ணுகிறவர்களுக்கு நிச்சயமாக மலைப்புத் தான் ஏற்படுகிறது.

சாதாரணமாக ஒரு பெரிய கோபுரத்துக்குச் சாரம் கட்டி முடிப்பதற்கான சவுக்கு மரங்களுக்கும் கொச்சக் கயிறுகளுக்குமே பல ஆயிரம் ரூபாய்கள் செலவிட வேண்டியிருக்கிறது. தெற்குக் கோபுரத்தில் சாரம் கட்டுவதற்கு மட்டும் சுமார் இலட்சம் இடங்களில் கயிறுகளால் பிணைக்க நேர்ந்ததாம். திருப்பணி அலுவலுக்கான தனி அலுவலர் குமரன் நாயரும் அலுவல்களை மேற்பார்வை யிடும் பொறியியல் வல்லுநரும் சதா சுறுசுறுப்பாகக் காணப்படுகிறார்கள். மதுரைக் கோவிலிலும் பிற பொது இடங்களிலும் வைக்கப்பட்டுள்ள திருப்பணி உண்டியல்கள் அன்பர்கள் இடும் காணிக்கைகளாலும் மெய்யான பக்தி ஆர்வங்களாலும் நாள்தோறும் நிரம்பிக்கொண்டிருக்கின்றன. தமிழ் நாட்டில் உள்ள மற்ற ஆலய தேவஸ்தானங்களும், பெரிய நிறுவனங்களும், அருள் நோக்கமுள்ள செல்வந்தர்களும் மீனாட்சியின் திருப்பணிக்கு மனமகிழ்ச்சியோடு பொருள் உதவி செய்திருக்கிறார்கள். இதுவரை செய்யாத சிலர் இனிமேல் செய்வதற்கு இருக்கிறார்கள்; அல்லது செய்ய எண்ணிக் கொண்டிருப்பார்கள்.

இன்னொரு நல்ல செய்தி. மீனாட்சியின் அருளுக்கு முதல் பாத்திரமாகும் பெருமை கல்கிப் பத்திரிகைக்குக் கிடைத்து விட்டது. ஆயிரத்துத் தொள்ளாயிரத்து அறுபதாம் ஆண்டு மே மாதம் இருபத்தேழாம் நாள் மதுரையில் இந்தத் திருப்பணிக்கான ஆரம்ப விழா நிகழ்ந்தபோது கல்கி அதிபரின் காணிக்கையே முதல் நன்கொடையாகவும் முதல் பெருந்தொகையாகவும் அளிக்கப்பட்டது. அதைத் தொடர்ந்து பல பெருஞ் செல்வரின் நன்கொடைகளும் தங்கள் பெயரை அறிவிக்காமல் அருள் பணிக்கு உண்டியல் மூலம் செலுத்திவிடுகிறவர்களின் கொடைகளுமாக இந்தப் பணியைச் செய்ய விரும்பி முன் வந்தவர்களின் நிறைந்த மனத்தைப் போலவே நிறைவாகச் சேர்ந்து வருகிறது. திருப்பணி வேலைகளை ஒழுங்காகவும், திட்டமுடனும் குறித்த காலம் தவறி விடாமலும் செய்து



சுதைவேலை, வண்ணப் பூச்சு எல்லாம் நிறைந்து புதுமைப் பொலிவோடு தோன்றும் தெற்குக் கோபுரம்

முடிப்பதைப் பற்றி ஆலோசிப்பதற்காகத் திருப்பணிக் குழுவினர் அவ்வப்போது சந்தித்து ஆலோசனை செய்கிறார்கள். மீனாட்சி சுந்தரர் திருக் கோயிலின் பழைமையான வரலாற்றை ஆராய்ந்து வெளியிடுவதற்கும் திருப்பணிக் குழு நல்ல ஏற்பாடுகளைத் தக்கவர் மூலம் செய்திருக்கிறது. 'திருப்பணியின் ஒவ்வொரு கட்டத்திலும் குழுவினர் நிபுணர்களையும், அனுபவம் வாய்ந்தவர்களையும் அணுகி, அவர்களுடைய கருத்துக்களையும் ஆலோசனைகளையும், உதவிகளையும் பெற்று வருகின்றனர்'— என்பது திருப்பணிக் குழுவினரின் பரந்த மனப்பான்மையைக் காட்டுகிறது. இந்தத் திருப்பணிக்கான மூலத்திட்டமும் மதிப்பீடும் நம்முடைய மாநிலத்தின் புகழ்பெற்ற பொறியியல் வல்லுநர்களால் தயாரிக்கப் பட்டிருப்பதைத் திருப்பணிக் குழுவின் அறிக்கைகள் கூறுகின்றன. தகுந்த ஆராய்ச்சி முடிவுகளையும் விவரங்களையும் நம் நாட்டுப் பழம் பொருள் ஆராய்ச்சிக் கழகத்தினர், பழம் பொருள் காட்சி சாலையினர், பழம் பொருள்களைப் பாதுகாப்பதில் நிபுணர்கள் ஆகியோரிடம் இத் திருப்பணிக் குழுவினர் அப்போதைக்கப்போது கேட்டு அறிந்து கொள்கின்றனர். கோபுரங்களுக்கும் சுதை வேலைகளுக்கும் சித்திரங்களுக்கும் பயன்படுத்தப் பெறுகிற வர்ணங்களைப் பற்றி ரூர்க்கியிலுள்ள நம் நாட்டுத் தேசிய ஆராய்ச்சிக் கூடத்தினரின் அபிப்பிராயத்தைக் கேட்டுத் தெரிந்து கொண்டிருக்கிறார்கள். சுதை வேலைகளை நன்றாகவும், செம்மையாகவும் செய்வதற்கேற்ற கைதேர்ந்த சிற்பிகள் மீனாட்சியின் அருளால் திருப்பணிக் குழுவினருக்குக் கிடைத்திருக்கிறார்கள். அது ஒரு பெரும் பாக்கியம். பழைய மரபு தெரிந்து புதிய காலத்துக்குப் பயன்படும் கலைத் திறனைத் தெய்விகத் தன்மையோடு ஆக்கியளிக்கும் கலைஞர்களைத் தேடி ஒன்று சேர்த்துத் தன் பணிக்கு அழைத்துக் கொண்டதும் மீனாட்சியன்னையின் திருவருள் திறமை என்றுதான் சொல்ல வேண்டும்.

மீனாட்சி சுந்தரர் கோவிலின் இந்த மாபெரும் திருப்பணி நிறைவேறிய பின்பு மதுரை நகரமே புதுமையழகும் அருளழகும் பொலிந்து தோன்றும். நம்மையெல்லாம் காத்து அருள் சுரக்கும் மீனாட்சித் தாயின் திருக் கோவிலையும் கம்பீரமான கோபுரங்களையும் பிற்காலத்தின் பல நூறு தலைமுறைகளைச் சேர்ந்தவர்கள் என்றும் புதியனவே போல் தோன்றும்படி கண்டு களிக்கத் திரு இராஜன் அவர்களும் திருப்பணிக் குழுவினரும் காத்தளிக்கிறார்கள். இந்த நல்ல காரியத்தில் இராஜன் அவர்களுடைய மனத்தை ஈடுபடுத்தி அவரை ஆட்கொண்டு அருள் சுரக்கும் ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசுவரர் திருவருளை எவ்வாறு அளவிட்டுரைக்க முடியும்?

எல்லாத் திருப்பணிகளும் நிறைவு பெற்றுக் கும்பாபிஷேகம் இந்த ஆண்டு ஜூன் 26-ந்தேதி வாக்கில் நேரலாம் என்று இப்போது திருப்பணிக் குழுவினர் அபிப்பிராயப் படுகின்றனர். கும்பாபிஷேகத்துக்குத் தமிழகத்தின் முக்கியமான எல்லாத் திருத்தலங்களிலிருந்தும் சுமார் 250 சிவாச்சாரியார்கள் அழைக்கப்பட வேண்டும் என்றும் திருப்பணிக் குழுவினர் கணக்கிட்டிருக்கிறார்கள். எழிலும் பெருமையும் மிக்க மதுரை நகரில் இந்த மாபெரும் கும்பாபிஷேகத் திருவிழா வரப்போகும் நாட்களைக் கற்பனை செய்து பார்க்கும்போதே நமக்கெல்லாம் பெரு மகிழ்ச்சி ஏற்படுகிறது. தமிழ் நாடே வியந்து போற்றும் மாபெரும் தெய்விகத் திருப்பணியாக இந்தத் திருப்பணியும், மாபெரும் திருவிழாவாக இதன் கும்பாபிஷேகமும் அமையுமென்று நாம் தாராளமாக எதிர்பார்க்கலாம். தமிழகத்தின் மிகப் பெரிய நகரமாகிய தமிழ் மதுரையில் அருள் வளர்க்கும் அங்கயற்கண்ணம்மையின் இந்த ஆலயத் திருப்பணி நிறைவேறும் நன்னாளும் கும்பாபிஷேக வைபவம் கோலாகலமாக நடைபெறும் நன்னாளும் அருகில் அண்மையில் வரவேண்டுமென்று அந்த நல்ல நாளை எதிர் பார்த்துப் பக்தியோடும் ஆர்வத்தோடும் காத்திருப்போமாக! —நா.பா.



# நளினம் நிறைந்த நடனம்



இந்திய நடன வகைகளையும், தென்னாட்டுக்குச் சிறப்பான பரத நாட்டியத்தையும் அடிக்கடி கண்டு களிக்கும் சென்னை ரசிகர்களுக்கு ஒவ்வொரு சமயம் மேல்நாட்டு நடன வகைகளையும் கண்டு மகிழும் வாய்ப்புக்களும் கிடைக்கின்றன. அத்தகைய அரிய வாய்ப்பு சமீபத்தில் ராஜா அண்ணாமலை மன்றத்தில் அமெரிக்காவைச் சேர்ந்த ராபர்ட் ஜாஃப்ரியின் ''பாலே'' நடனக் குழுவினர் மூன்று நிகழ்ச்சிகள் நடத்தியபோது கிடைத்தது. ஒவ்வொரு நாட்டுக்கும் அதனதன் பண்புக்கும் கலை உணர்ச்சிக்கும் ஏற்றவாறு நடன வகைகள் அமைந்திருக்கின்றன. பாமர ரஞ்சகமான நாடோடி நடனங்களும் உள்ளன. அதேபோல் உயர்ந்த வகை என்று போற்றப்படும் சம்பிரதாய மரபு நடனங்களும் உள்ளன. இந்த இரண்டாவது வகையைச் சேர்ந்தது ''பாலே'' நடனம். இதை நம்முடைய முறையில் சொல்ல வேண்டுமானால் நாட்டிய நாடகங்கள் எனலாம்.

இது முக்கியமாக, ஐரோப்பாவில்தான் பிறந்து, வளர்ந்து, உன்னத நிலையை அடைந்தது. சமீப காலத்தில்தான் அமெரிக்காவுக்குக் கடல் கடந்து சென்றது எனலாம். சுமார் 1450-ம் ஆண்டு வாக்கில் இத்தாலியில் பாலே நடனங்கள் ஆடப்பட்டு வந்தன. பிறகு பிரான்ஸ் தேசத்துக்குப் பரவி, அங்கே கலைக்குப் புகழ்பெற்ற அரசர் அவைகளிலும் பிரபுக்களது சபைகளிலும் இந்நடனம் உயர் அந்தஸ்தை அடைந்திருந்தது. ஆதியில் ஆண்கள் மட்டுமே இதில் பங்கு கொண்டனர். பின்னர் பெண்களும் கலந்து கொண்டு இந்நடனங்களுக்கு அமோகமான சிறப்பையும் அழகையும் ஊட்டினார்கள். பின்னணி இசை இருந்தாலும் நடிகர்களே சில சமயம் விருத்தங்கள் போன்ற சிறு பாடல்களையும் பாடுவதுண்டு. பிற்காலங்களில் இந்தப் பழக்கம் முற்றிலும் மறைந்து 'பாலே' முழுவதும் நடனமாகவேதான் ஆடப்பட்டு வருகிறது. பிரான்ஸ் நாட்டில் சிறப்பெய்தினாலும் ருஷ்ய தேசத்தில்தான் பாலே மகோன்னதத்தை அடைந்திருக்கிறது. மாரியா டாக்லியோனி போன்ற உயர் நடிகைகளும், பாலே நாட்டியங்களுக்கென்றே இசையும் நடனங்களும் அமைத்த சாகித்ய, இசை மேதைகளும், இவ்வகை நடனத்துக்குப் பெரும் புகழை உண்டுபண்ணினார்கள். இயற்கையிலேயே உணர்ச்சி மிகுந்த ருஷ்யக் கலைஞர்கள் ''பாலே'' நடனத்தைத் தங்கள் கலைச் சிகரமாகவே ஆக்கிவிட்டனர்.

''பாலே''யில் ஒருவர் செய்யும் தனி நடனமும் உண்டு; இருவர் சேர்ந்து செய்யும் ஜோடி நடனமும் உண்டு; பலர் சேர்ந்து ஆடும் கூட்டு நடனமும் உண்டு. கதை அம்சமே இல்லாது நடனம் மட்டும் உள்ள நிகழ்ச்சிகளும், அதே போலக் கதை அம்சம் கொண்டு நாடக பாணியில் ஆடப்படும் நிகழ்ச்சிகளும் உண்டு. கதைகள் பெரும்பாலும் சிக்கல் இல்லாது சுலபமாகப் புரியும்படியாகவே இருக்கும். சிருங்கார ரசம் உள்ள கதைகளும் சோக ரசம் மிகுந்த கதைகளும் பாலேயில் கையாளப் படுகின்றன.



நம்முடைய நாட்டியங்களில் முத்திரைகளும் முக பாவங்களும் முக்கிய இடம் பெற்றிருக்கின்றன. அபிநயங்களும் பாவங்களும் எழிலுடன் அமைவதுடன், பூரண அர்த்த பாவத்துடன் வெளிப்படுகின்றன. ஆனால் மேல் நாட்டு நடனங்களில் அபிநயம் குறைவு; இல்லையென்றே சொல்லலாம். விரல் முத்திரைகளையும், ஹஸ்த வித்நியாசங்களையும் உபயோகப்படுத்துவதில்லை. இதை ஈடு செய்வதுபோல் அமைந்துள்ளவை இவ்வகை நடனங்களில் காணப்படும் கால்சாரிகள். அடவுகள் என்று இவற்றைச் சொல்லுவது பொருந்தாது. அதனால் கால்சாரிகள் என்றே விவரிக்க வேண்டும். பாய்தல், வளைதல், சுற்றுதல், இவை பாலே நடனங்களில் அதிகமாகத் தென்படும். ஒவ்வொன்றிலும் பலவித வேறுபாடுகளும், கோவைகளும், பின்னல்களும் உண்டு. துரித கால ஆட்டங்களிலும், தனியாடல்களிலும், கூட்டாடல்களிலும் கால்சாரிகளின் சிறப்பு அற்புதமாக இருக்கும். கட்டை விரல் நுனியில் நின்றே நடனமாடும் விரல் நடனமும், வேகமாகச் சுற்றும் சுழல் நடனமும் காற்றில் தவழ்வதுபோன்ற தோற்றத்தை உண்டுபண்ணும்.

பரத நாட்டியத்தில் அடவு முத்திரைகள், அபிநயங்கள் எப்படி நீண்ட காலம் மிகுந்த பிரயாசையுடன் பயில வேண்டுமோ அப்படித்தான் பாலே நடனங்களிலும் தலைசிறந்த ஆட்டக்காரர்கள் என்று புகழ் எய்திய நடன மணிகள் எல்லாருமே சிறு வயதிலிருந்தே இதைப் பயில ஆரம்பித்து ஏழு எட்டு ஆண்டு

களுக்குப் பின்னர்தான் தேர்ச்சி பெற்ற கலைஞர்களாக மேடையில் தோன்றுவார்கள்.

நடனத்துக்கேற்ற பின்னணிக் காட்சி ஜோடனையும், ஒளி அமைப்புகளும், பின்னணி இசையும் ஒன்றாகச் சேர்ந்து, நாட்டிய நாடகத்துக்குச் சிறப்பளிக்கும். பாலேயின் சிறப்பே இவ்விதக் கூட்டு முயற்சியினால் தோற்றுவிக்கப்படும் அழகு என்று சொல்ல வேண்டும். தனி நடிகை சிலை போல் நிற்பது, தாண்டவ நிருத்ய கரணம் முதலிய 'போஸ்கள்' நமது முறையில் சிறப்பாக அமைவது போல், மேல் நாட்டு பாலே நடனங்களில் ''கூட்டுத் தோற்றம்'' அற்புதமாக இருக்கும். முழு நாடகத்துக்குப் பதிலாக, முக்கியமான சில காட்சிகளை மட்டும் ''டாப்ளோ'' காட்சிகள் போல் சிற்சில சமயங்களில் நமது மேடைகளில் காணலாம். அவை போன்ற காட்சிகள் பாலே நடனங்களில் முத்தாய்ப்பு வைத்தது போல் காணப்படும். காண்பதற்கு மிக ரம்மியமாக இவை அமைந்திருக்கும்.

மிகுந்த கலை நுணுக்கங்களுடன் அமைந்த பாலே நடனங்களில் உயர் அம்சங்களைச் சென்னை வந்த அமெரிக்கக் குழுவினரின் நிகழ்ச்சிகளில் காண முடிந்தது. இக்குழுவின் தலைவர் ராபர்ட் ஜாஃப்ரி முப்பத்தொரு வயது இளைஞர். கலைப்பித்து கொண்டவர். நடன வல்லுநர். தமது கோஷ்டியுடன் அமெரிக்காவில் பல ஊர்களுக்குச் சென்று 'டூரிங் சினிமா' நடத்துவது போல் தமது நடனங்களை நிகழ்த்தினாராம். இவருடைய குழுவில் கலையின் உயர்வைக் கண்ட பலர் ஆதரவு தந்து, ஊக்கினராம். இதன் விளைவாக இவர் பதினொன்று நாட்டிய நாடகங்களைத் தயாரித்துள்ளார். சில சம்பிரதாய பாணியைப் பின்பற்றியவை. சில இவருடைய சொந்தக் கற்பனை. எல்லாமே கலைப் பண்புடனும் மிகுந்த எழிலுடனும் அமைந்துள்ளன.

இவருடைய குழுவினர் அளித்த நிகழ்ச்சிகளில் முக்கியமாகக் குறிப்பிட வேண்டிய உயர் அம்சங்கள் சில. தரக்குறைவு என்றோ, ரசக்குறைவு என்றோ, ஆபாசம் என்றோ வெறுக்கக் கூடிய அம்சம் எதுவுமே இதில் இல்லை. காட்சி அமைப்பு எளிமையாக இருந்ததுடன் பொருத்தமாகவும், கதையின் போக்குக்கு முற்றிலும் ஏற்றதாக அமைக்கப்பட்டிருந்தது. பின்னணி இசை முதல் தரம் என்றே சொல்ல வேண்டும்.

மேனாட்டு நடன முறையைப் பூரணமாகக் கண்டு ரசிக்கவும் சென்னையில் ரசிகர்களுக்குக் குறைவு இல்லை என்பது மூன்று நாட்கள் நடந்த நிகழ்ச்சிகளிலிருந்து நன்கு தெரிந்தது.

— எம். எஸ். சிவஸ்வாமி

---

ஆதிசங்கரரின் சரிதத்தைப் பக்திச் சுவை ததும்பச் சித்திரிக்கும் 'ஜய ஜய சங்கர' நூலின் வெளியீட்டு விழா பிப்ரவரி 13-ந் தேதி மயிலாப்பூர் சம்ஸ்கிருதக் கல்லூரியில் தர்மரக்ஷாமணி ஸ்ரீ கே. பாலசுப்பிரமணிய அய்யரவர்கள் தலைமையில் அதிவிமரிசையாக நடந்தேறியது. 'கல்கி' பத்திரிகையில் தொடர் கட்டுரையாக வந்து பல்லாயிரக்கணக்கான வாசகர்களின் உள்ளங் கவர்ந்த 'ஜய ஜய சங்கர' சரிதத்தைக் 'கலைமகள்' காரியாலய அதிபர் ஸ்ரீ என். ராமரத்தினம் அழகிய புத்தகமாக வழங்கியிருக்கிறார். இந்நூலைச் செங்காலிபுரம் பிரும்மஸ்ரீ அனந்தராம தீக்ஷிதர் வெளியிட்டு, நூலாசிரியர் ஸ்ரீ ரா. கணபதியின் திறமையையும் நூலின் சிறப்பையும் எடுத்துரைத்தார். நூல் முதல் பதிப்பின் சன்மானத் தொகையாகிய ரூ. 1500-ஐ நூலாசிரியர் வேதசம்ரக்ஷண நிதிக்கு அளித்தது அனைவரது உள்ளத்தையும் கவர்ந்தது. ராஜாஜி அவர்கள் இவ்விழாவுக்கு விஜயம்செய்து கல்கி அதிபர் ஸ்ரீ சதாசிவம் அவர்கள் வழங்கிய பொன்னாடையைக் கல்கி உதவி ஆசிரியர் ஸ்ரீ கணபதி அவர்களுக்குப் போர்த்தி ஆசீர்வதித்தார். விழாவில் கலைமகள் ஆசிரியர் ஸ்ரீ கி. வா. ஜகந்நாதன் அவர்கள் அனைவரையும் வரவேற்றுப் பேசியதுடன் இளைஞர் கணபதியின் திறமையை வியந்து போற்றினர். ஸ்ரீ டி. எம். பி. மகாதேவன் அவர்கள் பாராட்டுரை வழங்கினர்.









# காலம் பறந்து செல்கிறது...

**...நீங்கள் சிந்தனை செய்யுமுன்
அவர்கள் கல்லூரியில் சேரத்
தயாராயிருப்பார்கள்.**



உங்கள் குழந்தைகளின் மேற்
டிப்புச் செலவுக்கு நீங்கள்
ஏதாவது ஏற்பாடு
செய்திருக்கிறீர்களா ?

திட்டமிட்டு சேமிக்க
வேண்டும். உங்கள் வருமா
னத்தை செலவழிக்கும்
முன்னரே அதிலிருந்து
ஒரு பகுதியைச் சேமிப்
புக்கென்றே தவறாமல்
ஒதுக்கவேண்டும்.
இல்லாவிடில் சேமிப்
பதற்கு எதுவும்
மிஞ்சாமல் போக
நேரிடும்.

## தி பாங்க் ஆப் இந்தியா லிமிடெட்

. D. கன்ஸாரா, ஜெனரல் மானேஜர்

B/C/132 TAM



ரிஷி தன் பெற்றோரிடம் விவாதித்துக் கொண்டிருந்த அதே நேரத்தில் அதே விஷயத்தைப் பற்றி ஜெயராமன்...

# சந்திரனே சாட்சி

கதை: கௌசிகன் — 11 — சித்திரம்: வினு
















பேசுவே ஒன்றுமில்லே மாமா! பொண்ணு ரெடி! நீங்க முன்னே இருந்து கல்யாணத்தை நடத்தி வைக்க வேண்டியது தான்!


ஜெயராமன் நிர்மலாவைப் பற்றிக் கூறிய போது தயாளன் திகைத்தான்.
தம்பி, நம்ம குடும்பத்துக்கு ஏற்ற இடமாயிருக்கு நல்லதுன்னு படுது எனக்கு.
ஒன்றும் பேசப்படாது! என் மனைவிதான் உங்களுக்குத் தெரியுமே. முடிந்து போன விஷயமிது!


இதே சமயத்தில் நிர்மலின் வீட்டில்...
அம்மா குழந்தே! இத்தனே செல்லமாக வளர்த்த நாங்கள் உனக்குக் கெடுதலையா செய்வோம்? இத்தனே நாட்கள் நீ கேட்ட எதையாவது நாங்கள் மறுத்திருக்கிறோமா? சொல். அதேபோல நீயும் மற்றவர்களுடைய உணர்ச்சிகளுக்கு மதிப்புத் தர வேண்டுமம்மா.


அடம் பிடித்து அழும் குழந்தையின் அழுகையை நிறுத்த வேண்டிய தாயின் நிலையில் இப்போது நானிருக்கிறேன் நிர்மல். ம்... விதியை மாற்ற யாரால் முடியும்? உன்
நாளைக்குக் காலையில் அவரை இங்கு வருவாரப்பா.


நான் அவருடையவளானாலும் அவரை என்னுடையவராக்கிக் கொண்டுவிடுவேனப்பா. யாரைக் குறித்து நீயும் அம்மாவும் கலங்குகிறீர்களோ அந்தத் துணபாவுக்கு அந்த வீட்டில் இடமில்லாமல் செய்துவிடுவேன். என்னுடைய இந்த ஒரு வேண்டுகோளுக்கு மட்டும் சரி என்று சொல்லுங்கள் அப்பா.


அப்பா! அதோ அவரும் அவர் மாமாவும் வருகிறார்கள்.
வாருங்கள் மிஸ்டர் ஜெயராமன். வணக்கம்.
வணக்கம் சார்! இவர்தான் என் மாமா.


மிஸ்டர் ராஜு, உங்கள் மகள் நளினியை என் மருமான் ஜெயராமனுக்கு மணம் பேசலாம் என்று....
மிஸ்டர் ஜெயராமன், நளினியின் சுதந்திரமும் தான் எங்கள் சந்தோஷம். ஆகவே அவள் விருப்பத்துக்கு மாறாக நடக்க நான் விரும்பவில்லை.


நான் ரொம்ப அதிர்ஷ்டம் செய்தவன் சார்!
மிஸ்டர் ஜெயராமன், ஒரு விஷயம். என் வாழ்க்கை நிலையையும், அந்தஸ்தையும் அறிந்து தான் என் மகளை மணக்க முன் வந்திருக்கிறீர்கள் என்று நினைக்கிறேன். இந்த நிலையில்...
உங்கள் மகள் மனம் கோணாமல் அவளை வாழ வைப்பேன் சார்.


மிஸ்டர் ராஜு பெரிய இடத்துச் சம்பந்தத்துக்கு ஏற்றபடி நிலைமை செய்யாமல் கௌரவமாக இருக்கிறார்.
ஜெயராமன், எனக்கு வாழ்வதற்கு இல்லாவிட்டாலும் கௌரவமாக வாழ்வது எப்படி என்று தெரியும்.


அதெல்லாம் ஒன்றுமில்லை சார். நாங்கள் வருகிறோம்.
விருந்துக்கு நான் நன்றி செலுத்துகிறேன்.


நீங்கள் அப்படிச் சொல்லி இருக்கக் கூடாது மாமா.
அவன் என்னை மதித்தே பேசவில்லை, அதைக் கவனித்தாயா நீ?


உண்மை தான். வீட்டு விஷயத்தையும் என்னிடம் தான் பேசினார்.
உனக்காகவே நான் அங்கு வந்தேன். அந்த ராஜுவை எனக்கு ரொம்ப நாளாகத் தெரியும்.


எதையும் மனதில் வைத்துக் கொள்ளாதீர்கள் மாமா. நளினி என்னுடையவளான பிறகு எல்லாம் சரியாகி விடும்.
உன்னுடையவளான பிறகு தானே? அதையும் பார்க்கலாம்.
தொடரும்

# பொன் விலங்கு



மணிவண்ணன்

## எட்டாவது அத்தியாயம்

மல்லிகைப்பந்தலின் அழகும் அமைதியும் இணைந்த வாழ்க்கையில் ஒரு நாள் ஒரு பரிபூரணமான முழு நாள் ஓடி மறைந்து விட்டது. குளிர்ச்சி நிறைந்த அந்த மலை நாட்டு நகரத்தில் ஒவ்வொரு நாளும் பொழுது புலர்வதே ஒரு சுவையான அநுபவம். பாலாவி போல் பனி மூடிய மலைத் தொடர்களிடையே ஒவ்வொரு நாள் காலை நேரமும் விடிவதற்குச் சோம்பல் பட்டுக் கொண்டே மெல்ல விடிவது போலிருக்கும். காற்றில் ஆடி அலைக்கழிக்கப்பட்டு மெல்ல உதிரும் பூவைப் போல் அப்படி மந்தமாக விடிவதிலும் ஓர் அழகு இருக்கும். படுக்கையில் எழுந்து உட்கார்ந்து பறப்பதற்குச் சிலிர்த்துக் கொள்ளும் கருவண்டுகளாய்க் கண்களைத் திறந்து பார்த்தாள் பாரதி. பச்சை மரகதப் பரப்பாக வளர்ந்து கிடந்த தோட்டத்துப் புல்வெளியில் வைரம் சிதறினாற் போல் பனித் துளிகள் மின்னின. ஓரிரு கணங்கள்தான் அந்தப் பனித் துளிகளும் பசும் புல்வெளியும் தம்முடைய அந்த நேரத்து அழகால் அவளைக் கவர முடிந்தது. ஏதோ ஒரு நினைவால் சிறப்பாகவும் நிரந்தரமாகவும் கவரப்பட்டு விட்ட ஒரு மனம் அவ்வப்போது சாதாரணமாய்க் கவரப்படும் பல நினைவுகளாலும் கூடத் தான் ஆண்டு அநுபவிக்க விரும்புகிற அந்த ஒரு நினைவே ஞாபகப் படுத்தப் பெறும். முதல் நாள் மாலை அவசரம் அவசரமாக அந்தக் கடிதத்தை எழுதி எடுத்துக் கொண்டு போய்த் தானே தபாலில் சேர்த்ததையும், அந்தக் கடிதத்தைப் பதறும் கையினால் தபால் பெட்டியில் போட்டு விட்டுப் பின்னால் யாரோ வந்து நின்று தன்னைக் கவனிப்பது போல் தோன்றவே திரும்பிப் பார்த்த போது, ''என்னைக் கூப்பிட்டுக் கொடுத்திருந்தால் நானே தபாலில் சேர்த்திருப்பேனே? நீங்கள் எதற்காகச் சிரமப்படுகிறீர்கள்?'' என்ற கேள்வியோடும் தபாலில் சேர்ப்பதற்காக வைத்திருந்த வேறு கடிதங்களோடும் கல்லூரி ஹெட் கிளார்க் நின்று கொண்டிருந்ததையும் இப்போது மீண்டும் நினைவு கூர்ந்தாள் பாரதி. முகவரி எழுதியிருந்த பக்கம் வெளியே தெரியும் படி தான் கடிதத்தைத் தபால் பெட்டிக்குள் போட்டதையும், திறந்திருந்த பெட்டியில் கீழ்ப் பக்கமாக வந்து அது விழுந்ததையும், ஹெட்கிளார்க் பின்புறம் நின்றபடியே படித்துப் பார்த்திருப்பாரோ என்ற பயமும் திகைப்பும் நேற்று இரவே வெகு நேரம் வரை அவள் மனத்தைக் குழப்பிக் கொண்டிருந்தன. இன்று காலை இப்போது இரண்டாவது முறையாக அந்த நினைவு வந்த போதும் 'ஹெட் கிளார்க்' தபாலில் சேர்ப்பதற்காகக் கொண்டு வந்திருந்த கடிதங்களில் சத்தியமூர்த்திக்குப் போட்டியாக வந்த அந்த முதியவருக்கு அனுப்பப்படும் ஆர்டரும் இருக்குமோ என்ற அநாவசியமான பீதி வேறு அவளுக்கு ஏற்பட்டிருந்தது. மல்லிகைப் பந்தல் கல்லூரி ஹெட்கிளார்க் சிதம்பரம் ஏறக்குறையக் கல்லூரி முதல்வரின் வார்த்தைக்குத் தலையாட்டுகிறவர் என்பதும் அவளுக்குத் தெரியும். தான்

தபால் பெட்டியில் போட்ட கடிதத்தில் சத்தியமூர்த்தியின் முகவரி எழுதப்பட்டிருந்ததை ஹெட் கிளார்க் படித்திருந்தால் அதை நிச்சயமாகக் கல்லூரி முதல்வரிடம் சொல்லுவார் என்பதையும் அவளால் அனுமானம் செய்ய முடிந்தது.

''நிரம்ப வேண்டிய சிநேகிதி ஒருத்திக்கு அவசரமாக எழுத வேண்டியிருந்தது. எப்படியும் இன்றைக்குத் தபாலில் சேர்த்துவிட வேண்டும் என்பதற்காக நானே எழுதி எடுத்துக் கொண்டு ஓடி வந்தேன்'' என்று நேற்று மாலை ஹெட் கிளார்க்கினிடம் பதில் சொல்லியிருந்தாள் அவள்.

அதற்கு அப்புறமும், ''ஏதோ கடிதத்தைத் தபாலில் சேர்ப்பதற்காக நீயே இந்த மழை ஈரத்தில் நடந்து வெளியே போயிருந்தாயாமே அம்மா? இந்த மழை ஈரத்தில் நீயே எதற்காக வெளியே போகிறாய்? உடம்புக்கு இழுத்து விட்டுக் கொண்டால் என்ன ஆவது? யாரிடமாவது கொடுத்து அனுப்பியிருக்கக் கூடாதோ?'' என்று இரவு சாப்பிடும் போது அப்பாவும் அவளைக் கேட்டிருந்தார். 'ஹெட் கிளார்க்' அப்பாவிடம் அதைச் சொல்லியிருக்க வேண்டும் என்று அவள் தெரிந்து கொண்டாள். இந்தக் கேள்வியை நேற்றிரவு தந்தை தன்னிடம் கேட்ட போது தன்னுடைய சௌகரியங்களை ஒவ்வொருவரும் ஒவ்வொரு விநாடியும் கவனித்துக் கொண்டிருப்பதையும், விசாரிப்பதையுமே துன்பமாக உணர்ந்தாள் அவள். காலையில் உறக்கம் விழித்துப் படுக்கையில் எழுந்து உட்கார்ந்து கொண்டு முதல் நாள் நினைவுகளில் மூழ்கியிருந்தவள், கண்கள் சென்ற திசையில் தெரிந்த தோட்டத்துப் புல்வெளியையும் அதில் வைரக் கற்களாக மினுக்கும் பனித்துளிகளையும் அதற்கப்பால் இயற்கையின் ஏதோ ஒரு விதமான சந்தோஷத்தை வெளியிடும் சின்னங்களாகப் பூத்துக் குலுங்குகிற பல வகைச் செடி கொடிகளையும் இரண்டாவது தடவையாகப் பார்த்தாள். தோட்டமும், வீடுமாகப் பன்னிரண்டு ஏக்கர் பரப்புள்ள அந்தப் பங்களாவின் காம்பவுண்டு அமைப்புப் பெரிதாக இருந்த காரணத்தினாலும், மலைப் பகுதியாக இருந்ததனாலும் உள்ளே பெரும் பகுதிகள் வெள்ளைக்காரர்களின் வீடுகளைப் போல் கண்ணாடிகளால் தடுக்கப்பட்டிருந்தன. பெரிய கண்ணாடிப் பலகணிக்கு மறுபுறம் மங்கித் தெரிந்த தோட்டம் யாரோ தயாராக எடுத்து நிறுத்திக் கண்ணாடி போட்ட புகைப்படம் போல் வனப்பின் நிறைவாகத் தெரிந்து கொண்டிருந்தது.

பல் விளக்குவதற்காக 'வாஷ் பேஸி'னுக்கு முன்னால் போய் நின்ற போது மேலே இருந்த கண்ணாடியில் தான் தினசரி பார்த்துப் பார்த்துப் பழக்கமான தன்னுடைய முகத்தையே புதுமையாகப் பார்த்தாள் பாரதி. சத்தியமூர்த்தியிடம் நேற்றுப் பேசிக் கொண்டிருந்த போதும் இந்த முகம் இப்படித்தானே அழகாயிருந்திருக்கும் என்ற மகிழ்ச்சிகரமான சந்தேகம் அவள் மனத்தில் இப்போது ஏற்பட்டது. 'சத்தியமூர்த்தியின் கண்களுக்குத்தான் எவ்வெப்போது எந்தெந்த விதங்களில் அழகாகத் தோன்றியிருக்க முடியும்?' என்ற எண்ணத்தோடு சிறிது நேரம் தன் கண்களை மறந்து அவனுடைய கண்களாகவே தன்னுடையவற்றைப் பாவித்துக் கொண்டு கண்ணாடியில் தெரிந்த தன் முகத்தைப் பார்த்து மகிழ முயன்றாள் அவள். 'நேற்று அவருக்கு முன் மல்லிகைப்பந்தல் பஸ் நிலையத்தில் போய் நாணி நின்ற போதும் என்னுடைய இந்தக் கண்கள் இப்படித்தானே அழகாயிருந்திருக்கும்? ஊதுவத்தியிலிருந்து எழுந்து சுழலும் புகைச் சுருள்களைப் போல இந்தக் கூந்தலும் இப்படித் தானே சுருண்டு சுழன்று கருமை மின்னியிருக்கும்?' என்று ஒவ்வொன்றாக நினைக்கத் தொடங்கினாள் அவள். தான் அழகாக இருக்க வேண்டும் என்ற ஞாபகம் ஒரு பெண்ணுக்குத் தன் இதயம் அழகாக ஒப்புக் கொண்டு அங்கீகரிக்கிற ஒருவனுக்கு முன்புதான் நிச்சயமாகவும், தவிர்க்க முடியாமலும் ஏற்படுகிறது. வார்த்தைகளால் அப்படி அப்படியே சொல்லி விளக்கிவிட முடியாததொரு நுணுக்கமான அநுபவம் இது. ஒவ்வொரு பெண்ணும் இத்தகைய அநுபவங்களின் போதுதான் தன்னுடைய நினைப்பும் பாவனைகளும் மலர்ந்து மணக்கிறாள். தன்னைவிட அழகான பொருளை எதிரே சந்திக்கும் போதிலேயே தான் அழகாயிருக்க வேண்டும் என்ற ஞாபகமும் தவிப்பும் ஏற்படுகின்றன. பெரும்பாலான நேரங்களில் உணர்ச்சிகளாலும், பாவனைகளாலும் தவிக்கிற தவிப்பே ஓர் அழகாகி விடுகிறது. அந்தத் தவிப்பில் நேரம் போவதே தெரிவதில்லை. அப்படித் தவிப்பதே ஓர் இன்பமாக — ஓர் அழகாகத் தோன்றுகிறது.

குளியல் அறையில் பல் விளக்கி முகம் கழுவிக் கொண்டு வெளியே வந்து நேரத்தைப் பார்த்த போதுதான் குளிப்பதற்குச் செலவிட வேண்டிய அவ்வளவு அதிகமான நேரத்தைத் தான் பல் விளக்குவதற்குச் செலவழித்திருப்பது பாரதிக்கே தெரிந்தது. மனம் இலயித்து ஈடுபடுகிற ஒன்றில் நேரமே

தெரியாது என்பதைப் புரிந்து கொண்டவளாகக் கூடத்துக்குப் போனுள் அவள். கூடத்தின் நடுவேயிருந்த தேநீர் மேஜையில் எல்லாம் தயாரா யிருந்தன. அப்பா காலையில் வெளி வந்த செய்தித் தாள்களில் மூழ்கி யிருந்தார். செய்தித் தாள் முழுமையும் ஒரே எண்கள் மயமாக அச்சாகி யிருந்தது. ஏதோ பரீட்சை ரிஸல்ட் வந்திருந்தது போலும். அருகே போய் உட்கார்ந்து தந்தையின் உடல் நிலையை விசாரித்துக் கொண்டே இருவருக்குமாகத் தேநீரைக் கலக்கத் தொடங்கினுள் பாரதி. அன்று விடிந்ததிலிருந்து தந்தை மிகவும் உற்சாகமாக இருப்பதை அவருடைய பேச்சிலிருந்து அவள் தெரிந்து கொள்ள முடிந்தது.

''இப்போதெல்லாம் நீ மிகவும் நேரம் கழித்து எழுந்திருக்கிருய் போல் இருக்கிறதம்மா! நானும் ஆறே கால் மணியிலிருந்து இந்த நாற்காலியில் பழியாய்க் காத்துக் கொண்டிருக்கிறேன். ஒவ்வொரு செய்தித் தாளையும் இரண்டு தடவை எடுத்துப் படித்தாயிற்று. பழகிவிட்ட காரணத்தால் நீ கலந்து கொடுக்காமல் தேநீர் குடிக்கவும் மனம் வரவில்லை. இன்று என் உடல் நிலையும் ஓரளவு தேறி யிருக்கிறது. 'மயிலாடும் பாறை எஸ்டேட்' வரை போய் வரலாம் என்று நினைத்தேன். உன் அபிப்பிராயம் எப்படி? எஸ்டேட் வேலை கொஞ்சம் இருக்கிறது. அதோடு உன்னையும் அழைத்துப் போய்ப் புதிதாக வாங்கிய பகுதிகளைச் சுற்றிக் காண்பிக்க ஆசை. ஒரு நாளோ, இரண்டு நாளோ அங்கே தங்கி யிருந்து வரலாம். கல்லூரி இண்டர்வ்யூக்களும் ஏறக்குறைய முடிந்து விட்டன. சர்வ கலாசாலை செனட் மீட்டிங் ஏதோ இருக்கிறதாம். பிரின்ஸிபல் இன்று மாலை சென்னைக்குப் போகிருர். திரும்பி வர ஒரு வார மாகுமாம்.. அதுவரை கல்லூரி நிர்வாக வேலைகளைப் பொறுத்தமட்டும் எனக்கு ஓய்வுதான்.''

''இந்த வருடம் புதிதாக நியமனம் செய்து அனுப்ப வேண்டிய ஆர்டர்கள் எல்லாம் பிரின்ஸிபல் ஊர் திரும்பிய பின்புதானே அப்பா?'' என்று தேநீர்க் கோப்பையை அவரிடம் நீட்டிக் கொண்டே மெல்லக் கேட்டாள் பாரதி.

''ஏன்? ஆர்டரைப் பற்றி உனக்கென்ன வந்தது? எல்லாரும் என்னைக் கழுத்தறுக்கிற மாதிரி நீயும் யாருக்காவது சிபாரிசு செய்யப் போகிருயா? இந்தச் சிபாரிசு உபத்திரவத்துக்குப் பயந்துதான் நானே இரண்டு மூன்று நாட்கள் எங்காவது தலை மறைவாக எஸ்டேட் பக்கம் போய் இருந்து விட்டு வர வேண்டும் என்று நினைக்கிறேனம்மா. தரக் குறைவான ஆட்களுக்குச் சிபாரிசு சொல்லிக் கொண்டு மிகவும் வேண்டிய மனிதர்கள் நேரில் வந்து சேர்கிருர்கள். இந்தக் கல்லூரி நீண்ட நாட்கள் நல்ல பெயரோடுநடப்பதற்குப் பணம்சேர்த்து வைத்து விட்டுப் போவதை விட முக்கியமானது நல்ல ஆசிரியர்களைச் சேர்த்து வைப்பதுதான். மூன்ருவது வகுப்பில் மூன்ருந்தரமாகப் பாஸ் செய்திருக்கிற கழிசடைகளுக்குச் சிபாரிசு சொல்லிக் கொண்டு 'முதல்தர'மான வேண்டியவர்கள் வந்தால் தட்டிக் கழிக்கவும் முடியாமல் ஏற்றுக் கொள்ளவும் முடியாமல் திணற வேண்டி யிருக்கிறது'' என்று சிரித்தபடியே மறுமொழி கூறிஞர் பூபதி. 'அப்பாவிடமிருந்து தான் தெரிந்து கொள்ள விரும்புகிற எந்தச் செய்தியையும் இப்போது தெரிந்து கொள்ள முடியாது; அவர் அதிக விழிப்புடன் இருக்கிருர்' என்பது புரிந்தவுடன் பேச்சை நகைச்சுவையாக வேறு வழியில் மாற்றி விட்டுத் தப்பித்துக்கொண்டாள் பாரதி.

**பொன் மொழி**

**ஒரு பெண்ணுக்குத் தான் அழகாயிருக்க வேண்டுமென்ற ஞாபகமே தன் இதயம் அழகனுக ஒப்புக் கொண்டு அங்கீகரிக்கிற ஒருவனுக்கு முன்புதான் நிச்சயமாகவும் தவிர்க்க முடியாமலும் ஏற்படுகிறது.**

''நானும் ஒரு சிபாரிசு செய்யப் போகிறேன் அப்பா! ஆனல் அது நீங்கள் நினைக்கிருற் போல் உங்களுக்குத் தொல்லை தருகிற சிபாரிசு இல்லை. என்றைக்கும் இதே போலத் தகுதியையும், திறமையையும் தெரிந்து கொண்டு நல்லவர்களையே தேர்ந்தெடுக்கும் என் அருமைத் தந்தைக்கு நோய் நொடி இன்றி நீண்ட ஆயுளைத் தர வேண்டும் என்று கடவுளிடம் சிபாரிசு செய்கிறேனப்பா! கடவுள் என்னுடைய சிபாரிசுக்குச் செவி சாய்த்துத்தான் ஆகவேண்டும். ஏனென்ருல் எல்லாத் தகுதிகளும் உள்ள முதல் தரமான மனிதருக்காக இந்தச் சிபாரிசைச் செய்கிறேன் நான்'' என்று மழலை மாருத குழந்தைக் குரலில் சொல்லி விட்டு அவள் கைகொட்டிச் சிரித்தபோது அந்தப் பேச்சைக் கேட்டு அப்பாவே அயர்ந்து போனுர். தமிழ் விரிவுரையாளர் பதவிக்காக அனுப்பப்படுவதற்கு இருக்கும் ஆர்டர் சத்தியமூர்த்திக்கா, அல்லது வேறு ஒருவருக்கா என்பதை மிகவும் நாசூக்காக அப்பாவிடத்தி

லிருந்து தெரிந்து கொண்டு விடுவதற்காகத்தான் அவள் அப்போது அந்தப் பேச்சையே தொடங்கினாள். தந்தையின் பதில் சிறிதும் நெகிழ்ச்சியின்றி வெளிப்பட்டதைக் கண்ட பின்பே அவள் தன் பேச்சை மாற்றிக் கொண்டாள். அவரோ எஸ்டேட்டுக்குப் புறப்பட்டுப் போவதைப் பற்றியே அவளிடம் வற்புறுத்திக் கொண்டிருந்தார்.

''என்னம்மா இது? நான் கேட்டதற்குப் பதில் சொல்லாமல் வேறு ஏதோ சொல்கிறாயே?... எஸ்டேட் பக்கம் போய் வரலாமா என்று கேட்டேனே?'' என்று மீண்டும் மகளைக் கேட்டார் பூபதி. வீடு வாசலை மறந்து மாதக் கணக்கில் எஸ்டேட்டில் இருக்கலாம் என்றாலும் உற்சாகமாக ஒப்புக் கொள்கிற பெண் இன்று மௌனமாயிருந்ததைக் கண்டு தந்தையும் வியப்படைந்தார். மல்லிகைப் பந்தலிலிருந்து நாற்பது — நாற்பத்தைந்து மைல் தொலைவில் இன்னும் உயரமான இடத்தில் இன்னும் அழகான மலைப் பகுதியில் பூபதிக்குச் சொந்தமான மயிலாடும் பாறை எஸ்டேட் அமைந்திருந்தது. நூறு ஏக்கரோ, நூற்றைம்பது ஏக்கரோ, ஒரு தனிமலையே அந்த இடத்தில் அவருக்குச் சொந்தமாக இருந்தது. எஸ்டேட்டின் நடுவே தேயிலையைப் பதனிட்டுத் தயாரிக்கும் தொழிற்சாலை ஒன்றும் இருந்தது. மயிலாடும் பாறை மலையின் இயற்கையழகு மிகுந்த பகுதி ஒன்றில் சிறியதோர் அருவியை ஒட்டி ஓய்வு கொள்வதற்கு ஏற்ற வசதி நிறைந்த விடுதி ஒன்றையும் அமைத்திருந்தார் பூபதி. பதினைந்து இருபது நாட்களுக்கு ஒரு முறை அல்லது சில சமயங்களில் இரண்டொரு மாதங்களுக்கு ஒரு முறை. தந்தையும் மகளுமாக இந்த விடுதிக்கு மகிழ்ச்சி உலாப் புறப்பட்டு வருவதுண்டு. அப்படி வந்தால் ஒரு வாரமோ, பத்து நாளோ ஓய்வாகத் தங்காமல் திரும்புவது வழக்கமில்லை. மல்லிகைப் பந்தலுக்கும் மயிலாடும் பாறை எஸ்டேட்டுக்கும் நடுவிலுள்ள நாற்பது மைல் மலைச் சாலையிலேயே பூபதிக்கு உடைமையான வேறு சில பெரிய தொழில் நிறுவனங்களும் இருந்தன. அவருடைய எஸ்டேட்டில் விளையும் கோகோ காய்களைப் பயன்படுத்தி சாக்லேட் முதல் பல பண்டங்கள் செய்யும் இனிப்பு மிட்டாய்த் தொழிற்சாலையான 'கன்பெக்ஷனரி' ஒன்றும் தேக்கு, கருங்காலி மரங்களை அறுத்து மிக அழகிய தரமான நாற்காலி, மேசைகள், நிலைக் கண்ணாடி பதித்த பீரோக்கள் ஆகியவற்றைச் செய்யும் மரத் தொழிற்சாலை ஒன்றும், ரப்பர்த் தோட்டம், ஏலக்காய்த் தோட்டம் ஆகியவற்றை ஒட்டி அவற்றுக்காக அமைந்த சில தொழிற்சாலைகளுமாக இருந்தன. பூபதி தம்முடைய சிந்தனையாலும், வியாபாரத் திறமையாலும் அந்த மலைகளில் அற்புதமான பல சாதனைகளைச் சாதித்திருந்தார். ஆனால் இந்தத் தொழில் நிறுவனங்களையெல்லாம் ஆக்கிப் படைத்து ஆளுவதைவிட மல்லிகைப் பந்தல் கலைக் கல்லூரியின் நிறுவியவராகவும், நிர்வாகியாகவும் இருப்பதற்காகவே அவர் அதிகமாகப் பெருமைப்பட்டார். நாளடைவில் அந்தக் கல்லூரியை ஒரு மலைநாட்டுப் பல்கலைக் கழகமாக்கிவிட வேண்டும் என்பதையே தம் வாழ்வில் இனிமேல் சாதிக்க வேண்டிய பெரிய சாதனையாக நினைத்துக் கொண்டிருந்தார் அவர். மல்லிகைப் பந்தலுக்கு மிக அருகேயுள்ள அமைதியான இடமாகிய மயிலாடும் பாறைக்குப் போனாலும் சரி, பல நூறு மைல்களுக்கு அப்பால் உள்ள வேறோர் இடத்துக்குப் போனாலும் சரி, அப்பாவின் நினைவும் திட்டங்களும் கல்லூரியைச் சுற்றியே வட்டமிட்டுக் கொண்டிருக்கும் என்பது பாரதிக்குத் தெரியும். உடல் நலம் குன்றியிருந்த போதும் கல்லூரிக்கான இண்டர்வ்யூக்களைத் தேதி மாற்றவோ, தள்ளிப் போடவோ விரும்பாமல் குறித்த தேதிகளில் குறித்தபடியே நடத்தி முடித்த தந்தையின் பிடிவாதத்தை அவளும் பார்த்துக்கொண்டு தானே இருந்தாள்! நோயுற்றுத்தளர்ந்து போயிருக்கிற பல வேளைகளில் காரியங்களைத் தள்ளிப் போடாமல் குறித்த வேளையில் செய்து முடிக்கும் திருப்தியே அவருடைய நோய்க்கு மருந்தாகி விருப்பதை அவள் அறிவாள். காரியங்களைத் திட்டமிட்டபடி திட்டமிட்ட வேளையில் செய்து முடித்து விட்டோம் என்ற மன நிறைவையே ஓர் ஆரோக்கியமாக ஏற்றுக் கொண்டு அதனாலேயே எல்லாத் தளர்ச்சிகளும், எல்லாச் சோர்வுகளும் நீங்கி எழுந்து நடமாடத் தொடங்கியிருக்கிறார் அவள் தந்தை. கடந்த நாலைந்து நாட்களாக உடல் நலக் குறைவோடு குறைவாக எழுந்து உட்கார்ந்து இண்டர்வ்யூக்களை நடத்தி முடித்த திருப்தியினால்தான் இன்று விடிந்ததும் விடியாததுமாய் எஸ்டேட்டுக்குப் புறப்பட்டுப்போகிற தைரியத்தை அப்பா அடைந்திருக்கிறார் என்பதை எண்ணித் தனக்குத் தானே சிரித்துக் கொண்டாள் பாரதி.

''என்னம்மா? நீயாகவே சிரித்துக் கொள்கிறாயே?'' என்று அவள் முகத்தையே கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்த தந்தை அவளைக் கேட்டார். பெண் தன்னோடு பல முறை மயிலாடும் பாறை எஸ்டேட்டுக்கு வந்திருந்தாலும்

சிறு வயதிலேயே புகட்டுங்கள்...
சிறந்த முறையில் புகட்டுங்கள்...
காலையில் முதல் வேலையாக ஒரு முறை
இறுதியாக இரவில் ஒரு முறை
வாய்கொப்பளிக்க

# லிஸ்டரின்!

—வாழ்நாள் முழுதும்
அவர்களுக்குப் பாதுகாப்பு!

பழக்கம் படிவதற்கு வாகானது இளமைப் பருவம்! லிஸ்டரின் உபயோகிக்கும் ஆரோக்கிய நற் பழக்கத்தைப் புகட்டுவதற்கு இதைவிட வாய்ப்பான சமயமும் உண்டோ! அன்றுடம் அதிகாலை ஒரு தடவை, இரவு ஒரு தடவை லிஸ்டரின் கொண்டு வாய் கொப்பளித்தால் கிருமிகளினின்று நாள் முழுதும் காத்துக்கொள்ளலாம். பட்ட மாத்திரத்திலே கிருமிகளைக் கொன்று மூச்சிலே இனிமை தவழச் செய்வது லிஸ்டரின் ஆன்டிஸெப்டிக் (நச்சுமுறி மருந்து).

திடமுடன் முன்யோசனையைக் கைக்கொள்ளுங்கள்! தினம் இருமுறை லிஸ்டரின் உபயோகிக்கும் ஆரோக்கிய நற் பழக்கத்தை இப்போதே துவக்குங்கள்!

**வாய்நிறைந்த சுகாதாரத் தூய்மைக்கு வழி: லிஸ்டரின்; இன்றும் என்றும் உங்கள் துணை!**




வார்னர்-லாம்பர்ட் பார்மஸூட்டிகல் கம்பெனி
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யூ.எஸ்.ஏ.வில் இணைக்கப்பெற்றது).

WL 1702 9 T/M

சென்ற மாதம் அந்த எஸ்டேட் இருக்கும் மலையின் மேற்குச் சரிவில் இன்னொருவரிடமிருந்து புதிதாக விலைக்கு வாங்கிச் சேர்த்த பகுதியை அவனுக்கு இந்தப் பயணத்தின் போது சுற்றிக் காட்டிவிட வேண்டுமென்று நினைத்திருந்தார் அவர்.

தந்தைக்கு ஏதோ மறுமொழி கூறும் பாவனையில் அவள் அவர் முகத்தை ஏறிட்டுப் பார்த்துப் பேசுவதற்கு இருந்த போது வாசல் பக்கமிருந்து யாரோ 'காலிங் பெல்'லை அழுத்தி அமுக்கினார்கள். அந்த மணி ஓசையைக் கேட்டு அப்பாவின் பேச்சு அளவற்ற உற்சாகத்தோடும் நகைச்சுவையோடும் வெளிப்பட்டது.

''மநுநீதிச் சோழனுடைய அரண்மனை வாசல் கெட்டது போ! நியாயம் தேடி வருகிறவர்கள் தன்னைக் கூப்பிட்டு அழைப்பதற்காக இப்படி ஒரு 'காலிங் பெல்' அந்தச் சோழனுடைய அரண்மனை வாசலில் இருந்ததாமே?...அதெல்லாம் கதையிலே படித்திருப்பாயே, அம்மா? இந்த மல்லிகைப் பந்தல் அரண்மனை வாசலில் வந்து யாராவது நமது 'காலிங் பெல்'லை அமுக்கினால் ஒன்று சிபாரிசு தேடி வருகிறவர்களாக இருக்கிறார்கள் அல்லது ஏதாவதொரு நிதிக்கு நன்கொடை கேட்டு வருகிறவர்களாக இருக்கிறார்கள்'' என்று சொல்லிக் கொண்டே வாசல் பக்கமாகப் போவதற்காக எழுந்து நடந்தார் பூபதி. பாரதி தந்தையின் நகைச்சுவையைச் சிரித்து அநுபவித்துக் கொண்டே அவரோடு பின் தொடர்ந்து சென்றாள். உள்ளே சாப்பிட்டுக் கொண்டிருக்கும் போதோ, கூடத்தில் பேசிக் கொண்டிருக்கும் போதோ முன்புறத்து வாசலிலிருந்து இந்த மணி ஒலித்து விட்டால் இதை மனு நீதிச் சோழனுடைய அரண்மனை வாசல் மணிக்கு ஒப்பிட்டு வாய் நிறையச் சிரிக்கா விட்டால் அப்பாவுக்குப் போது போகாது. பல தொல்லைகளை இப்படி நுணுக்கமான நகைச்சுவையினாலேயே சமாளித்து விட்டுத் தயங்காமல் மேலே நடந்து போய்க்கொண்டிருப்பார் பூபதி. அப்பாவின் குணங்களில் இந்த நகைச்சுவைக் குணத்தைப் பாரதி மிகவும் ஈடுபட்டு இரசிப்பாள். ஆனால் முன்புறத்து வாயில் வராந்தாவில் போய்ப் பார்த்த போது தந்தையின் முகத்திலும் சிரிப்பு மறைந்தது; அவள் முகத்திலும் சிரிப்பு மறைந்துவிட்டது. முற்றிலும் வேறான காட்சி ஒன்று அவர்களுக்காக அங்கே காத்திருந்தது. ஓரிரு விநாடிகள் ஒன்றுமே புரியாமல் அவர்கள் இருவரும் அஞ்சி மருண்டு போயினர். விடிந்ததும் விடியாததுமாக இப்படி ஒரு காட்சியா? பை ஓரமாக நெஞ்சின் மேல் ஓர் அரசிலை அளவுக்கு மாறிய நிறத்தில் பூ வேலை செய்த 'ஸ்லாக்' சட்டையும், பைஜாமாவும் அணிந்த இளைஞன் ஒருவன் வாராமல் கலைந்த தலையுடனும் வெறியுமிழும் சிவந்த கண்களுடனும் வலது கையில் பிச்சுவாக் கத்தியை ஓங்கிக் கொண்டு பாயத் திமிறியபடி கூர்க்கா — காவற்காரர்களால் பிடித்துக் கொள்ளப்பட்டு நின்றான். பக்கத்தில் 'கல்லூரி ஹெட் கிளார்க்' பதறி நடுங்கிக் கொண்டு நின்றார். அவர் முகம் பேயறைபட்டது போல் இருந்தது.

''சார்! இன்றைக்கு மாலையில் தாம் சென்னைக்குப் புறப்பட வேண்டும் என்பதற்காகப் பிரின்ஸிபல் கல்லூரியில் சில முக்கியமான கடிதங்களை டைப் செய்வதற்காகவும் வேறு காரியங்களுக்காகவும் இன்று அதிகாலையிலேயே என்னை வரச் சொல்லியிருந்தார். அவரும் வந்திருந்தார். இருவரும் பிரின்ஸிபல் ரூமில் உட்கார்ந்து இன்று காலை செய்தித்தாள்களில் வெளியாகியிருக்கும் பி. எஸ்ஸி. ரிஸல்ட்டைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம். திடுதிப்பென்று இந்தப் பையன் கத்தியும் கையுமாகப் பிரின்ஸிபல் அறைக் கதவைத் தள்ளிக் கொண்டு பாய்ந்து ஓடி வந்தான். இவன் பரீட்சையில் தேற வில்லையாம். அதற்குப் பிரின்ஸிபல்தான் காரணம் என்று இவனாக நினைத்துக் கொண்டு...''

''கதை சொல்லாதீர்... மேலே என்ன நடந்தது?...'' — பூபதியின் குரல் ஹெட்கிளார்க்கிடம் இதைக் கேட்கும் போது இடி முழக்கமாகியிருந்தது.

கத்தியோடு வந்து மிரட்டிய பையனுக்காக நடுங்கிய நடுக்கத்தைத் தவிர பூபதி அவர்களின் அதிகார மிடுக்குடன் கூடிய கம்பீரமான சிங்கநாதக் குரலுக்காகவும் வேறு நடுங்கினார் ஹெட் கிளார்க்.

''நானும் என்னால் ஆன மட்டும்.... குறுக்கே பாய்ந்து தடுத்துப் பார்த்தேன் சார்... இந்தப் படுபாவி பிரின்ஸிபல் மேலே பாய்ந்து விட்டான். வலது தோளிலே ஒரு விரற்கடை ஆழத்துக்குக் கத்திக்குத்து அவருக்கு. ஆம்புலன்சுக்கு ஃபோன் செய்து அவரை ஆஸ்பத்திரிக்கு அனுப்பியாச்சு... எல்லாம் போதாத வேளை... கூர்க்காக்கள் ஓடி வந்து பிடித்திருக்கா விட்டால்... இந்தப் பையன் என்னையும் என்ன செய்திருப்பானோ?...''

உணர்வு வசப்பட்டுப் பேசும்போதே பயத்தினால் ஹெட் கிளார்க் வாய்குழறினார். அப்போது அப்பாவின் முகம் சிவந்து கண்கள் ஒளி மின்னுவதைப் பார்த்துப் பாரதிக்கே பயமாக இருந்தது. அவ



ளோடு மேலே வராந்தா மேஸ்டையின் மீது நின்று எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருந் தவர் ஒவ்வொரு படியாக அழுத்திக் கால்களை ஊன்றிக் கீழே இறங்கி அங்கே கூர்க்காக்களின் பிடியில் திமிறிக் கொண்டிருந்த அந்தப் பைய னுக்கு முன் மிக அருகே போய் இரண்டு கைகளையும் பின்னால் கட்டிக் கொண்டு நிமிர்ந்து நின்றார். அந்த நிலையில் அப்பாவைப் பார்ப்பதற்கே பயமாகவும் ஆச்சரிய மாகவும் இருந்தது பாரதிக்கு. 'நீங்கள் இருவரும் இந்தப் பையனைப் பிடித் திருக்க வேண்டாம்! விட்டு விடுங் கள்....' என்ற பாவனையில் கூர்க்காக்க ளிருவருக்கும் ஜாடை காட்டினார் பூபதி. அவர்கள் அப்படிச் செய்யத் தயங்கி னார்கள். அவனை விட்டு விட்டால் அவன் பூபதி அவர்கள் மேலோ, ஹெட் கிளார்க் மேலோ கத்தியை ஓங்கிக் கொண்டு பாயக் கூடும் என்ற சந்தேகம் அவர்களுக்கு இருந்தது. ஹெட்கிளார்க்கும் அப்ப டியே பயந்தார். அந்தப் பையன் வெறியோடு நின்ற நிலையைப் பார்த்துப் பாரதியும் பயந்தாள்.

'ஐயோ! அப்பா இப்படிப் பயப்படாமல் இந்தக் கொலைபாதகனுக்கு அருகே போய் நிற்கிறாரே?' என்று உள்ளூற நடுங்கிக் கொண்டே தான் பாரதி நின்றாள். பூபதியோ ஒருவிதமான சலனமும் இல்லாமல் மிகவும் திடமாக அந்தப் பையனுக்கு அருகே நிமிர்ந்து நின்று கொண்டு கேள்விகளைத் தொடுத்தார்:

''உன் பெயர்....''

''ராஜாராமன்....''

''நீ எழுதிய பரீட்சை....?''

''பி. எஸ்ஸி...''

''நீ அதில் தேறாமல் போனதற்குக் காரணம்?''

''பிரின்ஸிபல்! காலேஜ் நாளிலிருந்து நான் விழ்ச்சியடைய வேண்டுமென்று சதி செய்தார் அவர்...''



இதைச் செவியுற்றதும் கேள்வி கேட்பதை நிறுத்தி விட்டு அந்தப் பையனின் முகத்தையே துளைத்தெடுக்கும் பார்வையால் இமையாது பார்த்துக் கொண்டே நின்றார் பூபதி. அமைதியாகவும் உள்ளடங்கிய குரலுடனும் அந்த வினாடி வரை தமிழில் கேள்வி கேட்டுக் கொண்டிருந்த பூபதியின் குரல் திடீரென்று சிறிது நேர அமைதிக்குப் பின் கோப வெறியோடு

ஆங்கிலத்தில் சிங்க முழக்கம் செய்யலாயிற்று: ''ஆர் யூ நாட் அஷேம்ட் டு பி ஏ ஸ்டுடெண்ட்?....'' (நீ ஒரு மாணவனாக இருப்பதற்கு வெட்கமாக இல்லை உனக்கு?) என்று கேட்டுவிட்டு அந்தப் பையனை வெலவெலத்துப் போய் அவன் கையிலிருந்த கத்தி நழுவி விழுமாறு ஓங்கி ஓர் அறை விட்டார். பையன் கல்லூரி முதல்வரிடம் முரண்பட்டுத் திமிறினாற்போல் பூபதியை எதிர்த்துக் கொண்டு பாயவில்லை. அப்படியே மருண்டு நின்று விட்டான். அவருடைய கம்பீரமான தோற்றமும் எதிராளியைக் கட்டுப்படுத்தி நிறுத்தும் வார்த்தைகளும் அவனை நலிந்து நிற்கச் செய்திருந்தன.

''உன்னைப் போன்றவர்கள் பேனாவும் புத்தகமும் எடுத்துக் கொண்டு படிப்பதற்கு வரக் கூடாது அப்பனே! அரிவாளை எடுத்துக் கொண்டு கசாப்புக் கடைக்கு ஆடு வெட்டப் போயிருக்க வேண்டும்! இதோ கீழே விழுந்து கிடக்கிறதே; இந்தக் கத்தியைக் கையில் மறுபடியும் எடுத்துக் கொள். உன் போன்றவர்கள் படிப்பதற்குப் பணம் செலவழித்துக் காலேஜ் கட்டி வைத்திருக்கிற என்னைக் குத்து. அப்புறம் உன் போன்றவர்கள் 'படிப்பதற்குப்' புத்தகமெழுதி வைத்து விட்டுப் போயிருக்கிறார்களே; அந்த மேதைகளை எல்லாம் அவர்கள் உயிரோடு இருந்தால் கொலை செய்து விட்டு வா.... கடைசியாக உன்னை நீயே குத்திக் கொள்ளலாம்....'' என்று கூறிக் கொண்டே இரண்டாம் முறையாக அவனை அறைவதற்காக உணர்ச்சி வெறியோடு கையை ஓங்கினவர், அவன் தன் கண்களில் நீர் நெகிழ்ந்து அழத் தொடங்கியிருப்பதைப் பார்த்துக் கையைப் பின்னுக்கு இழுத்துக் கொண்டு பேச்சை நிறுத்தினார். அவன் முகத்தையே பார்த்தார். 'கோ'வென்று பெரிதாகக் கதறி அழத் தொடங்கிய அந்தப் பையன் நெடுஞ்சாண்கிடையாக அவர் கால்களில் விழுந்துவிட்டான். எப்படி வெறி கொண்டு நின்றவனை அப்பா எப்படி அழச் செய்து விட்டார் என்பதைக் கண்ணெதிரே பார்த்த பாரதிக்கு வியப்புத் தாங்கவில்லை. கம்பெனிகளையும் தொழில் நிறுவனங்களையும் நிர்வாகம் பண்ணுகிற சாமர்த்தியத்தை விட மனித உணர்ச்சிகளை ஏற்ற இடத்தில் ஏற்ற விதமாக நிர்வாகம் பண்ணுகிற சாமர்த்தியம் அப்பாவிடம் அதிகமாக இருப்பதைக் கண்டு பெருமையாக இருந்தது அவளுக்கு. கேம்பிரிட்ஜ் மாணவராயிருந்து வெளிநாட்டுப் பல்கலைக் கழகமொன்றில் டாக்டர் ஆப் லிடரேசர் பட்டமும் பெற்று ஒரு டஜன் ஆண்டுகளுக்கு மேல் கல்லூரி முதல்வராயிருக்கிற ஒருவரால் சமாளிக்க முடியாத முரடனை அப்பா நான்கே நான்கு நிமிடப் பேச்சில் அழச் செய்து காலில் விழ வைத்த சாமர்த்தியத்தைக் கண்டு அவள் பிரமித்தாள். கல்லூரி முதல்வர் இந்த முரடனிடம் கத்திக் குத்துப் பட்டு ஆஸ்பத்திரியில் விழுந்து கிடக்கிறார். அப்பாவோ உணர்ச்சி மிக்க வார்த்தைகளாலேயே இந்த முரடனின் இதயத்தை மிக ஆழமான பகுதியில் குத்தி வீழ்த்திவிட்டார். பிரின்ஸிபலாயிருந்து தலை கனத்துத் திரிந்து அசட்டுக் கௌரவமும், பதவித் திமிரும் கொண்டாடிப் பயனில்லை. மனித உணர்ச்சிகளை எதிர்கொண்டு நிர்வாகம் செய்து ஆளவும் அடக்கவும் தெரிய வேண்டும். அது தெரிந்தவன்தான் தலைசிறந்த பேராசிரியன். அப்பாவுக்கு அது தெரிந்திருந்ததற்காக அவள் அவருடைய மகளென்ற முறையில் பெருமைப்பட்டாள்.

''போலீசில் 'கம்ப்ளெயிண்ட் செய்ய வேண்டாமா?'' என்று ஏதோ ஆரம்பித்தார் ஹெட்கிளார்க்.

''வேண்டியதில்லை! நல்ல பெயர் பெற்றிருக்கும் என் கல்லூரியைப் பற்றிப் பத்திரிகைகளில் தாறுமாறான செய்தி வரக் கூடாது. நான் பிரின்ஸிபலை உடனே பார்க்கப் போக வேண்டும். ஆஸ்பத்திரியைத் தேடிக் கொண்டு யாராவது போலீஸ்காரர்கள் போக நேர்ந்து இவர் அவர்களிடம் ஏதாவது ஸ்டேட்மெண்ட் கொடுக்காமல் தடுக்க வேண்டும். இதெல்லாம் சகஜம். சிறு பிள்ளைகளை அதிகம் மன்னித்துத்தான் இருத்த முடியும்'' என்று ஹெட்கிளார்க்கிடம் சொல்லியபடியே மகள் நின்று கொண்டிருந்த பக்கமாகத் திரும்பி, ''பாரதி! காரை எடுஅம்மா! ஆஸ்பத்திரி வரை போய்ப் பிரின்ஸிபலைப் பார்த்து விட்டு வருவோம். இன்றைக்கு எஸ்டேட்டுக்குப் போக வேண்டாம். இப்படி எல்லாம் ஆகிவிட்டதே....? என்ன செய்வது? ஒரு வாரம் கழித்துப் போகலாம்...'' என்றார் பூபதி. பாரதி காரை எடுப்பதற்காக நடந்தாள். அப்போது அவளுக்கென்னவோ தோன்றியது. சத்தியமூர்த்தியைப் போல் அழகிய முகமும் அழகிய மனமும், அழகிய பேச்சும் உள்ள ஓர் ஆசிரியர் தங்கள் கல்லூரிக்கு வந்து சேர்ந்து விட்டால் இப்படிப்பட்ட முரட்டு இளைஞர்களைக்கூடச் சதா தன்னைச் சுற்றிக் கைகூப்பிக் கொண்டு திரிகிற பைத்தியங்களாகச் செய்துவிட அவரால் முடியும் என்று நினைத்தாள் பாரதி. 'அப்படிப்பட்ட அழகும் தகுதியும்உள்ளவரைப் பற்றி வெறும் இளைஞர் என்று அப்பாவிடம் குறை சொல்லித் தள்ளிவிடப் பார்த்த இந்தப் பிரின்ஸிபலுக்கு இதுவும் வேண்டும் இன்னமும் வேண்டும்' என்று சிறு குழந்தை கோபப்படுவது போல் கோபித்துக் கொண்டே காரை எடுத்தாள் பாரதி. (தொடரும்)


நான் எப்பொழுதும் சிறந்ததையே
உபயோகிக்கிறேன்
நான் தேர்ந்தெடுப்பது எவரெஸ்ட்
எளிதாக, நம்பகமாக உழைக்கிறது.
நியாயமான விலை
பூராவும் உத்திரவாதமுள்ளது
எடுப்பான தோற்றமுள்ளது
விற்பனைக்குப் பிறகு உடனுக்குடன் பராமரிப்பு கிடைக்கிறது.
EVEREST
EVEREST
EVEREST
எவரெஸ்ட் தையல் மெஷின்
தயாரிப்பாளர்கள்: சார்தா மெஷினரி கார்ப்பொரேஷன்
தலைமை ஆபீஸ்: 11, பூஸா ரோடு, புதுடில்லி-5.
பாக்டரி: ஸதர்ன் டிரங்கு ரோடு, குரோம்பேட், மதராஸ்.

## காயம் பட்டால்...?

விரலில் வெட்டுக் காயம். ரத்தம் வழிகிறது. உடனே நீ என்ன செய்கிறாய்? அழுக்கும் கிருமிகளும் அணுகாதபடி காயத்தைச் சுத்தமான நீரினால் கழுவி விட்டு டாக்டரிடம் ஓடுகிறாய். ஆனால் காயம் பட்டதுமே உன் உடலில் தானாகவே அதற்குச் சிகிச்சை ஆரம்பமாகி விடுகிறது. எப்படி? கழுவியதும் ரத்தப் பெருக்கு குறைகிறது. உடனே உன் உடலில் உண்டாகும் ஒரு விதப் பசை வெட்டுக் காயங்களை ஒன்று சேர்த்து இழுத்து ஒட்டி விடுகிறது. அதாவது ரத்தம் கெட்டிப்பட்டுப் பசையாகி வெட்டு வாய்களைப் பற்றிக் கொண்டு கருங்க ஆரம்பிக்கிறது. அப்போது வெட்டு வாய் மூடிக் கொள்கிறது. கொஞ்ச நாழிகைக்கெல்லாம் உங்கள் உடலில் ஒளிந்து கொண்டிருக்கும் ஒரு தையல்காரன் ஊசியையும் நூலையும் எடுத்துக் கொண்டு உடலின் கிழிந்த பகுதியைத் தைக்க ஓடி வருகிறான். நூலைப் போன்ற ஆயிரக்கணக்கான தசைச் சத்துக்கள் நாலா பக்கங்களிலிருந்தும் காயம் பட்ட பகுதியை நோக்கிப் படையெடுக்கின்றன. வெட்டுண்ட இரு முனைகளும் கொஞ்சம் கொஞ்சமாக ஒன்றை நோக்கி மற்றது வளர ஆரம்பிக்கின்றன. இப்படி வளர்ந்து வரும் இரண்டும் ஒன்றை ஒன்று சந்திக்கும் இடத்தில் மயிரிழை போன்ற தழும்பு ஒன்றுதான் காயம் பட்டதின் அடையாளமாக இருக்கும். சில சமயங்களில் அதுகூட இருப்பதில்லை. இத்தனை காரியங்களும் நம் உடலில் முறைப்படி சரியான காலத்தில் நடக்கின்றன. டாக்டர் போடும் மருந்து, கிருமிகளை அண்ட விடாதிருக்கத்தான். மற்றப்படி காயத்தை ஆறவைக்க, வெட்டு வாயைப் பசை கொண்டு ஒட்டி ஊசி நூல் கொண்டு தைத்து ஒழுங்காக்கும் காரியங்களை நம் உடலில் நமக்குத் தெரியாமல் இயங்கும் வைத்தியர்கள்தான் செய்கிறார்கள். உங்களுடைய உடலில் காயம் பட்டுப் பொருக்குத் தட்டிப் போயிருந்தால் அதை நீங்களாகப் பிய்த்து எடுக்காதீர்கள். அப்படிச் செய்வதால் காயத்தைக் குணப்படுத்தும் முயற்சியில் ஈடுபட்டுள்ள அந்த டாக்டரின் செய்கையில் குறுக்கிடுகிறீர்கள் என்று அர்த்தம். இதனால் உங்கள் உடலில் தேவையில்லாததொரு தழும்பு தங்கிப் போகலாம்.

---

**உங்களுக்குத் தெரியுமா?** உன் அப்பாவுக்கு வயிற்று வலி. நீ வெற்றிலைபாக்குக் கடைக்குப் போய் ஒரு பாட்டிலை வாங்கி வந்து 'டப்' என்று உடைத்து அப்பாவிடம் நீட்டுகிறாய்? அது என்ன, சோடாத்தானே? பாட்டிலில் அடைத்து விற்கும் இச் சோடா நீர் லேசான வயிற்றுக் கோளாறுகளைத் தீர்க்கும். ஓர் ஏரி முழுதுமே இந்தச் சோடா நீராக இருந்தால் எப்படி யிருக்கும்? ஆப்பிரிக்காவிலுள்ள கென்யா மாகாணத்தில் மாகடி என்று ஓர் ஏரி இருக்கிறது. இதன் நீளம் 30 மைல்கள். இதில் சோடா கார்பனெட் ஏராளமாகக் கரைந்துள்ளது. இதன் அளவு 200,000,000 டன்கள் என்று கணக்கிட்டிருக்கிறார்கள். இதற்குச் சோடா ஏரி என்றே பெயர்.



**உங்கள் அல்பத்துக்கு**

இன்று அமெரிக்காவில் வாழும் மக்களில் பெரும்பாலோர் ஐரோப்பிய நாட்டிலிருந்து குடியேறியவர்கள்தான். ஆனால் அந்தக் கண்டத்திலேயே வாழ்ந்த மக்கள் இல்லையா? இருக்கிறார்கள். அவர்களே செவ்விந்தியர்கள். செவ்விந்தியரில் சுமார் முந்நூறு பிரிவினர் இருக்கிறார்கள். நாகரிகத்திலும் பழக்க வழக்கங்களிலும் இவர்களுக்குள் வித்தியாசம் உண்டு. இன்று செவ்விந்தியரில் பலர் வெள்ளையர்களுடன் திருமணத்தால் கலந்து ஒன்றி விட்டாலும் ரத்தக் கலப்புக் கெடாத செவ்விந்தியர்களும் இருக்கத்தான் செய்கிறார்கள். மேலே உள்ள படம் டோ (TAO) இனத்து இந்தியர் உங்கள் ஆல்பத்துக்காக ஹூலா ஹூப் நடனம் ஆடுவதையே காட்டுகிறது.

# வைத்தியரைக் காத்த இடையன்



வெகு காலத்துக்கு முன்னுலே ஓர் அரசர் வாழ்ந்து வந்தார். அவர் பெயர் ருத்திர சிம்மர். சிறந்த வீரராக விளங்கிய மன்னர் வயது காலத்தில் ஏதோ நோய்வாய்ப் பட்டார். தீராத வியாதி. ஆகவே எல்லாரிடமும் எரிந்து விழுந்தார். எதைக் கண்டாலும் வெறுக்கலானுர். குடி மக்கள் அவரிடம் தங்கள் குறைகளைச் சொல்ல நடுங்கினுர்கள்.

திடீரென்று அரண்மனை வைத்தியரிடம் ருத்திர சிம்மருக்குக் கடுங் கோபம் ஏற்பட்டது. அவர் கொடுத்த மருந்தோ குடலைக் குமட்டி எடுத்தது. வியாதியோ குணமாகவில்லை. அவர் மீது ஏற்பட்ட கோபத்துக்கு அதுதான் காரணம்.

''நான் கேட்கும் மூன்று கேள்விகளுக்கு மூன்று வாரங்களுக்குள் விடை கூறினுல்—உயிர் பிழைக்கலாம். இல்லாவிட்டால் என் முன்னுல் நிற்காதே. போய் விடு. உன்னைப் பார்க்கவே எனக்குப் பிடிக்கவில்லை, என் கேள்விகள் இவைதான்: ஒன்று—நான் இன்னும் எத்தனை காலம் உயிர் வாழுவேன்? இரண்டு — இந்த உலகத்தைச் சுற்றி வர எனக்கு எத்தனை காலமாகும்? மூன்று — என் மனத்தில் இப்போது நான் என்ன நினைக்கிறேன்?''

மன்னரின் கேள்விகள் வைத்தியரின் மூளையைக் குழப்பின. யாரையும் குழப்பக் கூடிய கேள்வி தானே அவை. இல்லையா? பாவம், விதண்டாவாதர்! அவருக்கு என்ன செய்வதென்றே தோன்றவில்லை. நாட்டில் உள்ள அறிவாளிகளை யெல்லாம் சந்தித்து மன்னரின் கேள்விகளுக்கு விடை சொல்லும்படி கேட்டார். யாராலும் ஒரு கேள்விக்குக் கூட விடை சொல்ல முடியவில்லை.

இன்னும் ஒரு நாள்தான் பாக்கி. தள்ளாடித் தடுமாறி நம்பிக்கை இழந்து வீடு திரும்பிக் கொண்டிருந்தார் வைத்தியர். வழியில் ஆட்டிடையன் ஒருவன் அவரது தொங்கிய தலையையும் தள்ளாடிய நடையையும் கண்டு இரக்கம் கொண்டு, ''என்ன வைத்தியரே, எல்லாருடைய நோயையும் குணப்படுத்தி வேதனையைக் குறைக்கும் உங்களுக்குமா வேதனை?'' என்று கேட்டான்.

இவனிடம் சொல்லித் தன் கவலைகள் தீரப் போகிறதா என்று முதலில் எண்ணினுலும் முடிவில் நடந்ததை யெல்லாம் அவனிடம் கூறினுர்.

''அறிவாளிக்கு முட்டாள் யோசனை கூறும் சந்தர்ப்பங்களும் உண்டு வைத்தியரே! உங்களைக் காப்பாற்ற என்னுல் முடியுமென்று நினைக்கிறேன். அந்த மீசையைத் தவிர கிட்டத்தட்ட சாயலில் என்னைப் போலவே நீங்கள் இருக்கிறீர்கள். உங்கள் உடையை எனக்குத் தாருங்கள். போலி மீசையுடன் அதை அணிந்து கொண்டு நீங்களாக மாறி நான் அரசரைப் போய்ச் சந்திக்கிறேன்'' என்று கூறினுன் இடையன். வேறு வழியின்றி வைத்தியர் அவன் விருப்பப்படி நடந்தார்.

போலி வைத்தியரைக் கண்டதும் மன்னர் ''வந்துவிட்டாயா? என் கேள்விகளுக்கு விடை கொண்டு வந்தாயா? இல்லாவிட்டால் நாளைக்கு உயிர் போவது திண்ணம்'' என்ருர்.

வைத்தியர் உடையினுள் இருக்கும் இடையன் சொன்னுன்: ''அரசே! தங்கள் முதல் கேள்விக்கு விடை இதுதான். என்றைக்கு நீங்கள் இறக்கப் போகிறீர்களோ அதுவரை வாழப் போகிறீர்கள். அதன் பிறகு ஒரு நிமிஷம் கூட வாழ முடியாது.''

''நல்ல பதில்தான்... சரி, இரண்டாவது கேள்விக்கு என்ன பதில்?'' என்று கேட்டார் அரசர்.

''மன்னர் மன்னவா! தாங்கள், சூரியன் உதயமாகும்போது அவனுடன் எழுந்திருந்து மறு நாள் காலையில் மறுபடி அவன் கிழக்கே தோன்றும்வரை அவனுடனேயே பிரயாணம் செய்தீர்களானுல், இந்த உலகத்தை இருபத்து நாலு மணி நேரத்தில் சுற்றி வந்து விடலாம்'' என்ருன் இடையன்.

இந்தப் பதிலும் மன்னருக்குத் திருப்தியை அளித்தது. ''சரியான பதில்தான். மூன்றாவது கேள்வி கடினமானது என்று எண்ணுகிறேன். இப்போது நான் நினைப்பது என்ன?'' என்ருர்.

''அரசர்க்கரசே! மிகச் சுலபமாகப் பதில் சொல்லக்கூடியது மூன்றாவது கேள்விக்குத்தான். இந்த விநாடியில் நான் அரசாங்க வைத்தியர் விதண்டாவாதர் என்று நீங்கள் எண்ணுகிறீர்கள். ஆனுல் உண்மை அதுவல்ல. மன்னரிடமிருந்து வைத்தியருக்கும் எனக்கும் உயிர்ப் பிச்சை வாங்கிப் போகலாமென்று வந்திருக்கும் ஓர் ஏழை இடையன் தான்'' என்று கூறிக் கொண்டே தனது வேஷத்தைக் கலைத்து இடையனுக நின்ருன் அவன்.

இடையனின் சாதுர்யத்திலே மன்னர் மகிழ்ச்சி கொண்டார். வைத்தியரை மன்னித்தார். இடையனுக்கு ஏராளமான பொற்காசுகளை வழங்கினுர்.



# பத்தினிக் கோட்டம்

ஜெகசிற்பியன்

அத்தியாயம் ஐம்பத்துமூன்று

## யார் அந்த வேடதாரி?

கந்தர்வச் சிற்பிகளால் சமைக்கப்பெற்ற மாபெரும் கலாலயம் போல் விளங்கிய பல்லவபுரம் அரண்மனைக்கு வந்து சேர்ந்த ஆந்திர இளவரசி உத்தமசீலி, அங்கே அவள் தங்குவதற்காக ஏற்கனவே திட்டமிட்டுத் துப்புரவு செய்யப்பட்டிருந்த ஓர் அழகிய மண்டபத்தில் அமர்ந்து மிரட்சியுடன் அங்குமிங்குமாகப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

நிலாக் காலங்களிலே உல்லாசமாகப் பொழுது போக்குவதற்கென அமைந்த வசந்த மண்டபம் அது. அந்த மண்டபத்துக்கு நேர் எதிரே — சுமார் நூறடி தூரத்துக்கு அப்பால் — மற்றோர் எழிலார்ந்த மண்டபமும் இருந்தது. பல்லவ அரச குடும்பத்தினர் இவ்வசந்த மண்டபத்தில் அமர்ந்தவாறே இசை,



நடனம், நாடகம் முதலான கலை நிகழ்ச்சிகளைக் கண்டும் கேட்டும் களிப்பதற்காக அந்தக் கலா மண்டபம் நிர்மாணிக்கப்பெற்றிருந்தது. ஆனால் அவ்விரண்டு மண்டபங்களும் இப்போது பொலிவிழந்து பாழ்பட்டுக் காட்சியளித்தன. அவற்றைச் சுற்றியிருந்த பூஞ்சோலைகளும் பொய்கைகளும்கூட அழிந்தும், சிதைந்தும், வறண்டு விட்டுமிருந்தன.

மாலைப்போது மங்கி வரும் நேரத்தில் இந்த அநுசிதமான காட்சிகளைப் பார்க்கப் பார்க்க உத்தமசீலியின் மனம் குழப்பம் அடைந்தது. அந்தக் குழப்பத்தை அங்கு நிலவிய பயங்கர அமைதி மேலும் மிகையாக்கியது.

'யாரோ போலி வேடதாரி வந்து ஏதோ சதி நாடகம் நடத்தப்போகிறான் என்பது தெரிந்திருந்தும் நான் ஏன் இங்கு வரச் சம்மதித்தேன்? அப்போதே ஏதேனும் பொய்க் காரணம் கூறி அவனைச் சந்திக்க மறுத்து விட்டிருக்கலாமே!'

இப்படி நினைத்த அவள் தன்னையே நொந்து கொண்டு தவிக்கலானாள்.

'இல்லை; அந்த வேடதாரி யார் என்பதை அறியத்தான் வேண்டும். அது நான் போட்டிருக்கும் திட்டங்களுக்குப் பேருதவியாகவும் இருக்கக் கூடும்.'

அவனை அங்கே அழைத்து வந்து இருத்திவிட்டு அரண்மனைக்குப் போன தளபதி வில்வேலி நீண்ட நேரமாகியும் திரும்பி வராமல் இருக்கவே அவள் மனம் மீண்டும் கலக்கமுற்றது. 'அந்த வேடதாரியுடன் என் பெரிய தந்தையார் விக்கிரமாதித்தரும் வருவாரோ? அதனால்தான் வில்வேலி வர இவ்வளவு தாமதமாகிறதோ?' — தன்னை மீறிய பயத்தால் நடுங்கிப் படபடத்தவாறு எழுந்தாள் அவள்.

''இளவரசியாரை வெகு நேரம் காக்க வைத்து விட்டேன். மன்னிக்க வேண்டும்'' என்று குழைவுப் புன்னகையுடன் கூறிக்கொண்டே வசந்த மண்டபத்தை நோக்கி வந்தார் தளபதி வில்வேலி.

சட்டென்று திரும்பிய உத்தமசீலி, அவரைப் பரபரப்புடன் ஏறிட்டுப் பார்த்தாள்.

மண்டபத்தின் கீழ்ப் படியில் வந்து நின்ற வில்வேலி மெல்லச் சிரித்தவாறு, ''ஆந்திர இளவரசியாருக்கு இன்று ஒரு புனித நன்னாள்! அவரது மதிப்புக்குரிய அகளங்க அடிகளை முதன் முதலாகச் சந்திக்க வாய்ப்புத் தந்த இனிய பொன்னாளாகும்!'' என்றார் கலகலப்பான குரலில்.

உத்தமசீலியின் மனம் வேகமாக அடித்துக் கொண்டது. கண்ணிமைக்காமல் அவரைப் பார்த்துக் கொண்டே ஓரடி முன்னால் வந்தாள்.

''அகளங்க அடிகள் அதோ, ஆந்திர இளவரசியாரை ஆசீர்வதிக்கிறார்! வணக்கம் செலுத்துங்கள் அம்மணி!'' என்று விநயமாகக் கூறிக் கொண்டே எதிரே யிருந்த அந்தக் கலா மண்டபத்தை நோக்கித் திரும்பினார் வில்வேலி. உத்தமசீலியும் அவசரமாகத் தன் பார்வையை மேலே உயர்த்தினாள்.

அங்கே—

காவி உடை தரித்த ஆஜானுபாகுவான மனிதனொருவன் இடக் கையில் கமண்டலமும் வலக் கையில் மயிற் பீலிக் குஞ்சமும் ஏந்தியவாறு கலா மண்டபத்தின் மேடையிலே மெள்ள உலாவிக் கொண்டிருப்பது தெரிந்தது!

திக்பிரமையுற்றுச் சிலையாகச் சமைந்துவிட்டாள் உத்தமசீலி.

'என்ன பயங்கரமான தோற்றம்! ஆதுரசாலையில் பார்த்த அந்த உண்மையான அகளங்க அடிகளின் அருள் மேவிய புனிதத் தோற்றத்துக்கும், இந்த அரசியல் சூதாடியான போலித் துறவியின் விகாரத் தோற்றத்துக்கும் எவ்வளவு வேறுபாடு!'

குத்திட்டு நின்ற அவள் கண்களிலிருந்து குபுகுபுவெனக் கண்ணீர் பொங்கி வழிந்தது.

''இளவரசியார் ஆனந்தக் கண்ணீர் வடிக்கிறார் போலும்!'' என்று தமக்குள் மெல்ல முணுமுணுத்தார் வில்வேலி.

கண்களை இறுக மூடிக்கொண்டு நின்ற உத்தமசீலி திடுக்குற்று விழித்தாள். 'யார் அந்த வேடதாரி? அவன்மீது ஏற்பட்ட வெறுப்பால் அவனை யார் என்று அறிய மறந்து போய் விட்டேனே!' — பரபரப்போடு தன் பார்வையைக் கூர்மையாக்கிக் கொண்டு கலா மண்டபத்துப் பக்கம் செலுத்தினாள்.

மன்மத வர்ணத் திரைச் சுருண்டு, ரதி வர்ணத் துகில்




விரியத் தொடங்கிவிட்ட அந்த நேரத்தில் அப்போலித் துறவியின் முகத்தை அவளால் அத்தனை தெளிவாகப் பார்க்க முடியவில்லை. ஆயினும் தன் கண்ணின் முழுச் சக்தியையும் திரட்டிக்கொண்டு அவனைக் கூர்ந்து நோக்க முயன்றாள் அவள்.

'ஒரு மகா புருஷரின் பெயரிலே பொய் வேடம் தரித்து வந்திருக்கும் இவன் யாராயிருப்பான்? இவனை இதற்குமுன் நான் பார்த்திருப்பதாக நினைவு இல்லையே!'

கண்ணிமைகளைப் படபட வெனக் கொட்டிக் கொண்டு மீண்டும் தன் பார்வையை நிமிர்த்திச் செலுத்தினாள்.

'என்ன! இந்தப்பக்கவாட்டுக்கோணத்தில் பார்க்கும்போது...அவன்...இல்லை; அவர்.. என்.... பெரிய தந்தையார் விக்கிரமாதித்தரைப்போல் அல்லவா தோன்றுகிறது!'

தீயை மிதித்தவன் போல் காலை உதறிக் கொண்டு நிமிர்ந்த அவள் மறுபடியும் அந்த மனிதனை உற்று நோக்கினாள்.

'இல்லை; நிச்சயமாக அவர் இல்லை. ஐம்பத்தைந்து வயதைக் கடந்துவிட்ட அவருடைய முகத் தோற்றமே வேறு. இந்த வேடதாரியை அத்தனை வயதுள்ளவனாக மதிக்க முடியாது. இவனுக்கு அதிகபட்சம் முப்பது வயது இருக்கலாம். அல்லது அதைவிட இன்னும் கொஞ்சம் அதிகமாகவோ குறைவாகவோ இருக்கலாம். அப்படியானால் இவன் யார்?'

அவனுக்குப் பளிச்சென்று ஓர் எண்ணம் தோன்றியது: 'இந்த நபர் பழையாறைச் சோழராக இருப்பாரோ? சளுக்கிய மன்னருடன் கூட்டுச் சேர வந்து அவருடைய சதித் திட்டங்களுக்கு உடந்தையாகி இப்படியொரு போலி வேடத்தை ஏற்றிருப்பாரோ? அல்லது விக்கிரமாதித்தருக்கும் வில்வேலிக்குங்கூடத் தெரியாமல், அவர்களையும் ஏமாற்றி, என்னையும் ஏமாற்ற ஒருவேளை இந்த அடாத வேடத்தில் வந்திருப்பாரோ?'

அவன் மனம் அந்த ஊகத்தை உடனே மறுத்து விட்டது. 'இல்லை; வில்வேலிக்குப் பழையாறைச் சோழரை நன்றாகத் தெரியும். இவரை அவர் வந்து சந்தித்துவிட்டுப் போயிருக்கிறார். எனவே, வில்வேலியை ஏமாற்ற அவரால் முடியாது. அவருடைய வேடத்தைக் கண்டு இவர் ஏமாந்துவிடவும் மாட்டார். அவ்வாறானால் இந்தக் கபட வேடதாரி யார்?'

முதலில் தோன்றிய எண்ணத்தையே வேறு விதமாகத் திருப்பிப் போட்டுப் பார்த்தான் அவன். 'விக்கிரமாதித்தருக்குத் தெரியாமலே — அவரிடம் தெரிவிக்காமலே — வில்வேலியும் பழையாறைச் சோழரும் சேர்ந்து இந்தச் சதி நாடகத்தை நடத்துகிறார்களோ? அல்லது இந்த வேடதாரி பழையாறைச் சோழராக இல்லாமல் வேறு யாரேனும் ஒரு சாதாரணப் படை வீரனாகவோ படை அதிகாரியாகவோ இருப்பானோ? வில்வேலியின் தூண்டுதலால் அவன் இந்த வேடத்தைத் தாங்கி வந்திருப்பானோ? அல்லது வில்வேலிக்குத் தெரியாமல், சளுக்கிய மன்னர் விக்கிரமாதித்தரே இந்த வேடதாரியைத் தயார்ப்படுத்தி அனுப்பியிருப்பாரோ?'

அவனுடைய சிந்தனை மழுங்கியது. அவனுடைய கண் பார்வையும் மங்கலாகியது.

## அத்தியாயம் ஐம்பத்துநான்கு

# வில்வேலியின் திணறல்!

பனிப் பதுமையாக உறைந்து நின்றிருந்த ஆந்திர இளவரசியையே கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்த வில்வேலி, மெல்லக் கனைத்தவாறு, ''போகலாமா இளவரசி?'' என்றார் கரகரத்த குரலில்.

பதற்றத்துடன் திரும்பிய உத்தமசீலி, '' எங்கே ஐயா?'' என்று நடுக்கமிட்டுக் கேட்டாள்.

''தங்களின் மகத்தான இலட்சியத்தைச் செயலாக்குவதற்கான திட்டங்களைப் பற்றி விவாதிக்க!''

அவள் முகம் வெளுத்து விட்டது. வேதனையுடன் தலை குனிந்து மௌனம் சாதித்தாள்.

''இளவரசியாருக்கு என்ன தயக்கம்? மாபெரும் சமண சங்கத்தின் தலைவரான அகளங்க அடிகளோடு நேருக்கு நேர் பேச அச்சப்படுகிறாரா?''

''இல்லை, ஐயா!...''

''ஆமாம், அம்மணீ! அதற்காகத்தான் நீங்கள் அச்சப்பட்டுத் தயங்குகிறீர்கள் என்பது எனக்குத் தெரிகிறது. அந்தக் கவலை வேண்டாம். தங்கள் திட்டங்களை அவருடன் பரிமாறிக்கொள்ள நான் வேறோர் ஏற்பாடும் செய்திருக்கிறேன்'' என்றார் தளபதி.

மூச்சு முட்டி நின்ற அவள், அவரை வியப்புடன் விழித்து நோக்கினாள்.

''இளவரசியார் தம் மனத்தில் வைத்திருக்கும் திட்டங்களை என்னிடம் சாங்கோபாங்கமாகச் சொல்லலாம். அவற்றை நான் அகளங்க அடிகளிடம் அப்படியே எடுத்துப் போய்த் தெரிவிப்பேன். பிறகு அவருடைய யோசனைகளையெல்லாம் உங்களிடம் வந்து கூறுவேன். முடிவாக நம் மன்னர் பிரானிடம் அவற்றைச் சமர்ப்பித்து அவருடைய அநுமதியின் பேரில் உடனே செயலில் இறங்குவோம்.''

விழியசைக்காமல் அவரையே பார்த்துக்கொண்டிருந்தாள் உத்தமசீலி.

வில்வேலி தயக்கத்துடன் அந்தக் கலா மண்டபத்தைத் திரும்பிப் பார்த்துவிட்டுத் தணிந்த குரலில் மேலும் சொன்னார்: ''இந்த யோசனையை நான் மட்டும் கூறுவதாக நினைக்காதீர்கள் அம்மணீ! அகளங்க அடிகளின் விருப்பமும் இதுவேதான். அவர் அப்படி விரும்புவதன் காரணத்தை நான் சொல்லித்தான் நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதில்லை. ஏனென்றால், சமணத் துறவிகள் கடைப்பிடிக்கும் கடின சமிதிகளைப்

# துயில் கொள்ளுமுன்னே எழில்கொள்ளத்தானே பூசுவீர் லக்மே கோல்ட் க்ரீம்

நீங்கள் துயிலில் ஆழ்ந்துள்ளபோதும் உங்களுக்குச் சேவை புரிகிறது லக்மே கோல்ட் க்ரீம். ஒவ்வொரு இரவும் அதைப் பூசிக்கொண்ட பிறகே தூங்குங்கள். அதிலுள்ள வளமான எண்ணெயைக் கிரகித்துக்கொண்டவுடன் உங்கள் சருமம் சுத்தமாகவும், மிருதுவாகவும், மினுமினுப்போடும் மிளிருகிறது. சரும துவாரங்களை அடைத்துக்கொள்ளும் பழைய அலங்காரப் பொருள்களையும், அழுக்கையும் அகற்றி, உங்கள் மேனி எழில் பளிச்சிடும் மழமழப்பையும், வியப்பூட்டும் இளமையையும் பெறச் செய்கிறது லக்மே கோல்ட் க்ரீம்.

# லக்மே

**கோல்ட் க்ரீம்**



LKY-22C-TAM

பற்றியும் விரதங்களைப் பற்றியும் என்னை விட நீங்கள் நன்றாக அறிவீர்கள்.''

இவ்வளவு நேரம் பேசா மடந்தையாக நின்றுகொண்டிருந்த உத்தமசீலி இதைக் கேட்டு மெல்லச் சிரித்தாள். அந்தச் சிரிப்பிலே வேதனையும் வெறுப்பும் வெடித்துச் சிதறின. ''இது நல்ல யோசனைதான் ஐயா! ஆனால், நான் சொல்ல நினைத்ததும் சொல்ல விரும்புவதும் வேறு.''

ஒருகணம் தயங்கிய வில்வேலி, ''இளவரசியார் என்ன கூற விரும்புகிறார்கள்?'' என்று புருவங்களை மேலுயர்த்திக் கொண்டு கேட்டார்.

''முதலில் என் பெரிய தந்தையார் விக்கிரமாதித்தரை நான் சந்தித்தாக வேண்டும்! அவரைப் பார்த்து, என் தந்தையார் கொடுத்தனுப்பிய பட்டோலையைக் கொடுக்கவேண்டும்! அதன் பிறகே மற்ற விஷயங்களைப் பற்றிச் சிந்திக்க என்னால் இயலும்!''

திகைத்துத் தலை நிமிர்ந்த வில்வேலி திருதிருவென விழித்தார். தம் உடம்பை அப்படியும் இப்படியுமாக நெளித்துக் கொண்ட அவர், ''என்ன இது, சங்கடம்!'' என்று கைகளைப் பிசைந்தவாறு குழறினார்.

''நீங்களே சொல்லுங்கள், ஐயா! நான் இப்படி நினைப்பது நியாயம் தானே...!''

''இளவரசியார் சொல்வதும் நியாயம்தான். ஆனால்... ஒரு முக்கியமான விஷயத்தை நான் முன்னதாகவே சொல்ல மறந்துவிட்டேன்...''

''முதலில் சொல்ல வேண்டியதை முதலில் மறந்துவிடுவது தளபதியாருக்கு வழக்கமாகி விட்டது!''

''மன்னியுங்கள், அம்மணி! சளுக்கியச் சக்கரவர்த்தி விக்கிரமாதித்தர் இப்போது இங்கு இல்லை. அவர் ஓர் அவசர காரியமாக இன்று பகல் உறையூருக்குப் புறப்பட்டுப் போய்விட்டார்.''

இதைக் கேட்டு எவ்வித பரபரப்பும் அடையாத உத்தமசீலி, ''அதனாலென்ன ஐயா? அவர் எப்போது ஓய்வு கிடைத்துத் திரும்பவும் வருகிறாரோ அப்போது அவரைச் சந்தித்துக் கொள்கிறேன்!'' என்றாள் அமைதியாக.

''அகளங்க அடிகள் இங்கு வந்திருக்கிறாரே இளவரசி?'' என்று துடிப்புடன் வினவினார் வில்வேலி.

''நீங்களும் என் பெரிய தந்தையாரும்தானே அவரை இந்த நாட்டுக்கு அழைத்து வந்திருக்கிறீர்கள்? அவருக்குப் பதில்சொல்ல வேண்டிய பொறுப்பு உங்களைச் சார்ந்தது!''

தளபதி வில்வேலியின் முகம் கறுத்தது. ஏதும் பேசத் தோன்றாமல் திக்கித் திணறினார் அவர்.

ஜெனரல் அலெக்சாண்டர்ஸ்மித் அமெரிக்கக் காங்கிரஸில் நீண்ட நேரம் பேசி மக்களை அலுத்துச் சலிக்கச் செய்து விடுவார்.

ஒரு நாள் அவர். 'நீங்கள் எல்லோரும் இக்காலத்து மக்களுக்காகப் பேசுகிறீர்கள். நானோ வருங்காலத்துச் சந்ததியினருக்காகப் பேசுகிறேன்'' என்றார் பேச்சுக்கிடையே.

''சரியாகச் சொன்னீர்கள்!''' என்று கூறிய மிஸ்டர் க்ளே என்பவர், ''அப்படியானால், உங்கள் சொல்லைக் கேட்கும் வருங்காலத்துச் சந்ததியினர் வரும் வரை பேசிக் கொண்டிருப்பதாக உத்தேசமா?'' என்று கேட்டார்.

''சரி, ஐயா! நான் எனது இருப்பிடம் செல்ல அனுமதி தாருங்கள்!'' என்றவாறு அந்த வசந்த மண்டபத்தை விட்டுக் கீழே இறங்கினாள் உத்தமசீலி.

ஆழ்ந்த யோசனையுடன் சில விநாடி மௌனமாய் நின்ற வில்வேலி, ''இளவரசியாரிடம் ஒரு வேண்டுகோள்....'' என்று தயக்கத்துடன் இழுத்தார்.

அவள் அவரைத் திரும்பிப் பார்த்தாள்.

''நம் மதிப்புக்குரிய அகளங்க அடிகள் இந்த அரண்மனையிலே தங்கியிருக்கச் சங்கடப்படுகிறார். அவர் இருப்பதற்கு ஏற்ற இடம் இலவந்திகைப் பள்ளிதான். எனவே, சளுக்கிய மன்னர் வரும் வரையில் இளவரசியார் இவ்வரண்மனையிலேயே இருக்கச் சம்மதம் அளிக்க வேண்டும்.''

உத்தமசீலி இதைக் கேட்டு உள்ளூற அதிர்ச்சி அடைந்தாள். அந்த ஒரே நொடியில் அவள் மனத்திலே ஏதேதோ பயங்கரக் கற்பனைகள் எல்லாம் எழுந்து அலைமோதின. சட்டென்று தன்னைச் சமாளித்துக் கொண்டு நிமிர்ந்து, ''நல்லது ஐயா! தங்கள் விருப்பப்படியே செய்யலாம். ஆனால் நான் இந்த அரண்மனையில் இருக்க விரும்பவில்லை'' என்றாள் உறுதியான குரலில்.

''அப்படியானால், தாங்கள்...''

''என் பெரிய தந்தையார் சென்றிருக்கும் உறையூருக்கே என்னை அனுப்பி விடுங்கள்! அல்லது உங்களுக்கும் எனக்கும் நம்பிக்கையான பெருவளநல்லூர் சேதியக் கலைஞரின் இல்லத்திலே நான் தங்கியிருக்க ஏற்பாடு செய்யுங்கள்!''

இவ்வாறு கூறிவிட்டு, அரண்மனை வாயிலில் இறக்கி வைக்கப் பட்டிருந்த தன் சிவிகையை நோக்கி அமைதியாக நடந்தாள் உத்தமசீலி. (தொடரும்)

# வெய்யிலில் மிகக் குளுமை!

காற்றோட்டமுள்ள இந்த பாடா செருப்புகளில் ஒரு ஜோடி வாங்குங்கள். நீங்கள் கொடுக்கும் பணத்திற்கு கிடைக்கும் இவை: அழகான மோஸ்தர், பிரகாசம், விரியும் தோல், நீடித்து உழைக்கும் அடிப்பாகமும் குதிக்காலும், போதிய அளவு இலேசும் வளையுந்தன்மையும். வாருங்கள் பாடா ஸ்டோருக்குள்: ஒரு ஜோடியைப் பரீட்சை செய்யுங்கள்—உங்கள் விவேகச் செயல்கள் பலவற்றில் இதுவும் ஒன்று!

மணிகா
6.75

கேதகி
6.75

விஜய்
7.95

பாந்தர்
6.25

ஜம்போ
6.50

**Bata**

# கொடுத்து வைத்தவள்

### காந்தன்





செல்வம் நல்லவன்; பணம் படைத்தவனின் கையாள் செல்வத்தை ஓடும் ரயிலில் தீர்த்துக் கட்ட முயன்று அவனை வெளியே தள்ளி விடுகிறான்; கீழே விழுந்த செல்வம் சித்த சுவாதீனம் இழந்து அலைந்தாலும் அவனுக்கு அநாதைப் பெண் மீனுவின் அன்பு கிடைக்கிறது. அவனுக்குத் தாலி கட்டும்படியான நிர்ப்பந்தமும் ஏற்படுகிறது. செல்வம் ஐம்பது லட்சத்துக்கு அதிபதி என்னும் உண்மை பணக்காரனுக்குத் தெரிய வந்ததும் அவனைத் தேடிப்பிடித்துச் சொந்தப்படுத்தி வீட்டுக்கு அழைத்துச் செல்கிறான். புத்தி தெளிந்ததும் தனக்கு விவாகம் ஆகிவிட்டதென்பது செல்வத்துக்குத் தெரிகிறது. செல்வம் காதலியைக் கைவிட்டு மனைவியை ஏற்றுக் கொள்கிறான். எம். ஜி. ஆர். படத்தில் பெரும்பாலும் பைத்தியமாகவே நடிக்கிறார். பைத்தியக்காரனாக நடிக்கும்போது தான் அவர் நடிப்பு சிறப்பாயிருக்கிறது.



ஈ. வி. சரோஜாதான் 'கொடுத்து வைத்தவள்.' கொடுத்து வைத்தவள் என்றால் சும்மாவா? முதலில் பைத்தியக்காரக் கணவனோடு சுற்றியலைந்து பிறகு அவனைப் பிரிந்து அவதிப்பட்டு, கடைசியில் 'டக்'கென்று கணவனின் தாயாரைச் சந்தித்து, ஒரு நிமிஷத்தில் உறவைப் புரியவைத்து அவளோடு காரில் செல்ல வேறு யாருக்கு முடியும்? பிறகு 'பக்'கென்று கணவன் மனத்தில் பழைய நினைவுகளைத் தூண்டிவிட்டு, 'திக்'கென்று சதிகாரப் பிரபுவைத் திணற வைத்துப் படத்தையும் முடித்து வைக்கும் பெண்ணரசியைக் கொடுத்து வைத்தவள் என்று சொல்லாமல் வேறு என்னவென்று சொல்லுவது?



கதையில் வரும் சிக்கல்களைச் சுலபமாகத் தீர்த்து, செல்வம் — மீனுட்சி இருவரின் திருமணத்துக்கும் அத்தாட்சியாக இருந்து படத்தை முடித்து வைப்பது ஒரு புகைப்படம்! பைத்தியக்காரக் கணவனுடன் திருவிழாப் பார்க்கப் போன மீனுட்சி புத்திசாலித்தனமாக அவனுடன் புகைப்படம் பிடித்துக் கொண்டாளோ, பிழைத்தாளோ!

ஓடும் ரயிலிலிருந்து ஒருவனைப் பிடித்துக் கீழே தள்ளினால் யாரும் பார்க்க மாட்டார்களா? உடனே ரயிலை நிறுத்திவிட மாட்டார்களா? பைத்தியக்காரனை டாக்டர் மிகவும் சுலபமாகச் சொஸ்தப்படுத்திவிடுகிறாரே, அது சாத்தியமா? இவ்வாறெல்லாம் குழப்பிக் கொள்ளாதவர்கள் கொடுத்து வைத்தவர்கள்!

ஹாஸ்யத்துக்குத் தங்கவேலு வருகிறார். ஹாஸ்யம் ரசிக்கும்படியில்லை. பல்வேறு சுவையான நிகழ்ச்சிகளைப் புகுத்தித் திரைக்கதையைச் சுவாரஸ்யமாகப் புனைந்தவர்கள், ஹாஸ்யப் பகுதியைக் கவனிக்காமல் அசிரத்தையாக விட்டு விட்டது ஏன்? ஏன்?



எல். விஜயலட்சுமி கவர்ச்சியோடு தோன்றி நடனம் ஆடி, எம். ஜி. ஆரைக் கவர்ந்தும், நம்மையெல்லாம் கவர முடியவில்லையே!

எந்தப் படத்திலும் ராதாவுக்கென்று ஒரு பாத்திரம். அவருக்கென்று ஒரு நடிப்பு. அதை ரஸிப்பதற்கென்று ஒரு கூட்டம். அப்புறம் என்ன கவலை?

''நீயும் நானும் ஒன்று'', ''மின்னல் வரும் சேதியிலே மழை பொழியும்'' என்னும் பாடல்கள் இரண்டையும் கேட்டு அநுபவிக்க முடிகிறது.

மூலக் கதையின் பொறுப்பு தாதா மிராசியைச் சேர்ந்தது. வடநாட்டிலிருந்து கொண்டுவரும் அளவுக்குக் கதையில் விசேஷமாக எதுவும் இல்லை.



அநாவசியமான அடுக்குத் தொடர்களைப் புகுத்தாமல் இயல்பான நடையில் ப. நீ. எழுதியிருக்கும் வசனம் நன்றாயிருக்கிறது. ''நான் யார் தெரியுமா?'' என்ற பாடலைப் படமாக்கியிருப்பது, எம். ஜி. ஆர். கடைசிக் காட்சியில் பைத்தியக்காரன் மாதிரி செய்யும் ஆர்ப்பாட்டங்கள் ஆகியவை சிறப்பான டைரக்ஷனுக்குச் சான்று பகர்கின்றன.

கதையில் உருக்கமான நிகழ்ச்சிகளுக்கு இடம் இருப்பதால், ''கொடுத்து வைத்தவள்'' மக்கள் விரும்பும் படம் என்பதில் ஐயமில்லை.

# எலிபெண்டா மகேசமூர்த்தி

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

ஒரு கவிஞன். அவன் வறியவனும் கூட. அவன் பல செல்வர்களை அணுகியிருக்கிறான். அவர்களிடம் பாடல்கள் பாடிப் பரிசு பெற்றே வாழ்ந்து வந்திருக்கிறான். எல்லாச் செல்வர்களுமா இவன் பாடும் பாடல்களைக் கேட்டு ரசித்துச் சன்மானம் தந்திருப்பார்கள். ஒரு சிலர் இவன் பாடிய பாடல்களின் அருமையை அறியாமல், தமிழின் இனிமையையே உணராமல் கொஞ்சம் உதாசீனமாகவே இருந்திருக்கிறார்கள். அதனால் மனம் வருந்தியிருக்கிறான். தன் வழிபடு கடவுளான சிவபெருமானிடமே முறையிட்டிருக்கிறான். ''பெருமானே! என்னை யானைக் காலால் இடறச் செய்தாலும் சரி, இல்லை, சிங்கத்துக்கே இரையாக்கினாலும் சரி; இல்லை, நரகத்திலேயே வீழ்த்தி விட்டாலும் சரி, ஒன்றே ஒன்றை மட்டும் செய்துவிடாதே. அதாவது தமிழின் அருமை அறியாதவர்கள் முன்னிலையில் என்னைப் பாடல் சொல்லும் நிலையில் வைத்து விடாதே!'' என்று இரந்திருக்கிறான் கவிஞன். அவன் பாடிய பாடல் இதுதான்:

**துங்க யானைக்கால்**
**படுத்தினும் படுத்துக,**
**சுடர்விழிப் பகுவாய்ச்**
**சிங்க வாயிடைச்**
**செலுத்தினும் செலுத்துக**
**தென்புலத்தவர் கோமான்**
**வெங்கண் மாநர**
**கந்திடை வீழ்த்தினும்**
**வீழ்த்துக, விடைஏறும்**
**எங்கள் நாயக**
**தமிழ் அறியார்கள் முன்**
**இயம்புதல் தவிர்ப்பாயே**

என்று கதறியிருக்கிறான் கவிஞன். அவ்வளவு மனம் கசந்திருக்கிறான். நான் எலிபெண்டா என்னும் தீவுக்குச் சென்று அங்குள்ள குடைவரைச் சிற்பங்களெல்லாம் சிதைந்து கிடப்பதைக் கண்டபோது இந்தப் பாடல்தான் என் ஞாபகத்துக்கு வந்தது. ஆம். சிற்பக் கலையின் அருமையை அறியாத கசடர்கள் அல்லவா இச் சிற்பச் செல்வங்களைச் சிதைத்திருக்க வேண்டும்? இந்தச் சிற்பங்களை உருவாக்கிய சிற்பி இப்படி உடைந்து கிடப்பதில் ஒன்றை இன்று பார்த்து விட்டானானால், 'இறைவனே! இப்படிக் கலையுணர்வில்லாத ஒரு கூட்டத்தின் கண்ணில் என் சிற்ப வடிவங்களைக் காட்டிவிட்டாயே? இதைத் தவிர்த்திருக்கக் கூடாதா?' என்றுதான் ஏங்கியிருப்பான். ஆம். அத்தனை கோரமாக இங்குள்ள சிலைகள் சிதைக்கப்பட்டிருக்கின்றன, போர்த்துகீசிய சிப்பாய்களால். அப்படி உடைந்து சிதைந்து எஞ்சி நிற்கும் சிற்ப வடிவங்களே அங்குள்ள வடிவங்களின் அழகை விளக்குவதாகும். அப்படி அழகிய சிற்ப வடிவங்கள் நிறைந்துள்ள குடைவரையை உடையது எலிபெண்டா.

எலிபெண்டா பம்பாயை அடுத்த கடலில் பம்பாய்த் துறைமுகத்திலிருந்து நான்கு ஐந்து மைல் தூரத்தில் உள்ள ஒரு தீவு. அங்கு செல்ல அப்போலா பந்தர் துறைமுகத்திலிருந்து 'மோட்டார் லாஞ்சு' விடுகிறார்கள். இந்த லாஞ்சில் ஏறிச் செல்ல மிகவும் அதிகாலையிலேயே அப்போலாபந்தர் துறைமுகம் செல்ல வேணும். இல்லையென்றால் பல அன்பர்கள் சேர்ந்து ஒரு லாஞ்சை ஏற்பாடு பண்ணிக் கொண்டு எந்த நேரமும் செல்லலாம். இப்படிச் சென்றால் தீவின் வடபுறம் நல்ல வசதியான இறங்கு துறைக்கே சென்று சேரலாம். அங்கிருந்து இரண்டு பர்லாங்கு தூரம் கட்டப்பட்டிருக்கும் படிகள் ஏறிக் கடக்க வேண்டும். அப்படிக் கடந்தால் அங்குள்ள பிரபல குடைவரை வாயிலுக்கே வந்து சேருவோம். இந்தப் படிகளில் ஏறக் காலில் வலிவில்லாதவரைத் தூக்கிச் செல்லக் கம்பு வைத்துக் கட்டிய நாற்காலிகளும் கூலிகளும் படகு இறங்கும் துறையிலேயே இருப்பார்கள். அங்குள்ள குடைவரைகளில் நுழையுமுன், இந்தத் தீவுக்கு ஏன் எலிபெண்டா என்ற பெயர் வந்தது என்று விசாரிக்கத் தோன்றும். அந்தக் காலத்தில் அந்தத் தீவில் இறங்கு துறையில் பெரிய கல் யானை ஒன்று இருந்திருக்கிறது. அதன் நீளம் பதின்மூன்று அடி, உயரம் ஏழு அடி. இந்தத் தீவுக்கு வந்த போர்த்துகீசியர் கண்ணில் முதல் முதல் இந்த யானைதான் விழுந்திருக்கிறது. 'அடே, இங்கு ஒரு பெரிய எலிபெண்ட் நிற்கிறதே' என்று வியந்திருக்கிறார்கள். அதனால் இந்தத் தீவையே எலிபெண்டா என்று அழைத்திருக்கின்றனர். அந்தப் பெயரே நிலைத்திருக்கிறது.

எலிபெண்டாவுக்கு இன்று செல்லும் நண்பர்கள் அந்தக் கல் யானையை அங்கு காண முடியாது. இந்த யானையையும் போர்த்துகீசிய சிப்பாய்கள் உடைத்திருக்கின்றனர். அப்படி



மகேசமூர்த்தி



தாண்டவர்

உடைத்த தூண்டுகளை எடுத்து வந்து திரும்பவும் சிமெண்ட் போட்டுக் கட்டி பம்பாய் வேல்ஸ் இளவரசர் காட்சிச் சாலையில் வைத்திருக்கிறார்கள். இந்தப் போர்த்துகீசியர் வருமுன்னே அத்தீவை, அத்தீவில் உள்ள மக்கள் கரபுரி என்றும் ஸ்ரீபுரி என்றும் அழைத்திருக்கிறார்கள். கரபுரி என்றால், கோட்டை நகரம்என்றும் கூறுகிறார்கள். எனக்கென்னவோ இந்த எலிபெண்டாவை அந்தப் பெயருக்கு ஏற்பவே நல்ல தமிழில் கரபுரி என்றே கூறலாம் எனத் தோன்றுகிறது.

இத்தீவில்உள்ள குடைவரைகள் பஞ்சபாண்டவர் காலத்திலேயே ஏற்பட்டது என்பர் சிலர். இங்குதான் அந்தப் பாணுகரனும் அவனது அழகிய மகள் உஷையும் வாழ்ந்திருந்தார்கள் என்றும் கூறுவர். மேலும் உஷை கன்னியாகவே வாழ்ந்தாள் என்றும் அவள் காலத்தில் இந்தத் தீவிலே பொன்மாரி பெய்தது என்றும் அதனாலேயே இத்தீவை ஸ்ரீபுரி என்று அழைத்தனர் என்றும் கர்ண பரம்பரைக் கதையைக் கூறுவர். இன்னும் கிரேக்க மன்னன் அலெக்ஸாண்டருடன் இத்தீவைத் தொடர்புபடுத்தியும் சொல்லுவர். இதற்குச் சரித்திரச் சான்றுகளோ, ஆதாரங்களோ ஒன்றும் இல்லை என்றாலும் ஒரு காலத்தில் இத்தீவு வளமிக்க பிரதேசமாக இருந்திருக்கிறது என்று மட்டும் தெரிகிறது. இன்று விளை பொருள் ஒன்றும் இல்லாமல் வறண்ட பிரதேசமாகத்தான் இருக்கிறது. அங்கு குடியிருப்பவர்கள்கூட அதிகமில்லை. அடர்ந்த காடாக அத்தீவு இருக்கிறது.

நாலரை மைல் சுற்றளவுள்ள இந்தச் சிறிய தீவில் உள்ள குடைவரைகள் ஆறு. பூரணமாக அமைக்கப்பட்ட குடைவரைகள் நாலு. இரண்டு குடைவரைகள் அரை குறையாகவே நிற்கின்றன. இக்குடை வரைகளை எட்டாம் நூற்றாண்டில் குப்தர்கள் காலத்தில் அமைத்திருக்க வேண்டும் என்று சரித்திரப் பேராசிரியர்கள் கருதுகின்றனர். ஆனால் இக்குடைவரைகளில் உள்ள சிற்பங்களைப் பதினேழாம் நூற்றாண்டில் இங்கு வந்து தங்கியிருந்த போர்த்துகீசிய சிப்பாய்கள் உடைத்து எறிந்திருக்கின்றனர். அவர்களுடைய குரூரத்தனத்துக்கும் தப்பி நிற்கும் வடிவங்களே அவற்றின் பெருமையினை இன்றும் நமக்கு நினைவுறுத்தப் போதுமானவை.

இங்குள்ள குடைவரைகளில் முதல் குடைவரைதான் பெரியது. இது தீவின் வடமேற்குப் பாகத்தில் 250 அடி உயரமுள்ள ஒரு குன்றில் இருக்கிறது. இக் குடைவரை கிட்டத்தட்ட 120 அடி சதுர அளவில் இருக்கிறது. குடைவரையைத் தாங்கி நிற்பது போலப் பெரிய பெரிய தூண்களையுமே வெட்டிச் செதுக்கி யிருக்கிறார்கள். இக்குடைவரை மூன்று பகுதியாக இருக்கும். வடக்கே பார்த்த பிரதான வாயிலை அடுத்த பெரிய மண்டபத்தோடு கூடிய பகுதி ஒன்று; அதற்கு வலப்புறமும் இடப்புறமுமாக இருக்கும் பகுதிகள் இரண்டு. மத்திய பிரதான பகுதி. மண்டபத்தை இருபதுக்கு மேற்பட்ட தூண்கள் அலங்கரிக்கின்றன. தூண்கள் அடிப்பாகத்தில் சதுரமாகவும், மேல் பகுதி வட்டமாக வரிவரியாகவும் அதற்கு மேல் குடை விரித்தாற் போன்ற போதிகைகளையும் தாங்கி நிற்கின்றன. இந்தக் குடைவரையின் பிரதான வாயிலில் நுழைந்ததும் அங்கு வலப்புறமுள்ள கற்சுவரில் பிரம்மாண்டமான வடிவில் தாண்டவ வடிவம் ஒன்று இருக்கும். அட்ட மூர்த்தியான சிவனே எட்டுத் திருக்கரங்களோடு ஆடும் பெருமானைப் பத்தடி உயரத்தில் உருவாக்கி யிருக்கிறான். கால் இரண்டும் இன்று பூரணமாகச் சிதைந்துவிட்டன; கைகளும் சிதைந்துதான் இருக்கின்றன.

தாண்டவருக்கு இடப்புறத்தில் பார்வதியும் வலப்புறத்தில் விநாயகரும் உருவாகி யிருக்கிறார்கள். இன்னும் குமரன், பிரமன் மற்றைய தேவர்கள் எல்லோருமே உருவாகி யிருக்கிறார்கள். அத்தனை வடிவங்களும் இன்று சிதைந்தே கிடக்கின்றன. இந்தத் தாண்டவருக்கு எதிர்த் திசையில் உள்ள சுவரில் லகுலீச வடிவினனான சிவன் இருக்கிறார். பத்மாசனம் போட்டு அவர் உட்கார்ந்திருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. ஆனால் இன்று மார்புக்கு மேலுள்ள பாகம் மட்டுமே தெரிகிறது. மற்றவற்றை உடைத்தெறிந்திருக்கிறார்கள். இந்தப் பிரதான குடைவரையின் நடுவில் ஒரு சிறு கோவிலையே உருவாக்கி யிருக்கிறார்கள் சிற்பிகள். அக்கோவில் கருவறையிலே லிங்க வடிவிலே சிவபெருமான் இருக்கிறார். அவரை வலம் வந்து வணங்குவதற்கு வகைசெய்து மண்டபம் அமைத்திருக்கிறார்கள். இந்தப் பிரதான குடைவரையின் தென் கோடியிலே தலைவாயிலுக்கு நேர் எதிரே நடுநாயகமாக இருப்பவர்தான் மகேச மூர்த்தி. இவரையே திரிமூர்த்தி என்றும் அழைக்கின்றனர்.

மூன்று திருமுகத்தோடு மார்பு வரையிலே செதுக்கப்பட்ட வடிவினர் அவர். அவரது உயரம் பதினெட்டு அடி. அன்று கவிச் சக்கரவர்த்தி கம்பன் தனது பாரகாவியமாகிய ராமாயணத்தை இயற்றுமுன் கடவுள் வணக்கம் ஒன்று பாடினான். எல்லாச் சமயவாதிகளும் ஒத்துக் கொள்ளும் வகையில் அவனது கடவுள் வணக்கம் சிறப்பாக அமைந்தது.

உலகம் யாவையும்
தாமுள ஆக்கலும்
நிலை பெறுத்தலும்
நீக்கலும் — நீங்கலா
அலகிலா விளையாட்டு
உடையார் அவர்
தலைவர் அன்னவர்க்கே
சரண் நாங்களே

என்பது அவனது பாட்டு. ஆம். ஆக்கல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழிலையும் செய்பவன் ஒருவனே. அவனே மகேசுவரன். அவனையே வணங்குவோம் என்று பாடியிருக்கிறான் கம்பன். இந்த மூவுருவில் நின்ற மூர்த்தி சிற்ப உலகில் காணக் கிடைக்காத ஓர் அரிய பொருள். அந்த அரியதொரு மூர்த்தி இந்தக் குடை வரையில் பிரதான மூர்த்தியாக எழுந்தருளியிருக்கிறார். இம்மூன்று முகம் கொண்ட பெருமானின் நடுவில் இருக்கும் முகத்திலே சாந்தம் தவழ்கிறது. அதனால் அவரே சிருஷ்டிகர்த்தாவாக இருக்கவேணும். வலப்புறம் உள்ள முகத்தில் புன்னகை மலர்ந்திருக்கிறது. அவரே காத்தல்தொழில்செய்பவரா யிருக்கவேணும். இடப்புறம் உள்ள முகத்தில் ருத்திராம்சம் இருக்கிறது. இம்மூவரும் சேர்ந்த ஒரு மூர்த்தியே மகேசனாக இருக்கிறார். எல்லா வடிவங்களும் சிதைந்து கிடக்கும் இடத்தில் இவர் மாத்திரம் சிதையாதிருப்பதின் ரகசியம் தான் என்னவோ? சிலை உடைக்கும் கலைக் கொலைஞர்கள் மகேசனை அணுக அஞ்சி விட்டார்கள் போலும். இந்த மகேசனுக்கு இரு புறத்திலும் பெரிய பெரிய துவார பாலர்கள் கம்பீரமான வடிவில் நிற்கின்றனர்.

மகேசமூர்த்தியைப் பூரணப் பொலிவுடன் பார்த்தபின் அவருக்கு வலப்புறம் நடந்தால் அர்த்தநாரீசுவர வடிவம் பெரிய வடிவில் செதுக்கப்பட்டிருப்பதைப் பார்க்கலாம். கிட்டத்தட்ட பதினேழு அடி உயரத்தில் உருவாகி யிருக்கும் இவரது வடிவில் இடைக்குக் கீழ் உள்ள பாகம் முழுவதுமே சிதைந்திருக்கிறது. நான்கு திருக்கரங்களோடு ரிஷபத்தின் மேல் அவர் எவ்வளவு ஒயிலாகச் சாய்ந்து கொண்டு நின்றிருக்க வேண்டும் என்பதைச் சிதையாது எஞ்சியுள்ள பாகத்தைக் கொண்டு நிர்ணயிக்கலாம். மகேசமூர்த்தியின் இடப் பக்கத்தில் கங்காதரன் பெரிய வடிவில் உருவாகி யிருக்கிறான். இச்சிற்ப வடிவம் அதிகமாகச் சிதையவில்லை. இந்த வடிவுக்கு மேல் புறம்தான் கலியாணசுந்தரமூர்த்தி கம்பீரமாக உருவாகி யிருக்கிறார். இவரது வலக்கால் முழுவதையுமே காணேம். வலப் பக்கத்தில் பார்வதி நாணிக் கோணும் புது மணப் பெண்ணாக நிற்கிறாள். வான வீதியில் தேவர்கள் கூடி நின்று மலர் மாரி பெய்கின்றனர். இன்னும் இந்தப் பிரதான கோயிலிலே தான் கைலைமலையில் உமையுடன் வீற்றிருக்கும் சிவபெருமானும், அந்தக் கைலை மலையையே பெயர்த்து எடுக்க முனையும் ராவணனும், இன்னும் அந்தகாசுர சம்ஹாரமூர்த்தி முதலியோரும் பெரிய பெரிய வடிவங்களாக உருவாகி யிருக்கின்றனர். இக்குடைவரையிலே மேற்கே ஒரு பகுதியும் கிழக்கே ஒரு பகுதியும் தனியாக உருவாகி யிருக்கின்றன.



அர்த்தநாரி

அங்கெல்லாம் கருவறை என்று ஒன்றையும் உருவாக்கி அதில் சிவலிங்க வடிவினையும் அமைத்து வைத்திருக்கிறார்கள். மேல்புறம் உள்ள பகுதிக்குப் பக்கத்தில் ஒரு சுனை வேறு இருக்கிறது; கீழ்ப்புறம் உள்ள பகுதியிலுள்ள தூண்கள் மிக்க அழகோடு உருவாகி யிருக்கின்றன. இந்தப் பகுதியில்தான் ஒரு பெரிய சிங்கமும் சிலை வடிவில் உருவாகி யிருக்கிறது; அருமையான வேலைப்பாடு உடையதாகவும் இருக்கிறது.

இந்தக் குடைவரையிலிருந்து வெளிவந்து கிழக்கே பார்க்க நடந்தால் இன்னும் இரண்டு குடைவரைகளைக் காண்போம். அவை முன் மண்டபத்துடன் கூடிய குடைவரைகளே; இங்கு தூண்கள் அவ்வளவு அழகாக உருவாகவில்லை, வேறு சிற்ப வடிவங்களும் கிடையா. அதன்பின் தெற்கே பார்க்கத் திரும்பினால் இன்னும் இரண்டு குடைவரைகளைக் காணலாம். அவற்றைப் பற்றியெல்லாம் சிறப்பாகச் சொல்வதற்கு ஒன்றும் இராது. மற்றும் இரண்டு குடைவரைகளைக் காண அடர்ந்த காட்டுக்குள் கிழக்கு நோக்கி ஒரு மைல் போக வேண்டும் என்பர். அவை பூர்த்தியாகாத குடைவரைகள்தாம். ஆதலால் சிரமப்பட்டு நடந்தால் பலன் ஒன்றுமே இராது.

எலிபெண்டா குடைவரைகளையும் அங்குள்ள அற்புத சிற்ப வடிவங்களையும் பார்த்து விட்டுத் திரும்பும்போது நம் உள்ளத்தை ஏதோ ஒன்றும் அழுத்தும்; கண்களில் நீர் கசியும். தெய்வ வடிவங்களை உருவாக்கும் தெய்விகச் சிற்பிகளது கைத் திறனைப் பூரணமாக அனுபவிக்க விடாமல் விக்கிரக விநாசகர்கள் தோன்றியிருக்கிறார்களே என்று ஏங்குவோம். ஏதோ மகம்மதிய மன்னர் ஒரு சிலர்தான் இந்த விக்கிரக விநாசகர்களாக இருந்தார்கள் என்றில்லை. ஏதோ வியாபாரத்துக்கு வந்த இந்தப் போர்த்துகீசியர்கூடப் பொல்லாதவர்களாக இருக்கிறார்களே என்று மனம் வருந்துவோம். கலை உணர்வு இல்லாத காரணத்தால் தானே இத்தகைய அழிவு வேலையில் இறங்கி யிருக்கிறார்கள். அழகுணர்ச்சி மட்டும் படைத்தவர்களாக இருந்திருந்தால் இத்தகைய கொடுமைகளைச் செய்திருப்பார்களா?

# சமைக்கும்போதே இளைப்பாறலாம்

இந்த அற்புத மண்ணெண்ணை அடுப்பு கண்டு பிடிக்கும் வரையில் சமையல் என்றாலே மிகக் கஷ்டமான காரியம் என்று கருதப்பட்டு வந்தது. இப்பொழுது நீங்கள் சமைக்கும்போதே இளைப்பாறலாம். கரி உடைக்கும் கஷ்டமோ அடுப்பூதும் சிரமமோ, கண்ணில் புகை மண்டுதலோ இல்லை. சமையலறையில் புகைக்கரி பிடிக்காது. இந்த அடுப்பு துப்புரவானது, எளிதானது, எளிமையானது.

- தூசி, தும்பு, புகை, சத்தமில்லை
- சிக்கனமும் பாதுகாப்புமுள்ளது
- ஸ்பேர் பாகங்கள் கிடைக்கும்



# காஸ் ஜனதா

மண்ணெண்ணை அடுப்பு

சுவையான சமையல்



சுலபமான சமையல்

தயாரிப்பாளர்கள் :

**தி ஓரியண்டல் மெட்டல் இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிமிடெட்**

77, பௌபஜார் தெரு, கல்கத்தா - 12

---

**ஆபீஸ் ஊழியர் கூறுகிறார்:**

"ராலே சைக்கிள் வாங்கின நாள் முதல் சிறிதும் களைப்பும், சோர்வும் இல்லாமல் போய்ச் சேருகிறேன்.

ஏனென்றால் என்னுடைய ராலே சைக்கிள் அவ்வளவு சுலபமாக ஓடுகிறது."

# ராலே





**சைக்கிள்களில் தலைசிறந்தது**

அதிகரித்த சொகுசுக்கு விட்டாப் ஸாடில் பொருத்துங்கள்



# ஸென்-ராலே

SRC-70A TM

# இதய அமுதம்

## பீதாம்பர் பட்டேல்

கிராமத்துப் பள்ளிக்கூடத்தின் புதுக் கட்டிடத்தைத் திறந்து வைக்கக் கல்வி மந்திரி ஜகதீஷ் பாயி வரப்போகிறார் என்னும் செய்தி கிராமத்தினருக்குத் தெரிந்தபோது அவர்களுக்கு ஏற்பட்ட உற்சாகத்தைச் சொல்லி முடியாது. இதுவரை அந்தக் கிராமத்தில் பெரிய அதிகாரிகளோ, தலைவர்களோ, மந்திரிகளோ கால் எடுத்து வைத்தது கூடக் கிடையாது. எப்படி வருவார்கள்? கிராமம் தான் ஸ்டேஷனிலிருந்து பத்துப் பன்னிரண்டு மைல் தூரத்துக்கப்பால் இருந்ததே! அதோடு வழியில் சிறிய பெரிய வாய்க்கால்கள் வேறு இருந்தன. இவற்றைத் தவிர ஓர் ஆறும் உண்டு. அதில் மழைக்காலமான நான்கு மாதங்களைத் தவிர அதிர்ஷ்டவசமாக நீர் இராது. ஆனால் அந்த ஆற்று மணலில் மோட்டார் போக முடியாது. ஏன் ஜீப்பே கூட மணலில் புதைந்துவிடும்; நகராது.

போக்குவரத்து வசதி இல்லாததால், அந்தக் கிராமம் முன்னேறாமல் பின்தங்கி விட்டது. மழைக்காலத்தில் மேடு-பள்ளம் தெரியாத உளையில் நடந்து போவது கூடச் சிரமம். வழி நெடுகத் தாள முடியாத தொல்லைகளைப் பட்டுக்கொண்டு அப்படிப் பட்ட கிராமத்துக்கு யார் வருவார்கள்?

கிராமத்துத் தலைவர் மிகவும் வற்புறுத்தவே, ஜகதீஷ் பாயி ஒப்புக்கொண்டார். அவரும் மற்ற மந்திரிகளைப் போல் சால்சாப்பு சொல்லிவிடுவார்தான். ஆனால், அவரே அந்த மாவட்ட வாசி. அதோடு அந்த மாவட்டத்தைக் கவனித்துக் கொள்ளும் பொறுப்பும் அவர் தலையில் சுமந்தது. எனவே மக்களின் நிலையை நேரில் கண்டறியவும், குறைகளைக் கேட்டறியவும் அவர் வரும்படியாகிவிட்டது.

கிராமத்துக்குக் கல்வி மந்திரி வருகிறார் என்பதை அறிந்த பஞ்சாயத்துத் தலைவர் வீட்டு வாசல்களையெல்லாம் துப்புரவு செய்வித்தார். தெரு சுத்தம் செய்பவர்களை அதட்டி உருட்டித் தெருவின் மூலை—முடுக்குகளையெல்லாம் கூட்டிச் சுத்தம் செய்யச் சொன்னார். பள்ளி ஆசிரியர்கள் வரவேற்புரை தயாரிப்பதில் முனைந்தனர். மண்டபம் ஜோடிப்பது, விருந்துக்கு ஏற்பாடு செய்வது ஆகியவை பற்றியெல்லாம் கூடப் பெருத்த யோசனை நடந்தது. அந்தக் கிராமத்தில் இதுதான் முதல் நிகழ்ச்சி இது போன்று. எனவே கிராமத்தில் உள்ளவர்கள் அனைவருமே ஆர்வம் காட்டினர். என்ன செய்ய வேண்டும், என்ன செய்ய வேண்டாம் என்பது பற்றியெல்லாம் மக்கள் வெகு நுணுக்கமாகச் சிந்தித்தனர்.

ஜகதீஷ்பாயியை இந்தத் திறப்பு விழாவுக்கு அழைப்பதன் மூலம் தங்களுக்குள்ள கஷ்டநஷ்டங்களைத் தெரிவிக்கவே அவர்கள் விரும்பினர். முக்கியமாக ஸ்டேஷனிலிருந்து கிராமத்துக்கு வரப் பக்கா ரோடு இல்லாததனால், அவர்கள் பாவம்! எத்தனை இன்னல்களுக்கு உள்ளாக நேர்ந்தது! இதனால் அவர்கள் கிராமத்திலிருந்து ஸ்டேஷன் வரைக்கும் நல்ல ரோடாகப் போடப்பட வேண்டும், தங்கள் கஷ்டங்கள் விலகவேண்டும் என்று நினைத்ததில் தவறென்ன? அக்கம் பக்கத்தில் பெரிய சந்தைகளோ ஆஸ்பத்திரிகளோ கிடையாது. மக்கள் ஏதாவது வாங்க வேண்டியிருந்தாலும், யாராவது கடும் நோய்க்கு உள்ளானாலும் சொல்ல முடியாத சிரமங்களை அனுபவித்தனர். சமீபத்தில் சரியான மருத்துவ வசதி கிடைக்காததனால் ஒரு பெண் பிரசவத்தின்போது இறக்கும்படி கூட ஆகி விட்டது அந்தக் கிராமத்தில்.

கல்வி மந்திரி அந்தக் கிராமத்துக்கு வந்தால் அவருக்கு நேரிடையான அனுபவம் ஏற்படக் கூடும், அவர் இந்தக் கிராமத்தைக் கவனிக்கவும் கூடும் என்று எண்ணி அதைச் சார்ந்துள்ள அக்கம் பக்கத்துக் கிராமத்தார்கள் கூடக் கல்வி மந்திரியை வரவேற்கும் ஏற்பாட்டில் முனைந்தார்கள். எத்தனையோ பேர் கோரிக்கை மனுக்கள் கூட எழுதி வைத்துக் கொண்டனர், மந்திரியிடம் சமர்ப்பிப்பதற்காக.

எல்லோரைக் காட்டிலும் கங்கா பாயின் நிலையைக் கேட்க வேண்டியதே யில்லை; ஜகதீஷ்பாயி கிராமத்துக்கு வரப்போகிறார் என்று கேள்விப்பட்டதும் அவள் மகிழ்ச்சிக் கடலிலே மிதந்தாள். தன் பிள்ளையே வெளி நாட்டிலிருந்து திரும்பி வருவது போன்ற எண்ணம் அவளுக்கு. அவள் உள்ளத்திலே அன்பு பெருக்கெடுத்து ஓடியது. பார்ப்பவர்களிடம் எல்லாம் அவள் சொல்லுவாள்: 'அவன் என்னதான் பெரியவனாகி விட்டாலும் என் மடியில் வளர்ந்தவன்தானே? நான் அந்தக் காலத்தில் 'ஜக்கு, ஜக்கு' என்று கூப்பிடுவேன். நான்தான் அவனை வளர்த்து ஆளாக்கினேன். அவன் பிறந்து ஒரு மாதத்துக்குள்ளாக அவன் அம்மா இறந்துவிட்டாள். நான்தான் என் இதயத்து அமுதத்தை ஊட்டி அவனைப் பெரியவனாக்கினேனாக்கும். எனக்கு என் கோவிந்தனும் அவனும் ஒன்றுதான். இரண்டு பேரும் சேர்ந்து என் பாலைக் குடித்தே வளர்ந்து பெரியவர்களாகி யிருக்கிறார்கள்!''

தன் மகனின் முன்னேற்றத்தைக் கண்டு மகிழ்ச்சியுறும் அன்னையின் தோரணையில், 'நீங்கள் எல்லோரும் பார்த்துக்கொண்டே இருங்கள். ஜகதீஷ் என்னை எப்படி அடையாளம் கண்டு கொண்டு பேசுகிறான் என்று?'' என்று கேட்டவள் தனக்குத் தானே, ''அடை

யாளம் கண்டு கொள்ளாமல் இருப்பானா? என் பாலைக் குடித்து வளர்ந்தவனாயிற்றே!'' என்று பதிலும் கூறிக் கொண்டாள்.

அப்புறம் ஜகதீஷின் பால்யப் பருவத்தைப் பற்றிக் கதை கதையாகச் சொன்னாள்.

தன் மகனை மந்திரியாகி விட்டதுபோன்ற மகிழ்ச்சியில், ''அவனைப் பெற்றெடுத்த தாயார் பாவம், அவனை அறையிலேயே விட்டுச் செத்துவிட்டாள். பிறகு நான்தான் பால் கொடுத்து வளர்த்தேன். எனக்குக் கோவிந்தன் எப்படியோ, அப்படியேதான் ஜக்குவும்!'' என்றாள்.

''உங்களுக்குத் தெரியுமோ? 'கங்கா! உனக்கென்ன இவர்கள் இரட்டைக் குழந்தைகளா என்ன?' என்றுகூட எத்தனையோ பேர் கேட்டிருக்கிறார்கள்.''

''ஜனங்கள் மட்டுமா? ஜகதீஷுக்கு அப்பா புருஷோத்தமர் கூடச் சொல்வார்: 'நான் என் மகனைக் கங்கா பாய்க்கே கொடுத்து விட்டேன். இனி அவனை நான் என்னுடைய பிள்ளை என்று எப்படிச் சொல்வது? இனி மேல் அவன் கங்கா பாயின் பிள்ளைதான். அவள் அவனை வளர்த்து ஆளாக்கட்டும். அவன் பெரியவனாகிச் சம்பாதிக்கட்டும். இனி எனக்கென்ன?' ''

கங்கா பாய் ஒவ்வொன்றாக எல்லா விஷயங்களையும் இப்பொழுது நினைவு கூர்ந்தாள். அவள் கண்ணெதிரே சிறுவன் ஜகதீஷின் சித்திரம் உருவாகிக் கொண்டிருந்தது.

ஜகதீஷுக்கு ஐந்து வயதாயிருக்கும்பொழுது கங்காபாயின் கணவர் ராம்சங்கருக்கு வேறு



ஊருக்கு மாற்றல் ஆகி விட்டது. அப்பொழுது அவர் ஜகதீஷை அவன் தந்தை புருஷோத்தமரிடமே ஒப்படைத்து விட்டார்.

இத்தனை நாட்கள் கழித்து அவன் அவளை அடையாளம் கண்டு கொள்வானா? கங்கா பாயின் மனத்தில் ஐயம் எழும். அவள் உள்ளம் பறவை இறக்கைகளை அடித்துக் கொள்வது போல் அடித்துக் கொள்ளும்.

ஒருவேளை அவனுக்குக் குழந்தைப் பருவத்து நினைவே கூட மறந்திருக்கலாம். அவன் அவர்கள் வீட்டில்தான் இருந்தான். அவர்கள் வீட்டில்தான் சாப்பிட்டு வந்தான்; கோவிந்தனுடன் கொம்மாளமும் அடித்து வந்தான். இருவரையும் ஒன்றாகவே படிக்க வைத்தார்கள். பள்ளிப் பிள்ளைகளுக்கெல்லாம் காப்பரிசியும் இனிப்புகளும் வழங்கப்பட்டன. ஆனால் அந்த வருஷம்தான் கங்கா பாயின் கணவரை வேற்றூருக்கு மாற்றிவிட்டார்கள். வேறு வழியின்றி அவன் அங்கிருந்து புறப்பட்டுப் போகும்படியாகி விட்டது.

அப்பொழுது ஜகதீஷ் எத்தனை அழுதுவிட்டான்! எத்தனை பிடிவாதம் பிடித்தான்! தானும் கூட வருவேன் என்று! அவனும் இந்தக் கிழவி கங்காவை மறக்க முடியுமா?

நேரம் போனதில் தாமதம் ஏற்படுவதில்லை. கங்கா பாயின் கணவர் ராம்சங்கர் பள்ளி உபாத்தியாயர். ஆண்டுதோறும் எங்காவது மாற்றிப் போட்டதனால், அவர் ஊர் ஊராகச் சுற்றும்படியாகி விட்டது. எங்கெல்லாமோ சுற்றிவிட்டுக் கடைசியில் அவர் அந்த ஊருக்கே வந்து சேர்ந்தார்; அங்கேயே வேலையிலிருந்து ஓய்வும் பெற்றார். ஓய்வு பெற்ற இரண்டு ஆண்டுகளுக்கெல்லாம் இறந்தும்விட்டார்.

அடிக்கடி ஓர் ஊரிலிருந்து வேற்றூருக்குச் சுற்றிக் கொண்டே இருந்ததால் அவளுக்கு ஜகதீஷின் ஊர் மறந்தேகூடப் போய்விட்டது. ஆனால் கங்கா பாயினால் ஜகதீஷை மறக்கவே முடியவில்லை. எப்படி மறக்க முடியும்? தன் இதயத்து அமுதத்தை அவனுக்குப் புகட்டியவள் அல்லவோ! ஒரு முறை ஜகதீஷின் தந்தை புருஷோத்தமரைக் காண நேர்ந்த பொழுது அவள் ஜகதீஷின் நலனை விசாரிக்கக் கூடச் செய்தாள். அப்பொழுது அவன் ஆங்கிலப் பள்ளியில் படித்துக் கொண்டிருந்தானாம்.

அந்த ஜகதீஷ்தான் இப்பொழுது நன்றாகப் படித்து முன்னுக்கு வந்து கல்வி மந்திரியாகக் கூட வந்திருக்கிறான். தனயனின் முன்னேற்றத்தைக் கண்டு தாய் மகிழ்ச்சியுறுவாளே, அந்த உணர்வு அவளுக்கு ஏற்பட்டது. குஜராத் ராஜ்யத்தின் புது மந்திரிகள் குழுவின் புகைப்படத்தைப் பத்திரிகைகளில் பார்த்தும், அவர்களைப் பற்றிய குறிப்புக்களைப் படிக்கக் கேட்டும் அவள் ஜகதீஷை அடையாளம் கண்டு கொண்டாள். அப்பொழுதே தன் மகன் கோவிந்தனிடம் அவனுக்குக் கடிதம் எழுதுமாறு சொன்னாள். கோவிந்தனோ, ''அவன் பெரிய ஆளாகி விட்டான். நம்மைப் புரிந்துகொள்ளக் கூட மாட்டான். அதோடு இத்தனை வருஷங்களாக அவனுக்கு நாம் கடிதமே எழுதவில்லை. இப்பொழுது எழுதினால் அவன் ஏதோ காரியம் ஆகவேண்டுமென்பதற்காகக் கால், கை பிடிக்கிறான் என்று எண்ணுவான்!'' என்று சொல்லி விட்டான்.

ஜகதீஷ் ஒருவேளை தங்களை அடையாளமே தெரிந்து கொள்ள மாட்டானோ என்ற எண்ணம் கூடக் கங்கா பாய்க்கு உண்டாயிற்று.

ஆனால் இப்பொழுதோ அவன் அவள் வசிக்கும் கிராமத்துக்கே வந்து கொண்டிருக்கிறான். அவனுக்குப் பின்னைக் கொப்பான அவன் அந்தக் கிராமத்துக்கு வருவது, அவள் வீட்டுக்கு வராமல் போவது என்றால் எப்படியிருக்கும்? அவள் உற்சாக மிகுதியில் தடியை ஊன்றிக் கொண்டு கிராமத் தலைவர் வீட்டுக்குப் போனாள். ''தம்பி! ஜகதீஷ் நம் ஊருக்கு வருகிறானாமே! அவரை என் வீட்டுக்கும் அழைக்க விரும்புகிறேன் !'' என்றாள்.

''அதெப்படி முடியும், அம்மா? அவர் நிகழ்ச்சிகள் ஏற்கனவே தீர்மானிக்கப்பட்டவை. இப்படி ஒவ்வொரு வீட்டுக்கும் போவதென்றால் அவர் மற்ற இடங்களுக்கு எப்படிச் சரியான நேரத்தில் போக முடியும்?'' என்றார்.

''அது சரி, தம்பி! என்ன இருந்தாலும் அவன் என் மகன்போல. தாயைப் பார்க்காமல் மகன் போகலாமா?'' — அவள் தனக்கும் ஜகதீஷுக்கும் உள்ள தொடர்பை ஆதியோடு அந்தமாகச் சொன்னாள். தலைவருக்குக் கிழவியின் இந்தப் பிதற்றல்களைக் கேட்கப் பொறுமையும் இல்லை, தேவை யிருப்பதாகவும் தோன்றவில்லை. அதோடு அவருக்கு இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருக்கப் பொழுது எங்கே யிருந்தது? அதனால், ''அம்மா! கூட்டம் முடிந்ததும் நீங்கள் அவரைச் சந்திக்கலாம்!'' என்றார்.

ஆனால் கங்கா பாய்க்கு அவரது அந்தப் பதில் திருப்தியளிக்கவில்லை. ''அதெல்லாம் சரிதான். நான் என் இதயத்து அமுதத்தைப் புகட்டி எவனை வளர்த்தேனோ, அவனுக்கு என் வீட்டில் நுழையக் கூடவா பொழுது இராது?'' என்று கேட்டவள் மிகுந்த நம்பிக்கையுடன், ''நீங்கள் வேண்டுமானால் பாருங்களேன்! ஜக்கு என்னை உடனே அடையாளம் புரிந்து கொள்வான். 'அம்மா, அம்மா!' என்று அழைத்துக் கொண்டு வந்து என்னை அணைத்துக் கொள்வான். அது மட்டுமல்ல; 'அம்மா! வீட்டுக்கு வா, அம்மா! போவோம். பேச வேண்டியதை யெல்லாம் அங்கே போய்ப் பேசிக் கொள்ளுவோம்' என்பான்!'' என்றாள்.

''நீங்களே சொல்லுங்கள். நான் பாலூட்டி வளர்த்த பின்னை என்னை அடையாளம் கண்டு கொள்ளாமல் போவானா? அல்லது என் வீட்டுக்குத்தான் வராமற் போவானா? அவன் நரம்புகளில் நான் புகட்டிய பாலமுதம் அல்லவா ஓடுகிறது!'' என்றும் கூறினாள்.

கங்கா பாய் ஜகதீஷை வரவேற்பதற்கான ஏற்பாடுகளைச் செய்வதில் முனைந்தாள். ஜகதீஷுக்கு என்ன என்ன பிடிக்கும்? — அவள் ஞாபகப்படுத்திக் கொள்ளலானாள். என் அப்பத்துக்கு அவன் குழந்தைப் பருவத்திலிருந்தே சண்டை பிடிப்பானே! கோவிந்தன் கையிலிருப்பதைக்கூட அல்லவா தட்டிப் பறித்துத் தின்பான்! அவனுக்கு என் அப்பம் என்றால் உயிர். பெருந் தலைவனாகி விட்ட அவனுக்கு இப்பொழுதெல்லாம் யார் என் அப்பம் செய்து தின்னக் கொடுக்கப் போகிறார்கள்?



கிழவி கோவிந்தனின் மனைவியைக் கூப்பிட்டு என் அப்பம் செய்யுமாறு சொன்னாள். கோவிந்தன் கிராமத்திலேயே வியாபாரம் செய்து வந்தான். அது நன்றாகவும் நடைபெற்று வந்தது. ஜகதீஷ் வந்தால், அவனுடன் பெருங் கூட்டம் வரும். அவர்களை வரவேற்க ஒரு தேநீர் விருந்து வைத்தால் நன்றா யிருக்கும் என்று அவனும் திட்டம் போட்டான். பழம், புஷ்பம் முதலியவை வாங்கி வருவதற்கும் யோசனை செய்து கொண்டிருந்தான்.

ஆனால் அவ்வூர் விழா நடைபெற இரண்டு நாள் இருக்கும்பொழுதே ஒரு




பேயர்-அக்ரோகெம் லிட்.

# டால்ப்

மூட்டைப் பூச்சிகளை
அதிகத் தீவிரமாய்க்
கொல்லுகிறது.




A »Bayer« PRODUCT

எல்லா ஸ்டோர்களிலும் கிடைக்கும்

விநியோகஸ்தர்கள்: ஜாப்ரே மானேர்ஸ் & கம்பனி லிமிடெட்.

ULKA-GU-5

புது நிகழ்ச்சித் திட்டம் வந்து விட்டது. கல்வி மந்திரி பள்ளிக் கட்டிடத்தைத் திறந்து வைத்ததும் அந்தத் தாலூகாவில் உள்ள இன்னொரு ஊருக்குப் போகப் போவதாகவும், உணவு அங்கேயே கொள்ளப் போவதாகவும் குறிப்பிடப்பட்டிருந்தது. அது மட்டுமல்லாமல், அந்த ஊர் விழாவுக்குக் கொடுக்கப்பட்டிருந்த நேரத்தில்கூட வெட்டு விழுந்திருந்தது. தேநீர் விருந்தில் கலந்து கொள்ளக் கூட அவருக்கு நேரமிராது என்னும் தெரிய வந்தது.

என்ன செய்வது?

கோவிந்தன் தேநீர் விருந்து வைக்கும் யோசனையைக் கைவிட்டான். ஜனங்களுக்கும் இது விஷயத்தில் சற்று வருத்தம்தான். மந்திரி அவர்கள் உணவு வேளையில் தங்குவாரானால், ஏதாவது பேசலாம்; குறைகளைக் கூறலாம் அல்லவா?

ஆனால் கங்காபாய் மட்டும் என் அப்பம் செய்யும் தன் திட்டத்தைக் கைவிடவில்லை. கோவிந்தன்கூட, ''எதற்கு வீணில் சிரமப்படுகிறாய்? ஜகதீஷுக்கு இதற்கெல்லாம் நேரம் கிடைக்காது. அவன் காரில் வரப்போகிறான். திறப்பு விழா முடிந்ததும் முடியாததுமாகத் திரும்பிவிடப் போகிறான்!'' என்று சொல்லிப் பார்த்தான்.

''போனாலும் என்னைப் பார்க்காமல் போக மாட்டான். ஜக்கு என்னை மறந்துவிட்டானாம். ஆனால் அவன் உடலில் ஓடும் இரத்தம் என் பாலைக் குடித்து உருவானது. அது மறக்குமா? அவனாகவே கேட்பான், பார்! 'கங்கை யம்மா! எப்படி இருக்கிறாய்?' என்று.''

கங்காபாய் தானும் கூட இருந்து என் அப்பம் தயார் செய்தாள். அவற்றை ஒரு சிறிய டப்பாவில் விள்ளாமல் விரியாமல் ஒழுங்காக எடுத்து வைத்தாள். 'அவனுக்கு நேரம் கிடைக்காவிட்டால் இந்த டப்பாவையாவது அவன் கையில் கொடுத்துவிடவேண்டும். வீட்டுக்குச் சென்று அவன் அமைதியாக ருசித்துத் தின்னட்டும்!'' என்று மனத்தில் எண்ணிக் கொண்டாள்.

உள்ளத்து உற்சாகத்துக்குச் சொல்லச் சொல் கிடைத்தால் எப்படி இருக்கும்? அந்த உணர்ச்சியுடன், ''நீ வேண்டுமானால் பார்த்துக்கொண்டே இரேன்! என் அப்பத்தைப் பார்த்ததும் அவன் எப்படி சந்தோஷப்படுகிறான் என்று! சின்னப் பையனாக இருந்த பொழுது ஓடி வந்து என்னைக் கட்டிக்கொள்வான். என் அப்பம் செய்து கொடுக்கும்வரை என்னை விடமாட்டான். ஒரே பிடிவாதம் தான் போயேன்!'' என்றாள்.

இதைச் சொல்லும் போது கங்காபாயே ஜகதீஷாகி விட்டாள். அந்தக் காலத்து ஜகதீஷ் வேறு, இந்தக் காலத்து ஜகதீஷ் வேறு என்பதையே மறந்து பேசினாள். இப்பொழுதுள்ள ஜகதீஷோ தலைவன், மந்திரி! ஆனால் அவள் வார்த்தைக்கு வார்த்தை, ''என் ஜக்கு, என் ஜக்கு!'' என்றே சொல்லிக் கொண்டாள்.

அவளுடைய ஜகதீஷ் குறிப்பிட்டபடி கிராமத்துக்கு வரவும் வந்தான்.

கிராமத்தார்கள் பள்ளிக்கூடத்து மைதானத்தில் பெரிய பந்தல் போட்டு மண்டபம்



மனைவி: இன்னுமா டிபன் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறீர்கள்?

கணவன்: ஆமாம்! நீ பக்கத்து வீட்டுப் பங்கஜத்துடன் பேசச் சென்ற போது நான் சாப்பிட்டது காலை டிபன்! இது மாலை டிபன்!

ஜோடித்திருந்தார்கள். கிராமத்தில் உள்ள போர்வைகளை யெல்லாம் கொண்டு வந்து தோரணங்களாகத் தொங்க விட்டிருந்தார்கள். சிலவற்றை விரிப்பாகவும் விரித்திருந்தார்கள். ஒரு பெரிய மேடை அமைத்து அதைச் சுற்றி ஆலவட்டங்களும், இலை வட்டங்களும் கட்டி யிருந்தார்கள். வண்ண வண்ணக் காகிதங்களைக் கொண்டு அழகு செய்திருந்தார்கள். மேடையில் ஜமுக்காளம் விரித்திருந்தார்கள். ஒலிபெருக்கி அடக் காலையிலிருந்தே வந்துவிட்டது. ரிக்கார்டுகள் ஓயாமல் ஒழியாமல் அலறிக் கொண்டிருந்தன.

கல்வி மந்திரியின் கார் வருவதற்கு முன்னால் போலீஸ் இலாகாக் கார் வந்தது. கல்விமந்திரியோடு இரண்டு ஜீப்கள் வந்தன. அவற்றில் மாவட்ட அதிகாரிகள் வந்தனர். அவர்கள் மேடைக்கு வந்ததும் மக்கள் எழுந்து நின்றனர். கிராமத் தலைவர் கதர் மாலை அணிவித்து மந்திரியை வரவேற்றார். மந்திரி அமர்ந்ததும் எல்லோரும் அமர்ந்தனர்.

அப்பொழுது பெண்கள் வரிசையில் எல்லோருக்கும் முன்பாக உட்கார்ந்திருந்தவள் கங்காபாய்தான். அவள் மூக்குக் கண்ணாடி அணிந்து உற்று உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவள் கவனம் பிரார்த்தனைப் பாடலிலோ, அங்கு நடந்த சொற்பொழிவுகளிலோ செல்லவில்லை. அவள் உட்கார்ந்த வண்ணம் தன் ஐந்தே வயதான ஜகதீஷை யும் இப்பொழுது தலைவனாக நிற்கும் ஜகதீஷை யும் மனத்துள் ஒப்பு நோக்கிக் கொண்டிருந்தாள். அவள் கண்கள் பல்லாண்டுகள் முன்பு பார்த்த ஜகதீஷின் பழைய சிறு உருவத்தைத் திரும்பவும் எதிரே கொண்டு வந்து காண முயன்று கொண்டிருந்தன.

ஜகதீஷ் பேசுவதற்காக எழுந்தான். கல்வி, கிராம நலம், பஞ்சாயத்து ஆட்சி முதலியவற்றைப் பற்றி அவன் பிரமாதமாகப் பேசினான். கங்காபாயின் கவனமோ அவன் பேச்சைக் கேட்பதில் செல்லவே இல்லை.

பின்னர் எத்தனையோ பேர் மந்திரியிடம் மனுக்கள் சமர்ப்பித்தனர். அவ்வூருக்கு அளித்த நேரம் முடியும் தறுவாய்க்கு வந்து விட்டது. அதனால் மாவட்ட அதிகாரியின் உத்தரவின் பேரில் வந்தனோபசாரம் கூறப் பட்டது. மாலை போடுபவர்கள் போட்டு வழியனுப்பத் தயாராயினர்.

கங்காபாய்க்குக் கவலையாகப் போய்விட்டது. ஜகதீஷ் எழுந்து புறப்பட்டு விட்டால், அவள் அப்புறம் அவனோடு பேசவே முடியாமற் போய்விடுமே! அதனால் அவள் என் அப்பம் வைத்திருந்த டப்பாவைக் கையில் எடுத்துக்கொண்டு எழுந்தாள். அவள் முன்னே அடி எடுத்து வைக்கவே போலீசார் தடுத்தனர்.

''தம்பி! நான் அவரைப் பார்க்கவேண்டும்!'' என்றாள் கங்கா பாய்.

ஆனால் கங்கா பாயின் பேச்சை அங்கே யார் கேட்டார்கள்?

ஜகதீஷ் பாயி எழுந்து நின்றார். கங்காபாய் போலீசாரை இலட்சியம் செய்யாமல் ஜகதீஷின் எதிரே போய் நின்றாள். அன்னை மகனைப் பார்ப்பது போன்ற உணர்வுடன் அவனைப் பார்த்து, ''தம்பி! என்னைப் புரியவில்லையா உனக்கு?'' என்றாள்.

''இல்லையே, அம்மா! நீங்கள் சொன்னால் புரியலாம்'' என்றார் ஜகதீஷ் பாயி கங்கா பாயைப் பார்த்து.

''என்னைப் புரியவில்லையா? நான் கங்கா பாய். குழந்தைப் பருவத்தில் உன் அம்மா இறந்ததும் நான்தான் உன்னை என்னிடம் வைத்துக் கொண்டு பெரியவனாக்கினேன். என் இதயத்து அமுதத்தைப் புகட்டி வளர்த்தேன். நினைவில்லையா? மறந்து விட்டாயா?'' என்று கேட்டாள் கங்கா பாய்.

''ஆமாம், ஆமாம். கொஞ்சம் கொஞ்சம் நினைவு வருகிறது. பல வருஷங்கள் ஆகி விட்டன அல்லவா?''

ஒருவேளை ஜகதீஷ் இன்னும் ஏதாவது பேசியிருப்பான். ஆனால் கூட வந்தவர்கள் நேரமாகிறது என்று ஞாபகப் படுத்தினார்கள். கங்காபாயைப் பார்த்தும், ''அம்மா! இவருக்கு நேரமாகிறது. இன்னொரு கிராமத்துக் கூட்டத்துக்கு வேறு போயாக வேண்டும்'' என்றார்கள்.

ஆனால் கங்கா பாய் தன் பேச்சை நிறுத்தாமல் தொடர்ந்தாள்: ''தம்பி! நீ சிறு பையனாயிருந்தபொழுது உனக்கு என் அப்பம் என்றால் ரொம்பப் பிடிக்கும். அதனால் உனக்காக வென்று என் அப்பம் தயார் செய்து எடுத்து வந்திருக்கிறேன். இந்தா, எடுத்துக்கொள்!'' என்று கூறி என் அப்ப டப்பாவை ஜகதீஷிடம் நீட்டினாள்.

ஜகதீஷ் இரண்டு கைகளையும் குவித்து, ''மிக்கநன்றி அம்மா! எனக்கு நேரமாகிறது!'' என்று கூறி அந்த டப்பாவைப் பார்த்தும் பார்க்காதவர் போல் நடந்தார். ''மீண்டும் எப்பொழுதாவது இங்கு வர நேர்ந்தால், கட்டாயம் உங்கள் கை அப்பம் சாப்பிடுகிறேன்!'' என்று கூறி அருகில் நின்ற காரில் ஏறிக்கொண்டார்.

கார் புறப்பட்டுவிட்டது. மக்கள்மந்திரி விஜயத்தைப் பற்றிப் பேசலாயினர். சிறுவர்கள் பூவிதழ்களைப் பொறுக்குவதில் முனைந்தனர்.

கங்காபாய் தூசியைக் கிளப்பிய வண்ணம் ஓடிக் கொண்டிருந்த மோட்டார், வெகு தூரம் போகும் வரை பார்த்துக் கொண்டிருந்தாள். மோட்டார் கண்களிலிருந்து மறைந்ததும் அவளுக்கு மயக்கம் வருவது போல் இருந்தது. என் அப்பம் இருந்த டப்பா கை நழுவிக் கீழே விழுந்தது. மூடி திறந்து கொள்ளவே அதிலிருந்த என் அப்பங்கள் மூலைக்கு ஒன்றாய்ச் சிதறின. கண்களை இருட்டிக் கொண்டு வரவே கங்கா பாய் அப்படியே தரையில் சாய்ந்தாள்.

[குஜராத்திக்கதை; தமிழாக்கம்: ரா.

# ஆராயும் வேளையில்



ஆரோக்கிய வாழ்விற்கு ஆகாரம் சம நிலையில் சத்துப் பொருள்கள் கலந்ததாக இருக்க வேண்டும். சூரியன் மார்க் கோதுமைப் பொருள்கள் முழுக் கோதுமையின் நல்ல தன்மைகள் அனைத்தையும்—புரதச் சத்து, கார்போ ஹைட்ரேட்டுகள், A & B வைட்டமின்கள்—கொண்டவை, சுத்தமானவை, சுகாதாரம் மிக்கவை. கையால் தொடப்படாமல், நியூமாடிக் முறையில் அரைக்கப்பட்டு, இயந்திரங்களாலேயே மூடைகளாக்கப்படுகின்றன. பிஸ்கோத்துகள், கேக்குகள், பூரிகள் தயாரிக்க சாலச் சிறந்தவை.

RISING SUN BRAND

## சூரியன் மார்க்

**மைதா, சூஜி, ஆட்டா**

*தயாரிப்பாளர்கள்:*

**செஞ்சுரி பிளவர் மில்ஸ் லிட்.**

330, தம்பு செட்டி தெரு, சென்னை-1

போன்: 21043, 21044 & 21045

தந்தி: "MATHOORAN"



EP-CFM-2, TAM.

# கவிஞர் கமலநாதன்

பீஷ்மன்

புகைப்படத்தில் கமலா அழகொழுகச் சிரித்துக் கொண்டிருந்தாள். அந்தச் சிரிப்பைப் பார்க்கப் பார்க்க நெஞ்சில் துயரம் குமுறிக் கொண்டு வந்தது கவிஞர் கமலநாதனுக்கு.

இத்தனை நாட்களாக அழகும் இளமையும் நெஞ்சை நிறைக்கும் புன்னகையுமாய் அந்த வீட்டில் வளைய வந்துகொண்டிருந்த கமலத்தின் இனிய உருவை இனிமேல் அவர் இந்தப் புகைப்படத்தில் தான் பார்க்க முடியும். அவருடைய கவிதைகளாய், அவை தரும் புகழாய், மகிழ்ச்சியாய் அவரோடு இணைந்து வாழ்ந்து, அவரை மகிழ்வித்துக் கொண்டிருந்த அந்த மானிடப் பெண் இன்று தெய்வப் பெண்ணாக மாறி விட்டிருந்தாள். கற்பனைச் சிறகுகளில் அவரை ஏற்றிக் கொண்டு போய்க் காவிய உலகில் கனவின் இனிமையைச் சுமக்க வைத்தவள், இன்று அவரை மண்ணில் தன்னந்தனியாய்த் தவிக்க விட்டுப் போய்ச் சேர்ந்தாள்.

புகைப்படத்துக்குக் கீழேயிருந்த ஷெல்பில் வரிசை வரிசையாகப் புத்தகங்கள் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. கவிஞர் கமலநாதனின் கவிதைத் தொகுப்புக்கள், காவியங்கள்—இவை மேல் வரிசையில் அடுக்கப்பட்டிருந்தன. நீண்ட அழகிய நளினமான அவளுடைய பூ விரல்களால் அவள் அவற்றை அடுக்கி வைத்த காட்சி அவர் நினைவில் எழுந்தது. அந்த அடுக்குகளிலிருந்து அவரே எதையாவது எடுத்தால்கூட அதை இருந்த இடத்தில் வைக்கா விட்டால் அவளுக்குக் கடும் கோபம் வந்து விடும்.

''ஒரு குரல் கூப்பிட்டு என்னை எடுத்துத் தரச் சொல்லியிருக்கக் கூடாதா....?''—என்று எப்போதாவது அவர் புத்தகக்கட்டைக் குலைத்து விட்டால் அவள் கடிந்து கொள்வாள். இனிமேல் அப்படி அவரை அன்புரிமையுடன் யார் சொல்லப் போகிறார்கள்?

பிரம்பு நாற்காலியில் சாய்ந்து கொண்டிருந்தவர் என்னவோ நினைத்தவாறே எழுந்து போய் மேல் வரிசையிலிருந்து ஒரு புத்தகத்தை எடுத்துவந்து உட்கார்ந்தார்.

புத்தகத்தைப் புரட்டியதும் கிடைத்த பக்கத்தில் 'சோகம்' என்ற கவிதை இருந்தது. தலைப்பைப் பார்த்ததும் ஏளனத்தில் மெல்லிய நகை அவர் முகத்தில் அரும்பியது. அவருடைய அப்போதைய மன நிலையை விளக்க எழுந்த கவிதை வரிகளாய், எப்போதோ எழுதப்பட்டவை அச்சிலே அவர் முன் அப்போது தெரிந்தன.

''தாபம் தணித்திடத் தாரணியெங்கணும்
தாவிச் சுழலுகிறேன்-உடற்றுயிர்த்
தாகம் வளர்க்கிறதே!
சோலை தெரிந்துளச் சோகம் எறிந்திடச்
சுற்றித் திரும்புகிறேன்—ஆயின் எங்கும்
சோகம் ஒலிக்கிறதே!''

கடைசி அடிகளை அவர் உதடுகள் திரும்பத் திரும்ப முணுமுணுத்துக் கொண்டிருந்த அந்த வேளையில் அறைக்கு வெளியே யாரோ அழைக்கும் குரல் கேட்டது.

புத்தகத்தை மூடிவிட்டு, எழுந்து அறைக்கு வெளியே வந்தார். அறையை அடுத்துப் பெரிய கூடம் வெறிச்சென்று விரிந்து கிடந்தது. கூடத்துக்கு வெளியே கதவருகில் நின்று கொண்டிருந்த மனிதர் ''வணக்கம்!'' என்று குரல் கொடுத்தார்.

அந்த மனிதரைப் பார்த்ததுமே கமலநாதனுக்கு என்னவோ போல் ஆகி விட்டது. வந்திருப்பவர் 'செண்பகம்' பத்திரிகையின் ஆசிரியர். அவரிடம் 'விஷய தானம்' கேட்கத்தான் வந்திருப்பார் என்று அவரால் ஊகித்தறிய முடிந்தது.

''வாருங்கள்! வாருங்கள்!'' என்று வலிந்து வரவழைத்துக் கொண்ட புன்னகையுடன் அவரை வரவேற்றார்.

கூடத்தின் நடுவில் ஒரு வட்டமேசையும் அதைச் சுற்றிலும் நான்கு நாற்காலிகளும் கிடந்தன. எதிரெதிராகக் கிடந்த இரண்டு நாற்காலிகளில் அவர்கள் வந்து உட்கார்ந்து கொண்டார்கள்.

''உங்களை நான் கடைசியாகப் பார்த்தது...'' என்று ஏதோ ஆரம்பித்தார் அவர்.

''என் மனைவி இறந்து போன அன்றைக்குத் தான்....!'' என்று அதை முடித்து வைத்தார் கமலநாதன். சொல்லும் போதே அவருக்குத் தொண்டையை அடைத்துக் கொண்டது. கண்களில் நீர்த் திரை விழுந்தது. முகத்தைத் துடைத்துக் கொள்வதைப் போலக் கண்களையும் சேர்த்துத் துடைத்துக் கொண்டார்.

''மூன்று மாதம் இருக்கும் இல்லையா....?''

''மூன்று யுகங்கள் ஆனாற் போல் இருக்கிறது!'' எதிரே அவரைப் பார்த்துக் கொண்டேதான் பேசினார் கமலநாதன்.

அவருடைய நெஞ்சில் கனத்துப் போயிருக்கும் சோகச் சுமையை வந்திருந்தவரால் ஓரளவுக்கு அநுமானிக்க முடிந்தது. அவரை இப்படியே விட்டு வைப்பது நல்லதல்ல என்று அவர் நினைத்தார்.

''மனதை நீங்கள் ரொம்பவும் தளரவிட்டு விட்டீர்கள். உலகத்துக்குத் தத்துவ விளக்கமாய்க் கவிதைகள் வழங்கிய நீங்கள் உங்களுக்கு அவற்றைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டாமா? நேரக் கூடாதது நேர்ந்து விட்டது! இனிமேல் என்ன செய்ய....? இது வரையாவது உங்கள் மனைவி உங்களைக் கவனித்துக் கொண்டிருந்தார்கள். இனிமேல் உங்களை நீங்களேதான் கவனித்துக் கொள்ள வேண்டும். எழுத்தில் உங்கள் முழு கவனத்தையும் செலுத்தினால் ஒரு மாற்றுப் போல் இருக்கும்.''

அவர் பேச்சைக் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்த கமலநாதன் இதைக் கேட்டு விட்டு வாய் விட்டுச் சிரித்தார்.

''ஏன் சிரிக்கிறீர்கள்?''

''என் எழுத்துக்கு உயிர்நாடியே கமலம் தான்! அவள் போய் விட்ட பிறகு நான் எழுதவாவது! வேடிக்கைதான்.''

'செண்பகம்' ஆசிரியருக்குக் கமலநாதனின் பேச்சு வேடிக்கையாக இருந்தது.

''நீங்கள் ரொம்பவும் குழம்பிப் போயிருக்கிறீர்கள். அதனால்தான் இப்படிப் பேசுகிறீர்கள். நான் சொல்வதைக் கேளுங்கள். உங்களுடைய இப்போதைய மன நிலையையே பொருளாக வைத்துக் கவி பாடிக் கொடுங்கள். அற்புதமாக அமைந்து விடும். 'செண்பகம்' அடுத்த இதழில் வெளியிட உபயோகமாக இருக்கும்.''

''பாஸ்கரன்! என்னால் இப்போது ஒன்றுமே செய்ய முடியாது. இப்படிச் சென்ற நாட்களை நினைந்து நெஞ்சுக்குள்ளேயே குமைவதைத் தவிர! இதுதான் எனக்கு நிம்மதி. தயவு செய்து இன்னும் கொஞ்ச நாட்களுக்கு என்னை இப்படியே இருக்க விடுங்கள்.''

பத்திரிகை ஆசிரியருக்கு அவரிடம் ஏன் பேசினோம் என்று ஆகி விட்டது. எவ்வளவோ தெளிவாகச் சிந்தித்துப் பழகியிருந்த மனம் கூடச் சில அதிர்ச்சிகளில் இப்படி ஆகிவிடும் போல் இருக்கிறது என்று மனத்துக்குள் நினைத்துக் கொண்டார்.

''மன்னித்துக் கொள்ளுங்கள், கமலநாதன்! உங்கள் மனத்தை நான் வருத்திவிட்டேன். ஓய்வு எடுத்துக் கொள்ளுங்கள். நான் பிறகு வருகிறேன்!'' என்று கூறி விடை பெற்றார்.

கமலநாதன் அவரையே வெறித்தவண்ணம் அங்கே சற்று நேரம் உட்கார்ந்திருந்தார். அப்புறம் எழுந்து மறுபடியும் தம்முடைய அறையில் போய்க் கமலத்தின் படத்துக்கு எதிரே சாய்வு நாற்காலியில் சாய்ந்தார். இவருடைய மன உளைச்சலைக் கொஞ்சம்கூடச் சட்டை செய்யாமல் கமலம் இன்னும் அங்கே சிரித்துக் கொண்டுதானிருந்தாள்.

'என்ன ஏனம்மா இப்படி வதைக்கிறாய்?' என்று கமலநாதன் அந்தப் படத்திடம் கேட்பது போலப் பரிதாபமாக அதைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

கமலம் அந்த வீட்டில் கால் வைத்த பிறகுதான் கலைமகளின் அருள்நோக்கு அந்த வீட்டுக்குக் கிடைத்தது. அவள் போன பிறகு அதுவும் போக வேண்டியதுதானே....?

அவளை மணப்பதற்கு முன் அவர் வெறும் விஜயராகவனாகத்தான் இருந்தார். உலகம் அவரைத் தமிழாசிரியர் விஜயராகவனாகத்தான் தெரிந்து கொண்டிருந்தது. உலகமாவது...? அந்தப் பேட்டை—அதிலும் பலபேருக்கு அவரைத் தெரிந்து கூட இருக்காது! அதன் பிறகு அவர் 'கமலநாதன்' என்ற பெயரைச் சூட்டிக் கொண்டார். இல்லை. இந்தப் பெயர்கூட அவள் சூட்டியதுதான். அப்புறம்?

இன்று கமலநாதன் என்றால் தமிழ் இரசிக்கும் தமிழர்களிடையே அவரைத் தெரியாதவர் யார்? புகழ் ஏணியின் உச்சிக்கு அவரைத் தூக்கி விட்டு விட்டு, இன்று அவரைப் பிடிக்கவரில் தொங்கும் நிலையில் விட்டு விட்டாளே!

'அவளை எப்படிக் குறைகூற முடியும்? நானும்தான் கொஞ்சம் முட்டாள்தனமாக நடந்து கொண்டு விட்டேன்!'

அவர் கமலநாதனாக மாறிய கதை அது.

கலியாணமாகி மூன்று மாதம்தான் ஆகியிருந்தது. அப்போது இந்த வீடு இல்லை. ஒரு சிறிய வீட்டின் முன் பகுதியில் அவர்கள் குடித்தனம் நடத்து கொண்டிருந்தது. இரண்டே இரண்டு அறைகள்தாம்.

அவர் சாய்வு நாற்காலியில் சாய்ந்து கொண்டு, கால்மாட்டில் உட்கார்ந்து வெற்றிலை மடித்துக் கொடுக்கும் கமலத்தின் அழகை ரசித்துக் கொண்டிருந்தார்.

''நான் ஒன்னு சொல்லுவேன். கேலி பண்ணாமல் கேட்கிறீங்களா?'' என்று மடித்த வெற்றிலையை அவரிடம் கொடுத்துக்கொண்டு குழைந்தாள் கமலம்.

அவள் பேசும் அழகை அவர் ரசித்துக் கொண்டிருந்தார். ''உம், சொல்லு. நீ சொல்றதைக் கேட்கத்தானே இந்தக் கால்கட்டு!''

''பார்த்தீர்களா... சொல்றதுக்கு முந்தியே! நான் ஒன்னும் சொல்லலை போங்க!'' என்று அவள் சிணுங்கினாள்.

''சொல்லு கமலம்....!'' — அவர் குரலின் ஆவலில் அவள் கரைந்து போனாள்.

''இதோ வந்து விட்டேன்!'' என்று சொல்லிக் கொண்டே மகிழ்ச்சித் துள்ளலுடன் போய்ப் பெட்டியிலிருந்து ஒரு நோட்டுப் புத்தகத்தைக் கொணர்ந்து அதில் ஒரு பக்கத்தைத் திறந்து அவரிடம் நீட்டினாள்.

''இதைப் படியுங்களேன்!''

அவர் படித்தார். கருத்தோட்டமும் கவிதையின் சந்தத் தொனியும் பொருந்தி இசையும் அருமையான கவிதை அது.

மனத்துக்குள்ளேயே படித்துக் கொண்டிருந்தவர் அதன் ஓசை நயத்தினால் உந்தப்பட்டு வாய்விட்டே படிக்கத் தொடங்கினார். சொல்லத் தெரியாத பரவசமும் அவர் என்ன சொல்லப்போகிறாரோ என்ற ஆவலுமாய் அவள் அவர் முக பாவத்தையே பார்த்துக்கொண்டிருந்தாள்.

படித்து முடித்துவிட்டு, ''பேஷ்! கமலம்! இது யார் எழுதின பாட்டு?'' என்றார். கவிதையை அவள் ரசித்து எழுதி வைத்திருப்பதாகத்தான் அவர் நினைத்தார்.

''உங்கள் கமலம் எழுதின கவிதை! எப்படி இருக்கு?''

''நிஜம்மாவா?.... நீயா எழுதினாய்....?''

வியப்பின் ஒளியில் அவர் முகம் விகசித்தது. அவள் நாணத்துடன், தலை குனிந்தவாறே ''இதிலே இருக்கிற பாட்டெல்லாம் நான் தான் எழுதி யிருக்கேன்'' என்றாள்.

''கமலம்.... கமலம்....!''

அவள் முகத்தை இரண்டு கைகளாலும் தாங்கிக் கொண்டார் அவர்.

''நான் பாக்கியசாலி!'' அவருக்கு ஒரே மகிழ்ச்சி வெறி. ''நானும்தான்!'' என்றாள் கமலம் அவரது அன்பில் நெகிழ்ந்து போய்.

அந்த நோட்டில் அவள் எழுதி வைத்திருந்த கவிதைகளைப் படித்து முடித்ததும் அவர் நினைத்தார்: 'இது பயிற்சியினால் வரும் வாக்கு அல்ல! அருளினால் அமைந்த வாக்கு!'

அவர் கண்களுக்கு இப்போது கமலம் அழகும் இளமையும் திரண்ட வெறும் மானிடப் பெண்ணாகத் தோன்றவில்லை. தெய்வ அருளில் குளித்தெழுந்த புனித தேவதை போலத்தான் தோன்றினாள். இத்தனை ஆண்டுகளாய்த் தமிழ் பயின்ற காரணத்தால் மட்டும் கவி எழுத முடியுமானால் அவர் காவியங்களே பாடி முடித்திருக்கலாம். ஆனால் சொற்களைக் கோக்கும் வித்தைதானா கவிதை!

''கமலம்! உன் பாடல்களை யெல்லாம் பத்திரிகைகளுக்கு அனுப்பப் போகிறேன்'' என்றார் அவர் ஒரு நாள்.

அப்போது கமலம் பெட்டியில் துணிகளை ஒழுங்காக அடுக்கிக் கொண்டிருந்தாள்.

''ஊம். செய்யுங்களேன். ஆனால் ஒரு சின்ன நிபந்தனை'' என்றாள் அவள்.

''என்ன நிபந்தனையோ...?''

''கவிதை எழுதியவரின் பெயர் என்ன தெரியுமோ?''

''கமலா விஜயராகவன்!'' என்றார் அவர்.

''இல்லை. கமலநாதன்!''

''அப்படியென்றால்...?''

''இந்தக் கமலத்தின் நாதன்!'' என்று சொல்லிவிட்டு அவள் சிரித்தாள்.

''என்ன சொல்லுகிறாய் கமலம்?''

''இந்தக் கவிதைகளை யெல்லாம் நான் உங்களுக்குத்தான் அர்ப்பணம் செய்திருக்கிறேன். என்னை வரித்துக் கொண்டதைப் போல் இவற்றையும் உங்களுடையவையாய் ஏற்றுக்கொள்ளுங்கள். இவற்றைப் பத்திரிகைகளுக்கு அனுப்புவதானால் உங்களுடைய பெயரில்தான் அனுப்ப வேண்டும். இவை உங்கள் எழுத்துக்களாகத்தான் உலகிலே மதிக்கப்பட வேண்டும்!'' — உணர்ச்சிப் பரபரப்புடன் அவருடைய இரண்டு கைகளையும் பிடித்துக்கொண்டு படபடவென்று பேசினாள் அவள்.

''கமல....ம்! இது சுத்தப் பைத்தியக்காரத்தனம்!'' என்று சொல்லிவிட்டார் அவர்.

அவள் கேட்கவில்லை.

தினமும் அவரிடம் இவற்றையே சொல்லிச் சொல்லி அவரிடம் இந்த ஒரு வரத்தையே யாசிப்பது போலக் கெஞ்சினாள். கடைசியில்...

அவள் எழுதிய 'பூவின் இதயம்' என்ற கவிதை முதன் முதலாகக் 'கமலநாதன்' எழுதிய கவிதையாக ஓர் இலக்கிய ஏட்டில் இடம் பெற்றது. அதன் பின்... நாட்கள் ஓடுகையில் தமிழகம் 'கமலநாதன்' என்ற கவிஞரை, அவர் எழுத்துக்களைத் தலை மீது வைத்துக் கொண்டாடத் தொடங்கியது. தமிழாசிரியர் விஜயராகவன் கவிஞர் கமலநாதனாக மதிக்கப்பட்டார்.

ஏராளமான பாராட்டுக்களும் கடிதங்களும் வந்து கொண்டிருந்த ஆரம்ப நாட்களில்கூட அவர் அவளிடம் கூறியிருக்கிறார்:

''கமலா! இந்தப் புகழையெல்லாம் பெற வேண்டிய நீ யாருக்கோ வந்த விருந்தாக எண்ணி ஒதுங்கி விட்டாய். நான் இதை அநியாயமாய்ச் சுமக்கிறேன். இனிமேலும் என்னால் தாங்க முடியாது. நான் உண்மையைச் சொல்லிவிடப் போகிறேன்.''

''பார்த்தீர்களா? உங்கள் புகழ் வேறு, என் புகழ் வேறு? எதற்காக இப்படிப் பேதம் பாராட்டுகிறீர்கள்? என் உடலும் உள்ளமும் மட்டும்தான் உங்களுக்குச் சொந்தமா? என் உயிர் என் சிறுமைகள், என் பெருமைகள் எல்லாமே உங்களுக்குத்தான் சொந்தம். நீங்கள் அவற்றை ஏற்றுக் கொண்டு என்னை முழுமையாக அங்கீகரிப்பதைத்தான் நான் விரும்புகிறேன். என்னை ஏமாற்றி விடாதீர்கள்!'' என்று அவள் நெஞ்சுருகப் பேசி அவரை வென்றுவிட்டாள்.

அப்புறம்...அவள் வளர்ந்து அவர் புகழை வளர்த்தாள். இதோ அதற்குச் சாட்சியாய் ஷெல்பின் மேல் வரிசையில் உள்ள கவிதைத் தொகுப்புகள், காவியங்கள்!

ஆனால் இப்போது அவள் போய்விட்டாளே?



இப்படி ஒரு நிகழ்ச்சி ஏற்படுமென்று யார் எதிர்பார்த்தார்கள்?

எங்கிருந்தோ வந்த விஷக் காய்ச்சல் அவளை இப்படிப் பலிவாங்கி விட்டதே! மரணப் படுக்கையில் படுத்துக் கொண்டு அவள் பேசிய பேச்சுக்கள் இப்போது கேட்கிறதுபோல் அவர் காதருகே ஒலித்தன.

''நான் உங்களுக்கு ஒரு சந்ததியைத் தராமலே போய்ச் சேருகிறேனே என்ற வருத்தம் தான் எனக்கு. இந்தக் கவிதைகள்தான் நமக்குப் பிறந்த குழந்தைகள். நான் போனாலும் கமலநாதன் கவிதைகள் தமிழுக்குக் கிடைக்கணும். நீங்கள் எழுதுங்கள். நிறைய எழுதுங்கள். நான் ஆவியாக நின்று அவற்றைப் படித்து ரசிப்பேன்!''

''ஐயோ நீ பேசியே என்னைக் கொல்லாதே கமலா!'' என்று கதறிவிட்டார் அவர்.

அறையில் அவரையும் அவளையும் தவிர வேறு யாருமே இல்லை. புகழும் செல்வமும் பெருகிய வேளையில் அவரும் அவளும் தனிக் குடித்தனம் நடத்த வேண்டி ஆகிவிட்டது. அவர்களுக்குத் துணையாய் இருந்த அவர் அன்னை காலமாகி விட்டாள். அதன் பின் தான் இப்போதிருக்கும் இந்தப் பங்களாவுக்கு அவர்கள் குடி வந்தார்கள்.

சமையல்காரக் கிழவியொருத்தி, இரண்டு வேலைக்காரர்கள் இவர்களைத் தவிர வேறு சுற்றம் கிடையாது. கமலத்துக்கு அப்பா இருந்தார் என்று பெயர். அவர் இளையாள் மோகத்தில் கமலம் என்றொரு பெண் தமக்கு இருப்பதையே மறந்து போனவர். அவள் கதை முடிந்த அன்று அவரும் வந்து விட்டுப் போனார். யார் வந்தாலென்ன? போனாலென்ன? அவள் இனி வரப்போகிறாளா?

கமலநாதனுக்கு உலகமே வெறுத்துப் போய்விட்டது. ஏற்கனவே நொந்து கிடக்கும் மனத்தை மேலும் புண்படுத்துவதைப்போல் அடிக்கடி வந்து தொந்தரவு செய்தனர் இலக்கிய நண்பர்களும், பத்திரிகை ஆசிரியர்களும்.

''இலக்கிய உலகத்தி லிருந்து நிரந்தரமாக நான் ஓய்வு பெற்றுவிட்டேன்!'' என்று அறிக்கை விட்டால் கூட விடமாட்டார்கள் போலிருக்கிறதே! அவருக்கும் பாட்டெழுத வரும். ஆனால்... அவருக்கே திருப்தி தராத செயல் அது. கமலத்தின் அருள்வாக்காய்க் கனிந்த பாடல்கள் கமலநாதனின் எழுத்துக்களாய் ஜொலித்திருக்கின்றன இத்தனை நாட்களாய். என்னதான் எழுதினாலும் உணர்ச்சி ஒட்டாத செய்யுளாகத்தான் தம்மால் எழுத முடியுமென்று அவருக்குத் தோன்றியது. கமலத்தை இழந்துவிட்டதனால் விளைந்த வெறுமைதான் இப்போது அவரிடத்தில் தேங்கி நின்றது.

கமலத்தின் கதை முடிந்தும் ஆறு மாதங்களாகிவிட்டன. தை பிறந்தது.

வாசலில் கார் வந்து நிற்கும் சத்தம் கேட்டது. சற்றைக்கெல்லாம் 'செண்பகம்' ஆசிரியர் பாஸ்கரன் உள்ளே வந்தார்.

''பத்திரிகைகளுக்குத்தான் எழுத முடியவில்லை. விழாவுக்குக்கூட வரக் கூடாதா?'' என்று கேட்டபடியே வந்தார் அவர்.

அப்போதுதான் கமலநாதனுக்கு அதைப் பற்றிய நினைவு வந்தது. பொங்கலை முன் விட்டு அன்று ஓர் இலக்கியக் கூட்டம் நடப்பதாகவும் தவறாமல் அதில் கலந்து கொள்ள வேண்டும் என்றும் அழைப்பு அனுப்பியிருந்தார் பாஸ்கரன்.

''விழாவுக்கு என் வாழ்த்துக்கள்!''

''இப்படி ஒதுங்க முடியாது. நீங்கள் வந்து தான் ஆகவேண்டும். கூட்டம் ஆரம்பிப்பதற்கு முன்பே உங்களை அழைத்துப் போகத்தான் காரை எடுத்துக் கொண்டு நானே வந்தேன்!''

வந்தவர் வலுக்கட்டாயமாக அவரை விழாவுக்கு அழைத்துச் சென்று விட்டார்.

நகரின் முக்கிய இலக்கிய ஆசிரியர்கள் வந்து நிறைந்திருந்த கூட்டம் அது. அவர்கள் மத்தியில் நடக்கும்போது தாம் ஏதோ திடீரென்று அற்பமாய், சிறியவனாய்ப் போய்விட்டாற் போன்று தோன்றியது அவருக்கு.

வந்திருந்தவர்கள் அவரை வெகுவாக வரவேற்றார்கள். கூட்டத்துக்குத் தலைமை வகித்த பெரியவர் கவியரங்கில் அவர் கட்டாயம் கலந்து கொள்ள வேண்டுமென்று வற்புறுத்தினார். அவருடைய மௌனத்தையே சம்மதமாக ஏற்று அவர்கள் அவர் பெயரையும் பட்டியலில் சேர்த்துவிட்டார்கள்.

''கொஞ்ச காலமாக ஓய்வுபெற்று ஒதுங்கியிருக்கும் கவிஞர் கமலநாதன் இன்று நம்மிடம் வகையாக மாட்டிக் கொண்டுவிட்டார். அவருடைய கவிதையைச் சுவைக்கும் வாய்ப்பும் 'நமக்குக் கிடைக்கவிருக்கிறது'' என்று தலைவர் பேசுகையில் அவர் தம் மனைவியை நினைத்துக் கொண்டார்.

கண்ணெதிரே ஒளிவாகச் சிரித்துக் கொண்டே அவள் நடந்து வருவதுபோலத் தோன்றியது. ''எழுதுங்களேன்!'' என்று அவர் காதருகில் அவள் கிசுகிசுக்கும் குரல் கேட்டது.

என்னவோ தோன்றியது. கையுடன் கொணர்ந்திருந்த குறிப்புப் புத்தகத்தில் மடமடவென்று எதையோ கிறுக்கினார். கிறுக்கி முடித்ததைப் படித்துப் பார்க்கையில் அவர் கண்கள் நீரால் நிரம்பி விட்டன.

'என் இதயத்தை, என் மகிழ்ச்சியை, என் வாழ்வை எல்லாமும் கொண்டு சென்றுவிட்ட நீ என் நினைவுகளை மட்டும் ஏன் எடுத்துச் செல்லவில்லை?'' என்று மனைவியை நோக்கிக் கேட்கும் புலம்பலாகத்தான் அவர் எழுதியிருந்தார். நெஞ்சின் வேதனையைச் சொற்களாய் வடிக்கையில் உணர்ச்சி மயமான கவிதையாய் அது உருவாகி விட்டது.

அக்கவிதையை அன்று அவர் படிக்கையில் அவருக்குக் குரல் கம்மியது. சோகத்தையே பிழிந்தெடுத்த கனிச்சாறாய்க் கவிதை பெருகுகையில் அவர் உருகினார். கூட்டமே உருகிற்று.

பாடி முடித்ததும் ஒரு கணம் சொல்லொணாத சோகக் குமைப்பில் கைதட்டக் கூட மறந்து போய்க் கூட்டமே ஸ்தம்பித்து விட்டது. தலைவர் கமலநாதனைத் தழுவிக் கொண்டார். கரகோஷம் வானைப் பிளந்தது.

கண்களைத் துடைத்துக் கொண்டு கூட்டத்தைப் பார்த்தார் கவிஞர். புன்னகை சிந்தும் முகத்துடன் நளினமான தம் கைகளைக் கொட்டிக் கொண்டு எதிரே கமலம் நிற்பது அவர் கண்களுக்கு மட்டும் தெரிந்தது.

''கவிஞரின் உண்மை இதயக் குரலைக் கவிதையாய்க் கேட்டு உருகினோம்'' என்று தலைவர் பேசிக் கொண்டிருந்தார். கமலநாதன் தம் மனத்துக்குள் சிரித்துக் கொண்டார்.

சிறுகதை

# இழைகின்றன..

## ஸ்ரீவேணுகோபாலன்

இந்தக் கடமை அழைப்பை ஏற்றுக் கொண்டுவிட்டேன். எப்படியும் ஊருக்குப் போய் விட்டு வர வேண்டியது தான்! பிறந்த ஊரைப் பார்க்க யாருக்குத்தான் விருப்பமிராது?

எனினும் எனக்கு இது வரை ஒழிந்ததில்லை! வேலையோ, வெட்டியோ! இட்டமில்லாமல் காலம் ஓடிக் கொண்டிருந்தது. ஊரைப் பார்க்க வேண்டும் என்ற எண்ணமும் அவ்வளவாகத் தலைதூக்கி நின்றதுவுமில்லை.

சுந்தரம்தான் என்னை இந்தப் பிரயாணத்தை மேற்கொள்ளும்படி வற்புறுத்தினார். அவருக்குக் கோவில், குளம் என்றால் ஆசை! சிற்பம், கல்வெட்டு, இலக்கியம் என்று எதையாவது பேசிக் கொண்டே இருப்பார். ஆராய்ச்சிக் கட்டுரைகள் நிறைய எழுதியிருக்கிறார். உத்தியோக வாழ்வில் நாங்கள் சிறிது காலம் சேர்ந்திருந்து விட்டுப் பிரிந்து விட்டோம். அப்போதுதான் அவர் எனக்கு இலக்கியத்தில் சிறிதளவு ஆர்வத்தைப் பெருக்கினார். இப்போது அவர் என் கிராமம் இருக்கும் ஜில்லாவில் உயர்ந்த பதவி வகிக்கிறார். பத்து நாட்கள் லீவு எடுத்துக் கொண்டு வந்தால், பிறந்த ஊரைப் பார்த்தது மாதிரியும் இருக்கும், இலக்கியச் சர்ச்சைகள் நடத்திய மாதிரியும் இருக்கும் என்று எழுதியிருந்தார். நானும் சம்மதித்து விட்டேன்.

தீப்பாய்ந்த அம்மன் கோவிலின் திருப்பம் திரும்பியவுடன், நான்கு பர்லாங் தூரத்தில் எங்கள் ஊர் பளிச்சென்று தெரிந்துவிட்டது. தென்னந் தோப்பும் அதன் இடைவழியே கோவில் மதிலும், கிராமத் தெருவும் சித்திரம் போல் எழுந்து விட்டன. ஆற்றங்கரையும், படித் துறையும், மேல வாய்க்காலும், சவுக்கைத்தோப்பும் கண்களில் குளுமையாய்ப் படர்ந்து விட்டன.

மனத்தில் எத்தகைய நிறைவு! கூடவே, இவ்வளவு காலமாக இந்தப் பக்கம் எட்டிப் பார்க்காமல் இருந்து விட்டோமே யென்று வருத்தம்!

ஊரில் இப்போது யார் யார் இருப்பார்கள்? நினைத்துப் பார்க்க முயன்றேன். மனத்தில் கூட அவர்கள் உருவங்கள் செல்லரித்துவிட்டன. சில உதிரிச் சம்பவங்கள்தான் நினைவின் மேல் தளத்தை நோக்கி வேகமாக வந்து கொண்டிருந்தன.

அக்கரைப் பிள்ளைகளுடன் நான் ஆற்றங் கரையில் சண்டை போட்டது, பொடி ரங்கப்பரிடம் காலண்டர் வாங்கி சந்தோஷப் பட்டது, பெரிய வெள்ளத்தில் ஓடும் தோணிக்குச் சுக்கான் பிடித்தது, தோப்பில் பச்சரிசி மாங்காய்க்காகக் கல்லெறிந்துவிட்டுக் குத்தகைக்காரனைக் கண்டதும் ஓடியது, — யாவும் நினைவுக்கு வந்தன.

இன்னும் வாத்தியார் அப்பு, ஸார்டர் ராமசாமி, கல்யாண குருக்கள், அவர் பெண் சாரதா யாவருமே நினைவுக்கு வந்தார்கள்.

குருக்களைத்தான் நன்றாக ஞாபகம் இருந்தது. தலையை ஆட்டிக் கொண்டே அவர் தினப் பத்திரிகையை உரக்க வாசிப்பார். தம்



பெண் சாரதாவை ''அம்மாமட, அம்மாமட! ஏ'' என்றுதான் அழைப்பார்! இந்தப் பெண் சாரதாவுக்கு எவ்வளவு களை சொட்டும் முகம்! பாவாடையைத் தார்ப் பாய்ச்சிக் கொண்டு ஸ்கிப்பிங் கயிற்றை எவ்வளவு வேகமாகச் சுழற்றுவாள்!

ஒரு சமயம் அவள் மீது நான் சைக்கிளை ஏற்றிவிட்டேன். அப்போதுதான் புதிதாகக் கற்றுக் கொண்டிருந்தேன். மைதானத்தில் சைக்கிள் விட்டுக் கொண்டிருந்தவன், தெரு முனையில் நுழைந்ததும் அவள் குறுக்கே வந்து விட்டாள்.

அவளுக்கு முட்டியில் நல்ல சிராய்ப்பு! பளீரென்று ரத்தம் துளிர்த்து விட்டது. காலைக் கையால் பிடித்துக் கொண்டே எழுந்தாள். என்னை வெறுப்புடன் பார்த்து விட்டுப் பேசாமலேயே போய் விட்டாள்.

அப்போது நான் ஊருக்குப் புதியவன். என்னைப் 'புது அம்பி' என்று கூட அழைப்பார்கள். அந்த ஊரில் பிறந்திருந்த போதிலும் என் தந்தை ரிடையராகி, நிரந்தரமாக அங்கே தங்குவதற்கு வந்தபோதுதான் மீண்டும் காலடி எடுத்து வைத்தேன். இதனால் எனக்குச் சாரதாவிடம் பழக்கம் கிடையாது. எனினும் அவள் பேசாது சென்றது எனக்குச் சிறிது வருத்தத்தை அளித்தது. இவ்வளவுக்கும் அவள் என் வயதுப் பிள்ளைகளோடு அரட்டை யடித்துப் பேசுபவள்தான். கோபத்திலாவது இரண்டு வார்த்தை சொல்லி விட்டுப் போயிருக்கக்கூடாதா என்று தோன்றியது.

அப்போதெல்லாம் எனக்கு என்ன வயது இருக்கப் போகிறது? பதினைந்தோ, பதினாறோதான்! ஊருக்குப் புதிதாக வந்திருந்ததால், நான் எல்லோரிடமும் கலகலப்பாக இருக்க முடியவில்லை. ஊர்ப் பிள்ளைகளின் விளையாட்டுக்களும், அவற்றின் விதிகளும் எனக்குப் பூரணமாகத் தெரியவில்லை. இதனால் அவர்கள் என்னை விளையாட்டில் சேர்த்துக் கொள்ள மாட்டார்கள்! 'உப்புக்குச் சப்பாணி' என்று பெயர் வைத்து எங்கேயாவது நிறுத்தி வைப்பார்கள்.



ஒரு சித்திரா பௌர்ணமி! ஆற்று மணலில் சுவாமியை இறக்கி யிருந்தார்கள். நாங்கள் மணலில் 'கிளியந்தட்டு' விளையாடிக் கொண்டிருந்தோம். நான் நன்றாக ஆடுவதாக நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனால் என்னை ஒரே பிடியில் பிடித்து 'அவுட்'டாக்கி விட்டார்கள். நான் சற்றுத் தள்ளிப் போய் உட்கார்ந்து விட்டேன். அவமானம் பிடுங்கித் தின்றது. என்னைப் பிள்ளைகள் சூழ்ந்து கொண்டார்கள். ''புது அம்பி! புது அம்பிடோய்!'' என்று கோரஸ் பாடி என்னைச் சுற்றிச் சுற்றி வந்தார்கள். எனக்குக் கண்ணீர் தளும்பிவிட்டது.

''டேய், கோபு, நாணு, ராமு!'' என்ற குரல் கேட்டு எல்லோரும் திரும்பிப் பார்த்தார்கள். சாரதா கோபத்தோடு நின்று கொண்டிருந்தாள்.

''ஏன்டா அவனைப் போட்டுக் கேலி பண்ணுகிறீர்கள்? நீங்களெல்லாம் பெரிய சூரங்கள்னு நெனைப்போ?. தொண்டியாட்டத்திலே எல்லோரும் என்கிட்டே 'அவுட்'டாயிட்டு ஓடறதை மறந்து விட்டீர்களா?''

பிள்ளைகள் வாயடைத்துப் போய் நின்றார்கள். அவள் எனக்கு ஆதரவு தந்தது அந்த வயதில் எவ்வளவோ இதமாக இருந்தது. நான் மன நிறைவோடு அவளைப் பார்த்தேன். அவள் எல்லோரையும் விழித்துப் பார்த்துவிட்டுப் போய்விட்டாள்.

இதற்கப்புறமெல்லாம் நான் மற்றவர்களுடன் நன்கு பழக ஆரம்பித்தேன். எல்லோருமே



''நான் ஆஞ்சநேயருக்கு வடை மாலை சாத்தப் போகிறேன்!''

''உன் கணவர்?''

''அவர் மந்திரிக்கு ரூபாய் நோட்டு மாலை சாத்தப் போகிறார்!''

எனக்கு நெருங்கிய நண்பர்கள் ஆகிவிட்டார்கள். ஆனால் சாரதாவுடன் மாத்திரம் நான் பேச்சு வார்த்தை வைத்துக் கொள்ள முடியவில்லை. அவள் பேசவில்லை; நானும் பேசவில்லை.

இதில் நானாவட்டத்தில் எனக்கு ஓர் ஏக்கம்! நானும் மற்றப் பிள்ளைகளைப் போல் பிறந்தது முதல் கிராமத்திலேயே இல்லாமல் போய் விட்டேனே என்று மன வருத்தம்!

சித்திரா பௌர்ணமி அன்று சாரதாவைப் பார்த்ததுதான்! பிறகு அவளை வெளியே காண முடியவில்லை. படிப்பையும் நிறுத்தி விட்டாள். இதன் காரணங்கள் முதலில் எனக்குப் புரியவில்லை. ஆனால் பிறகு அவள் இயற்கையின் எத்தனையோ படிகளில் ஒரு படியிலிருந்து மறு படிக்குத் தாண்டிவிட்டாள் என்று தெரிந்தது.

திருவாதிரை யன்று எங்கள் ஊருக்கு அருகிலுள்ள செப்பறைக் கோவிலில் கூட்டம் நிரம்பி வழிந்தது.

நடராஜரை வணங்கி விட்டு நான் திரும்பியபோது எதிர் வரிசையைக் கண்டு திடுக்கிட்டுவிட்டேன். அங்கே நிற்பவளைச் சாரதா என்று புரிந்து கொள்ளப் பல கணங்களாயின.

நீலத் தாவணி உடுத்தி யிருந்தாள். கைகள் நிறைய வளை கோத்திருந்தாள். நெளிந்த கூந்தலில் பிறை வடிவாய்ப் பூ வளைத்திருந்தாள். நீண்டு உயர்ந்த தாழையாய் மேனி தங்கக் கலசம் போலக் கன்னங்கள் குமிழ்ந்து வளைய, இரு கண்களும் நீலம் கரைந்த கடலாய் அலை வீசிக் கொந்தளிக்க ஒரு தேவதை நிற்பது போல் நின்று கொண்டிருந்தாள்.

என்னால் பார்வையை அகற்ற முடியவில்லை. கூட்டத்தால் தள்ளப்பட்டு அவளும் அவள் தந்தையும், மேலே நகர்ந்தபோது தான் என் பார்வை, சாதாரண கண்புலனின் பார்வையாக மாறிற்று.

நான் கோவிலை விட்டு வெளியே வந்தேன். மனத்தில் நிறைந்தெழும் எண்ணங்கள்! எதற்காகவோ சிரிப்பு பொங்கிப் பொங்கி உதிர்ந்து கொண்டிருந்தது.

என் அந்தரங்கத்தில் ஏதோ கண் விழித்து விட்டது. அதன் அநுபவத்தில் நான் துள்ளிக் குதித்தேன். ''அவள் என்னைப் பார்த்தாள்! அவள் என்னைப் பார்த்தாள்!'' என்னும் நினைவு அமிர்த தாரையாய் என் உள்ளத்தில் பெய்து கொண்டிருந்தது.

இதன் பிறகு குருக்கள் மீதே எனக்கு ஓர் அலாதி மதிப்புப் பிறந்தது. அவர் நிறையப் புத்தகங்கள் வாசித்துப் பொழுது போக்குபவர். அவரிடம் பேசுவதிலும், புத்தகங்கள் தருவித்துக் கொடுப்பதிலும் எனக்கு ஒரு பெருமை ஏற்பட்டு வந்தது.

கனவுகளிலேயே வாழ்க்கை ஓடிக் கொண்டிருந்தது. எனது ஆறுவது பாரப் படிப்பை முடித்துவிட்டேன். இந்தச் சமயத்தில்தான் என் தந்தை ஊரை விட்டுப் பட்டணம் போகவேண்டுமென்ற முடிவைத் திடீரென்று அறிவித்தார். கிராமத்தில் அவருக்குப் பொழுது போகவில்லை. வேலை செய்து கொண்டே இருப்பவருக்கு ஓய்வு ஒரு தண்டனையாகப் பட்டது. பட்டணத்தில் அச்சு யந்திரம் வைத்துத் தொழில் நடத்துவதற்காகப் புறப்பட்டு விட்டார்.

எனக்கு இது பிடிக்கவில்லை. துக்கம்தான் மிகுந்தது. சாரதா இருக்கும் ஊரைவிட்டுப் போகிறோமே என்று மனம் வருத்தமுற்றது. இவ்வளவுக்கும் அவளுடன் நான் பேசியா பழகி யிருக்கிறேன்? நானாகவே என் உள்ளத்துள் வளர்த்துக் கொண்ட நினைப்புத்தானே!

நாங்கள் புறப்படும் தினம் காலை! ஊரில் எல்லோரிடமும் சொல்லிக் கொண்டுவிட்டேன். குருக்கள் உடம்புக்குக் குணமில்லாமல் படுக்கையில் கிடந்தார். அவரிடம் விடைபெற வேண்டி அவரது வீட்டுக்குள் சென்றேன். கால்கள் நடுங்கிக் கொண்டிருந்தன. குருக்களிடம் விடைபெற்றுக் கொண்டு சுற்றி வரப் பார்த்தேன். சாரதாவைக் காணவில்லை. ஏமாற்றத்துடன் வெளி வாயிலை நோக்கி மெள்ள நடந்து கொண்டிருந்தேன்.

அவர் வீட்டு நடையைத் தாண்டும்போது, ''பாலா!'' என்ற குரல் கேட்டுத் திடுக்கிட்டேன். நடை இருளில் சாரதா நின்றுகொண்டிருந்தாள். இளங்காலை ஒளிபோல் கண்களுக்கு இதமாய் அவள் வதனம் கனிந்து கொண்டிருந்தது.

''ஊரை விட்டுப் புறப்பட்டு விட்டாயா?'' என்றாள் அவள்.

நான் பதில் பேசவில்லை.

''ஆளை தென்படமாட்டேனென்கிறாயே! அப்பா ஜுரமாய்க் கிடக்கிறார். முன்னாடியே வந்து பார்த்திருக்கக் கூடாதா?''

எனக்கு நாக் குழறியது. அவள் பேசிவிட்டாள் என்ற நினைவில் இதயம் நெகிழ்ந்து கண்களில் நீர் முட்டிவிட்டது. ''ஆமாம்.... இல்லை!'' என்று கூறிச் சொல் தடுமாறினேன்.

''பட்டணம் போனால் எங்களை மறக்க மாட்டாயே!''

''எப்படி மறக்க முடியும்?'' என்றேன் நான். எனக்குத் தைரியம் வந்துவிட்டது. ஏதாவது பேச வேண்டும் என்ற எண்ணம்




தயாரிப்பாளர்கள்

**பாரத் எலக்ட்ரிகல் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்**

ஏஜண்டுகள்

**தி ஓரியண்டல் மெர்க்கண்டைல் கம்பெனி லிமிடெட்**

கல்கத்தா - பம்பாய் டெல்லி
கான்பூர் சென்னை

# அனைத்திலும் சிறந்தது



**VICCO**

***Vajradanti***

**விக்கோ வஜ்ரடந்தி**

முதன் முதலாக ஆயுர்வேத முறைப்படித் தயாரித்த

**பற்பசையும் பௌடரும்**

பதினெட்டு வகை மூலிகைகளிலிருந்து தயாரிக்கப்பட்டவை. ஈறுகளைக் கெட்டிப் படுத்தி பற்களை உறுதியுடன் இருக்கச் செய்கின்றன. ஒருமுறை உபயோகித்து திருப்தி அடையுங்கள்




**விக்கோ லாபரட்டரிஸ்**
பம்பாய் - 14

சென்னைக்கு ஸ்டாக்கிஸ்டுகள்:
**M/s. ஆர். எல். கவுடர் & கம்பெனி**
59, பந்தர் தெரு, சென்னை-1

எழுந்தது. "கையில் என்ன புத்தகம்?" என்று கேட்டேன்.

"கதைப் புத்தகம்! படிக்கிறாயா?"

"வேண்டாம்! நான்தான் ஊருக்குப் புறப்பட்டுவிட்டேனே!"

"பரவாயில்லை! வைத்துக் கொள்!"

அவள் என் கையில் புத்தகத்தைப் புதைத்து விட்டாள். நான் வெளியே வந்தேன். "என் நினைவுக்காக இது!" என்று அவள் கூறுவது கேட்டுச் சட்டென்று திரும்பினேன். அவள் விழி முழுதும் ஈரம் பாரித்திருந்தது. நிலையைப் பிடித்துக் கொண்டு சிலையாய் அவள் நின்றிருந்தாள். என் உடல் சிலிர்த்தது.

வீட்டுக்கு வந்தேன். பல்வேறு உணர்வுகள் என்னுள் சுழன்று கொண்டிருந்தன. எல்லாவற்றையும் மீறி அழுகை பொங்கி வந்தது.

வாசலில் வண்டி வந்து நின்றது. "வாடா பாலா!" என்று அப்பா தெரித்துக் கொண்டிருந்தார். வேண்டா வெறுப்புடன் வண்டியில் ஏறிக் கொண்டேன். வண்டி நகர்ந்து கொண்டே கிராமத்தை விட்டு விலகிச் சென்றது.

கோவில் மறைந்து விட்டது. தோப்புகளும் மறைந்து விட்டன. கடைசியாகத் தெரிந்த கொத்தாழிக் கோவில் ஆலமரமும் மறைந்து விட்டது. என் கண்களை நீர் மறைத்து விட்டது.

"அப்பா!" என்றேன்.

"என்னடா இப்போ? புறப்பட்டதிலிருந்து அப்படித் தனியாய்த் தவிக்கிறாய்?"

"அடிக்கடி கிராமத்துக்கு வந்து செல்ல வேண்டும் அப்பா!"

"எதற்கு?"

"எனக்குக் கிராமம் பிடித்து விட்டது!"

அப்பா என்னையும் என் கையில் உள்ள புத்தகத்தையும் உற்றுப் பார்த்தார். பிறகு முகத்தைத் திருப்பிக் கொண்டார். அவர் என்னை எங்கே புரிந்து கொண்டிருக்கப் போகிறார்? சாரதா தந்த புத்தகத்தை விரித்தேன். அதில் என் முகத்தை மறைத்துக் கொண்டு கண்ணீர் சிந்தத் தொடங்கினேன்.

சாரதா எங்கள் வண்டியைப் பார்த்துக் கொண்டே நிற்பது போல் ஒரு பிரமை எனக்குத் தட்டியது. கூடவே ஒரு கனவும் என் மனத்துள் விரிய ஆரம்பித்தது. அதில், குருக்கள் பெரிய பணக்காரராகி விடுகிறார். அவர் ஏழ்மை முற்றிலும் மறைந்து விடுகிறது. எங்கள் குடும்பத்துக்கு நிகராக அவரது அந்தஸ்து உயர்ந்து விடுகிறது. அவர் பெண்ணுக்கு என்னைப் பேசி முடிக்க வருகிறார். அப்பாவுக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை. நான் சாரதாவைப் பார்க்கிறேன். தலையிலிருந்து பாதம் வரை தங்கத்திலும் வைரத்திலும் அவள் குளித்திருக்கிறாள். சூரியன் உதித்தாற்போல் அவள் முகம் தெரிகிறது. "என்னை மணந்து கொள்ள இனிமேல் தடையில்லையே!" என்கிறாள். என் மனம் சிலிர்க்கிறது.

கனவு கலைந்து விட்டது. வண்டி என்னை உலுப்பி எழுப்பியவாறு ஓடிக் கொண்டிருந்தது. என் கண்ணீர் புத்தகங்களின் பக்கங்களை நனைத்துக் கொண்டிருந்தது.

அன்று ஊரை விட்டுப் போனதுதான். அதற்குப் பிறகு திரும்பி வரவேயில்லை. சாரதாவின் நினைவு மாத்திரம் வெகு நாட்

கள்வரை என் மனத்தில் உலவிக் கொண்டிருந்தது.

காலத்தில் எல்லாம் கரைந்துவிட்டன. மனத்தில் உள்ள துக்கத்தின் பளுவை அறவே கரைத்து ஒழித்துவிடும் சக்தி காலத்தைத் தவிர வேறு எதனிடம் இருக்கிறது?

இப்போது என் பால்ய வாழ்க்கையே எனக்கு விசித்திரமாகவும், வேடிக்கையாகவும் தோன்றுகிறது. சிறு வயதில் நினைத்த சில நினைவுகளெல்லாம் இப்போது எவ்வளவு பைத்தியக்காரத்தனமாகத் தோன்றுகின்றன?

சாரதாவைப் பற்றி எண்ணும்போதெல்லாம், அப்படி ஒரு பெண்ணை நான் பார்த்தேனு, அவளை மனத்தில் கொண்டேனு என்று எனக்குத் தோன்றுகிறது.

ஒரு ஆண்டா, இரு ஆண்டுகளா? இருபத்தைந்து ஆண்டுகள் ஓடிவிட்டன. இப்போது தான் மீண்டும் ஊருக்குப் போய்க் கொண்டிருக்கிறேன். ஊரில் இப்போது சாரதா இருப்பாளா? இருந்தால் எப்படி இருப்பாள்? நரை விழுந்து நாற்பது பிராயத்தைப் பிடித்திருக்கும் என்னை எப்படி வரவேற்பாள்?

கிராமத்தில் போய் இறங்கினேம். எனக்குப் பழைய நினைவுகளெல்லாம் பொங்கி எழுந்து கொண்டிருந்தன. பழைய ஆலமரம் அப்படியே இருந்தது. சாலையோரத்தில் வேப்ப மரங்கள் அப்படியே யிருந்தன. கோவிலின் மதில் சுவர் பாசிபிடித்து அப்படியே கிடந்தது. வீடுகளில் பல, காரை இடிந்து காணப்பட்டன. அதே குப்பை மேடு, அதே வேலி, அதே நடுக் கிணறு! எல்லாம் அப்படியே தான் இருந்தன.

எனக்குச் சிந்தனை ஓடியது. காலம் என்பது ஓடாமல் அப்படியே இந்தக் கிராமத்தில் நின்றுவிட்டதோ என்று எண்ணினேன்.

நாங்கள் தங்குவதற்குக் கிராமக் கர்ணம் ஒரு வீட்டை ஏற்பாடு செய்து கொடுத்தார். நாங்கள் வசிக்கும் உத்தியோகங்களைப் பற்றிய செய்தி கிராமம் முழுதும் பரவி, பரபரப்பை உண்டாக்கியது. ஊரில் எனக்குத் தெரிந்தவர் ஒருவரும் தென்படவில்லை. இது எனக்கு வியப்பைத் தந்தது. அவர்கள் நகரங்களில் குடியேறி யிருக்க வேண்டும், அல்லது இறந்து போயிருக்க வேண்டும்.

என்னிடம் பேச வந்த ஒரிருவரிடம் சாரதாவைப்பற்றி விசாரித்தேன். ''சாரதாவா?'' என்று கூறி அவர்கள் விழித்தார்கள். சாரதாவும் ஊரை விட்டுப் போயிருக்க வேண்டுமென்று தீர்மானித்து விட்டேன்.

ஊரில் வந்து மூன்று தினங்கள் ஓடிவிட்டன. சுந்தரம் கம்பெனியைப் பற்றி நிறையப் பேசிக் கொண்டிருந்தார். ஆற்று நீரில் காலையிலும், மாலையிலும் அமிழ்ந்து குளித்து ஆனந்தப்பட்டோம். நாங்கள் மணப்படை கோவிலுக்குப் போவது பற்றிப் பேசிக் கொண்டோம்; அந்தக் கோவில் எங்கள் ஊருக்குக் கிழக்கே இரண்டு மைல் தூரத்தில் ஆற்று மணல் வெளியில் இருக்கிறது. ஏதோ பழைய கால ராஜா ஒருவர் படையுடன் வந்து தண்டு இறங்கியிருந்தபோது அங்கே சிவன் கோவிலையும், ராமர் கோவிலையும் பக்கத்தில் பக்கத்தில் கட்டி வைத்து விட்டுப் போய் விட்டார். அந்தக் கோவில்களைப் பற்றித்தான் சுந்தரம் ஆராய்ச்சி செய்ய விரும்பினர். அடுத்த நாள் காலையில் அங்கு போக வேண்டுமென்று சுந்தரம் குறித்து விட்டார்.

மறு நாள் காலை! எங்களுக்கு வழக்கமாக வரும் சிற்றுண்டி வரத் தாமதமாகி விட்டது. என் பிள்ளை — என் பிள்ளை நந்துவை என்னுடன் அழைத்துப் போயிருந்தேன்—இரண்டு தடவைகள் போய்ப் பார்த்தும் சிற்றுண்டி தயாராகவில்லை என்று வந்து விட்டான்.

ஒன்பது மணிக்குத்தான் சிற்றுண்டி வந்தது. நாங்கள் உண்டுவிட்டு வெளியே வந்தோம். சிற்றுண்டிக்காகக் காக வாங்க வழக்கமாக வரும் சிறுவனைக் காணவில்லை. அதற்குப் பதிலாக ஓர் அம்மாள் வந்திருந்தாள். நான் அவளைத் தாண்டிச் சென்றுவிட்டேன். பிறகு ஏதோ ஓர் உணர்ச்சியால் உந்தப்பட்டு அந்த அம்மாளைத் திரும்பிப் பார்த்தேன். எனக்குச் சுரீரென்று நரம்புகளில் உணர்வு ஓடியது.

''நீங்கள் யார்?''

'' நான் சாரதா ! தெரியவில்லையா ?'' அவள் தலையைக் குனிந்து கொண்டாள்.

''சாரதாவா?''

நான் பிரமித்து நின்றேன். அவளை இப்படிச் சந்திப்பேனென்று நினைக்கவே யில்லை. அவள் தோற்றம் எப்படி மாறி விட்டது! தலையில் திட்டுத் திட்டாக நரை விழுந்து விட்டது. நெற்றியெல்லாம் சுருக்கங்கள்! உடம்பு வாடிப் போய்க் குச்சியாகத் தென்பட்டது. கண்கள் ஒட்டி உலர்ந்து அவள் முகத்தை விகாரமாக்கி விட்டன. கிழிசல் புடவை கட்டி

யிருந்தாள். கழுத்திலோ, கையிலோ அணி யொன்றுமில்லை.

''என்னைத் தெரிகிறதா?'' என்றேன் நான்.

''தெரியாமலென்ன? உங்களிடம் பேச வேண்டுமென்று நினைத்தேன். ஆனால் நீங்கள் பெரியவர்கள் என்று நினைத்துப் பேசாமல் இருந்துவிட்டேன். உங்கள் பையன் நந்து விடம் பேசிவிட்டேன். அவனை எனக்கு மிக வும் பிடித்து விட்டது. தினமும் காலையில் பலகாரம் வாங்குவதற்கு வருகிறானே! என்ன அடக்கம்! துளிக்கூடக் கர்வம் இல்லை. என் னிடம் கலகலவென்னப் பேசுகிறான்! இதில் எனக்குத் திருப்தி!'' என்றாள்.

நான் அவளை உற்று நோக்கினேன். என் உள்ளத்தில் இரக்கம் சுரந்து வந்தது.

''என்னை ஏன் 'நீங்கள்' என்று அழைக் கிறாய், சாரதா? 'நீ' என்றே அழை! உனக்கு உரிமை உண்டு. நான் இக் கிராமத்துத் தெரு வில் விளையாடிய சிறுவன்தான்!'' என்றேன்.

இதற்குள் சுந்தரம் இட்டிலிகளுக்கான காசு களை எடுத்துக் கொடுத்தார். அவள் அவை களை வெகு உன்னிப்பாக எண்ணினாள். ''ஒரு நயா பைசா அதிகமாக இருக்கிறதே!'' என்று கூறி, அதை அவரிடம் கொடுத்துவிட்டு மீதியைத் தன் புடவைத் தலைப்பில் இறுக முடிந்து கொண்டாள்.

எனக்கு அழுகை பொங்கி வந்தது. 'சாரதா இப்படியா வாழ்கிறாய்?' என்று நினைவு ஓடியது.

''வாழ்க்கை எப்படி நடக்கிறது சாரதா?''

''வாழ்க்கையா? எப்படியோ நாளை ஓட்டு கிறேன். அப்பா போய் இருபது வருஷங்க ளாகின்றன. நான் ஊரிலே சமையல் வேலை கிட்டுவுக்கு வாழ்க்கைப்பட்டேன். கல்யாண மாகி அந்த வருஷத்திலே அவரும் போய்ச் சேர்ந்தார். இப்போ, குழந்தைகளோடு தனியா யிருக்கிறேன். ஊருக்கு உழைச்சு வாழ்க்கை நடக்கிறது!'' சிறிது நேரத்தில் அவள் பாத்திரத்தையெடுத்துக் கொண்டு 'நான் வருகிறேன்' என்று கிளம்பி விட்டாள்.

இரண்டு நாட்களாகப் பகல் வேளையில் மணப்படை கோவிலுக்குச் சென்று தங்கி வந்தோம். சில சிற்ப உருவங்களைச் சுந்தரம் பலவித கோணங்களில் படம் பிடித்துக் கொண்டார். மண் வெட்டி, தூரிகை, கரிப் பொடி இவைகளைக் கொண்டு கல்வெட்டு ஆராய்ச்சியில் இறங்கினார். எனக்கு அலுக்கத் தொடங்கி விட்டது. நந்துவுக்கு ஒன்றுமே பிடிக்கவில்லை. மறு தினத்திலிருந்து அங்கே வருவதை நிறுத்தி விட்டான். சுந்தரத்தின் ஆராய்ச்சி மண்ணைத் தோண்டுவதிலேயே ஓடிக் கொண்டிருந்தது.

ஒரு நாள் மாலை. அன்று சீக்கிரம் திரும்பி விட்டதால் நான் சாரதாவின் வீட்டுக்குப் போனேன். சாரதாவின் வீட்டுக்குள் நுழைந் ததும் அவள் ஆச்சரியப்பட்டு நின்றாள். ''பெரிய மனிதர்கள் இப்படி வரலாமா?'' என்று கேட்டாள்.

நான் உரிமையுடன் அவள் வீட்டு ரேழி யில் போய்த் தரையில் அமர்ந்து கொண்டேன்.

''உன் வருவாய் உனக்குப் போதுமா, சாரதா!''

''போதுமாவா? ஏதோ வாய்க்கும் கைக் கும் வாழ்க்கை நடக்கிறது. எனக்கு மூன்று பிள்ளைகளும் ஒரு பெண்ணும்!'' என்றாள்.

இந்தச் சமயத்தில் ஒரு பெண் உள்ளே வந்தவள், என்னைக் கண்டு திடுக்கிட்டு நடை யோரத்திலே நிற்பது தெரிந்தது.

''இவள்தான் என் பெண் விசாலா!''

விசாலா மெள்ளத் தயங்கி உள்ளே வந் தாள். அவளுக்குப் பதினைந்து வயதாவது இருக்கும். தாவணி அசைய நலுங்கி உள்ளே வந்து என்னை ஒரு கணம் கவனித்துவிட்டுத் தலையைத் தாழ்த்திக் கொண்டாள்.

நான் அவளை வியப்புடன் பார்த்தேன். பழைய சாரதாவின் அதே பிரதிபிம்பம்தான் அவள். அதே உயரம்! அதே அடர்த்தியான கூந்தல்! அதே இருள் வரைந்த கண்கள்!

''நீ சிறு வயதில் இருந்தது போலவே இருக்கிறாள்!'' என்றேன்.

''என்னவோ!'' என்றவள் மேலே பேசாது தன்பெண்ணைப் பரிதாபத்துடன் கவனித்தாள்.

''படிக்கிறாளா?''

''ஆம்; பாளையங்கோட்டை ஹைஸ்கூலில் படிக்கிறாள். படிப்பில் ஆர்வம். நடந்து போயாவது படிப்பேனென்று படிக்கிறாள்.''

சாரதாவின் பேச்சில் சற்றுப் பெருமை கலந் திருந்தது. இதற்குள் மூன்றுபிள்ளைகள் உள்ளே வந்தார்கள். எல்லோருக்கும் வயது பதினைந் துக்குள்ளிருக்கும். 'என் பிள்ளைகள்' என்று சாரதா அறிமுகப்படுத்தினாள். பிள்ளைகள்

> முதலில் கீழ்ப்படிவதற்குக் கற்றுக் கொள்; ஏவல் தன்னால் வந்து சேரும். முதலில் வேலைக்காரனாவதற்குக் கற்றுக் கொள்; பின்னர் எஜமானனாகும் தகுதி வந்து சேரும்.
>
> — ஸ்வாமி விவேகானந்தர்

சங்கோசப்பட்டுக் கொண்டே நின்றார்கள். ஒருவருக்கும் விசாலத்தின் ஞாபகம் இல்லை.

முடிவாக நான் எழுந்தேன். சாரதாவைப் பார்த்து, "கேட்கிறேன் என்று வருத்தப் படாதே! உனக்கு ஏதாவது உதவி வேண்டுமென்றால் மனம் விட்டுக் கேள். நான் உனக்கு அன்னியன் இல்லை!" என்றேன்.

அவள் யோசித்துக் கொண்டே நின்றாள், தயக்கம் தீராமல். பிறகு, "ஒரு மூணு ரூபாய் இருந்தால் கொடேன்! விசாலாவுக்கு ஸ்பெஷல் பீஸ் கட்டணும். மொத்தம் அஞ்சு ரூபாய்! என்னிடம் இரண்டு ரூபாய் இருக்கிறது" என்றாள்.

"மூன்று ரூபாய்தானா?" கேவலம் மூன்று ரூபாய்கள்தானா? அவளது இச்சைகளில் கூடவா தரித்திரம் தோன்ற வேண்டும்?

"இந்தா, சாரதா!" நான் ஐந்து ரூபாய் நோட்டைக் கொடுத்தேன்.

"சில்லறை இல்லையே!"

"பரவாயில்லை!"

வெளியே விரைந்து வந்து விட்டேன். கண்களிலிருந்து நீர் பொல பொலவென்று உதிர்ந்தது. ஊரின் தெருவைக் கிழக்கிலிருந்து மேற்கு வரை நோக்கினேன். "என்ன கிராமம்! என்ன வாழ்க்கை! விருப்பங்கள், லட்சியங்கள், ஆசைகள், இவற்றில் கூடத் தரித்திரத்தை வளர்த்திருக்கிறது!"

இருப்பிடம் வந்தேன். சுந்தரம் புதையலைக் கண்டாற் போல் கூவினார்:

"கோலாட்டக் கலை அந்த நாளிலேயே இருந்தது என்பதை நிரூபிக்கக் கல்வெட்டு ஒன்றைக் கண்டுபிடித்து விட்டேன்." அப்பொழுதிருந்த மன நிலையில் அவர் கூறியதை என் செவிகள் ஏற்கவில்லை.

**கி**டைசியாகப் புறப்படும் தினம் வந்தது. வாயிலில் தயாராகக் காத்து நின்ற வண்டி புறப்பட்டது. சாலை வழியே நகர்ந்து, நகர்ந்து கிராமத்தைத் தவிர்த்து ஓடுவது போல் ஓடியது. அதே ஆலமரம்! அதே கோவில் மதில்! அதே மேல வாய்க்கால்! அழகாகத்தான் இருக்கிறது. ஆனால்...

சாரதா என் கண் முன்னால் நின்றாள். அவளது எளிய தோற்றம் என்னைத் துன்புறுத்தியது. "பெரிய மனிதர் நீங்கள்!" என்று அவள் என்னைப் பார்த்துக் கூறியது, ஒரு அணாவுக்கு இரண்டு பெரிய இட்லிகளை விற்றது, ஒரு நயாபைசா அதிகமாகக் கொடுத்து விட்டோமென்று அதைத் திருப்பித் தந்தது, "ஒரு மூணு ரூபாய் கொடேன்" என்று கூறித் திகிலோடு என்னைப் பார்த்தது, யாவுமே நினைவில் தோன்றி என் கண்களில் நீரை வருவித்தன.

சுந்தரம் என் நினைவுகளைக் கலைத்தார். கோலாட்டத்தைத் தவிர இன்னும் அநேக விளையாட்டுக்கள் அந்த நாளில் கிராமத்தில் புழங்கின என்றும் அவை நாளா வட்டத்தில் அழிந்து விட்டன என்றும் கூறினார்.

"உண்மை! கிராமத்தில் பழமையிலுள்ள நல்லவை அழிந்து விட்டன. புதியதிலுள்ள நல்லவை புகா திருந்து விட்டன" என்றேன்.

சுந்தரம் நான் கூறியதைக் கேட்டுக்கொண்டதாகத் தெரியவில்லை. அவர் மனம் இறந்த காலத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந்தது. என் மனமோ எதிர்காலத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந்தது.

"அடுத்த வருடம் கல்லூரியில் சேரும் போது சரித்திரப் பாடம் எடுத்துக்கொள்!" என்று நந்துவிடம் கூறிக்கொண்டிருந்தார் சுந்தரம். நான் நந்துவைக் கவனித்தேன். அவன் கழுத்தை நீட்டிக் கிராமத்தையே நோக்கிக் கொண்டிருந்தான். கிராமம் புள்ளியாகக் கரைந்து மறைந்து கொண்டிருந்தது.

சட்டென்று அவன் திரும்பி, "அப்பா!" என்றழைத்தான்.

"என்னடா?" என்றேன் வெறுப்புடன்.

"அடிக்கடி கிராமத்துக்கு வந்து செல்ல வேண்டுமப்பா!"

"எதற்கு?"

"எனக்குக் கிராமம் பிடித்து விட்டது!"

நான் அவன் முகத்தில் படர்ந்த துக்கத்தைக் கவனித்து விட்டேன். உடன் என் நினைப்புக்களில் பரபரப்பு ஏற்பட்டது. "அது என்னடா, கையில் புத்தகம்?"

"கதைப் புத்தகம்!"

"ஏது?"

"விசாலா கொடுத்தாளப்பா! நீங்கள் கோவிலுக்குப் போன நாட்களில் எனக்குப் பொழுது போவதற்கு அவள்தான் நிறையப் புத்தகங்கள் கொடுத்தாள்! அவளுக்கு எவ்வளவு தாராள மனம்! இது புதுப் புத்தகம்! அவளே பாதிதான் படித்திருக்கிறாள்! இதைக் கூட 'நீயே வைத்துக்கொள்' என்று கொடுத்து விட்டாளப்பா!"

நான் திடுக்கிட்டேன். அவன் முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டான். கண்களை எனக்குத் தெரியாமல் துடைத்துக் கொண்டான். என் எண்ணங்கள் சிலிர்த்தன. எத்தகைய ஒற்றுமை! நான் பட்ட அவஸ்தைகளை இவனும் படுகிறானா?

நான் அவனை உற்று நோக்கினேன். விரித்த புத்தகத்துள் அவன் முகத்தைப் புதைத்துக் கொண்டான். இப்போது அவன் கண்களில் நீர் உருண்டு கொண்டிருக்கும். என் பால்யக் கனவுபோல் அவன் மனத்திலும் ஒரு கனவு விரிந்து கொண்டிருக்கும். விசாலா அதில் தோன்றி நிற்பாள். அவள் படிப்பில் முன்னேறுவாள், கல்லூரிப் படிப்பில் முதலாவதாக நிற்பாள். புகழ் மாலையும் அரசாங்கப் பண உதவியும் குவியும். அவள் அந்தஸ்து உயர்ந்து விடும், தற்கால யுவதியை விட வனப்பு மிகுந்தவளாய் நிற்பாள். 'இனி நாம் இருவர் வாழ்வும் ஒன்றாக வேண்டியதுதானே?" என்று அவனை நோக்கிக் கேட்பாள்.

கனவுகள் இணைகின்றன!

வண்டி ஓடிக்கொண்டே யிருந்தது!

Printed & Published by R Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon